# வர்ணாசிரமக் காவலர்களின் தீண்டாமை ஒழிப்பு

**ம.ஆறுமுகம் (பெல்)**

# அணிந்துரை

இது ஒரு சிறு வெளியீடு சிற்றுளிபோல. இந்துமத வர்ணாசிரமப் பாறையைப் பிளந்து தூள்தூளாக்கும் வல்லமையுடன் வடித்துத் தரப்பட்டுள்ள நூல். பொய் ஒன்றைத் திரும்பத் திரும்பக் கூறச்செய்து மெய்போல ஆக்கிடலாம் என முயலும் பிற்போக்குத் தனமான இந்துமதப் பாதுகாவலர்களின் முகத்திரையைக் கிழித்து அவர்களை அம்மணப்படுத்தும் அற்புத வெளியீடு. திருச்சித் தோழர் பெல் ம.ஆறுமுகம் எழுதியுள்ளார். அவர் வாழும் இடங்களில் பிற்போக்காளர் எடுத்திடும் நடவடிக்கைகளுக்கெல்லாம் எதிர் வினையாற்றிடும் அற்புதமான ஆற்றலுள்ள போர் வீரர். அவருடைய ஆக்கங்கள் அச்சில் வருவது முன்பே நிகழ்ந்ததுதான். அந்த வகையில் படைக்கலன்களின் பட்டறையில் இதுவும் இணைகிறது. பாராட்டுக்கள்.

மனிதனை மனிதன் தொடக்கூடாது என்ற கட்டுப்பாடு விதிக்கும் மதம் உலகிலேயே இந்துமதம்தான். அப்படியிருக்க இந்துமத நூல்களில் தீண்டாமை குறிக்கப்படவில்லையெனச் சுயநலமிகள் கூறுவதை இடித்துத் தரைமட்டமாக்கியுள்ளார். இதில் வாதத் திறமையுள்ள தேர்ந்த வழக்குரைஞர் கூடத் தோற்றுப் போகும் வகையில் மிக நேர்த்தியாகப் பல தரவுகளின் அடிப்படையில் தமது வாதங்களை அடுக்கடுக்காக தெரிவித்துத் தனித்து மிளிர்கிறார்.

தீண்டாமை பாவம் & கடவுளுக்கும் மனித குலத்திற்கும் எதிரானது என காந்தியார் கூறியதாக இந்திய நாட்டின் உள்நாட்டுக் கடித உறையில் அச்சிட்டனர் அய்ம்பது ஆண்டுகளுக்கு முன்னே! கடவுளே உண்டாக்கின நால்வருணக் கொடுமையால் உருவானது தீண்டாமை எனும்போது கடவுளும் உடந்தைதானே?

பாவம் செய்தது கடவுளும்தானே? அதனால்தானே இன்னமும் இந்தியாவில் தீண்டாமைக் கொடுமைகள்? கூடாது இக்கொடுமைகள் எனக் கூறக் காணோமே இந்து மதத்துக்கு வக்காலத்துப் போட்டு சப்பைக் கட்டுக் கட்டுபவர்கள்?

இந்தக் கேள்விகள் அனைவர் மனத்திலும் பொறியாகக் கிளப்பிடும் வகையில் வெளிவந்துள்ள இந்நூல் அனைவர் இடையேயும்

பரவலாகப் பரப்பப்பட வேண்டும். அனைவரும் வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டும்.

இப்பொறி பெருந்தீயாகப் பரவி தீண்டாமைக் கொடுமைகளைச் சுட்டெரித்திட வேண்டும் என்பது எனது ஆசை. மானமிகு பெல் ம. ஆறுமுகம் இத்தகைய தீக்கங்குகளை அவ்வப்பொழுது எறிந்து கொண்டே இருக்க வேண்டும். நூல்கள் எழுதிக் கொண்டே இருக்க வேண்டும்.

தோழமையுடன்

சு. அறிவுக்கரசு

செயலவைத் தலைவர்,

திராவிடர் கழகம்

# என்னுரை

நம் புண்ணியத் திருநாட்டின் தெருக்களில் ஆடு நடக்கலாம், மாடு நடக்கலாம், பன்றி, நாய், பூனை யாவும் தாராளமாய் நடக்கலாம். ஆனால் ஆறறிவு படைத்த மனிதன் நடக்கக் கூடாது என்கின்ற கொடுமை இன்று நேற்றல்ல; ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் நடந்துகொண்டே இருக்கிறது. நாகரிகமற்ற காலத்தில்தான் அது நடந்தது என்றால் நாகரிகத்தின் உச்சத்தில் இருக்கும் இக்காலக்கட்டத்திலும் நடந்துகொண்டுதான் இருக்கிறது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணியும், ஒவ்வொரு நிமிடமும், ஒவ்வொரு நொடியும் நம் நாட்டில் தீண்டாமைக் கொடுமைகள் நடந்துகொண்டுதான் இருக்கின்றன.

வேறு எங்கும் இல்லாத தீண்டாமை நம் நாட்டில் மட்டும் நடக்கிறதே, வேறு எந்த மதத்திலும் இல்லாத கொடுமை இந்து மதத்தில் மட்டும் இருக்கிறதே என்று யாரும் வெட்கப்பட்டதாகத் தெரியவில்லை. அதைத் தவறு என்றும் உணர்வதாகத் தெரியவில்லை. தவறு என்று சொல்பவர்கூட மனதாரச் சொல்வதாகத் தெரியவில்லை.

எந்த மக்கள் அக்கொடுமைகளுக்கு ஆளானார்களோ அம் மக்களை ஏமாற்றுகின்ற வகையிலேயே மேலும் மேலும் பேசிக்கொண்டு வருகிறார்கள். இதற்கெல்லாம் காரணம் இந்துமதம்தான் என்பதை ஒப்புக் கொள்ள மறுக்கிறார்கள். ஒரு நோய்க்குக் காரணம் இன்ன கிருமிதான் எனபதை ஒத்துக் கொண்டால்தானே அக்கிருமியை ஒழிக்க நடவடிக்கை எடுக்க முடியும்? அதனை ஒத்துக் கொள்ளாவிட்டால் அக்கிருமி ஒழிக்கப்படாமல் நோய் மேலும் மேலும் பரவிக் கொண்டுதானே இருக்கும்?

தீண்டாமைக்கு இந்து மதம்தான் காரணம் என்பதை ஒத்துக் கொண்டால்தானே அதனை ஒழிப்பதற்கும் அவர்கள் முன் வருவார்கள்? அதுதானே உண்மையான தீண்டாமை ஒழிப்பாக இருக்க முடியும்?

தீண்டாமைக்கு இந்து மதத்தில் ஆதாரமில்லை எனச் சொல்லி விட்டால் தீண்டாமை ஒழிந்து விடுமா? இதனை இந்து மதத்தைக் காப்பாற்றுவதற்காகப் புறப்பட்ட புண்ணியவான்கள் செய்துகொண்டே

இருக்கிறார்கள். நான் பணியாற்றும் நிறுவனத்தில் இந்துமத அமைப்புக்கள் இதுபோன்ற ஏமாற்று வேலையை அடிக்கடி செய்து வருவார்கள். அவ்வப்பொழுது அதற்கு நாம் பதிலடி கொடுத்தாலும் அதனை அறிவுப் பூர்வமாக மறுக்காமல் மீண்டும் மீண்டும் அதனை சொல்லிக்கொண்டே வருவார்கள்.

அப்படித்தான் தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களிலோ புனித நூல்களிலோ ஆதாரம் இல்லை என திரு. இராம கோபாலன் அவர்கள் சொன்னதாக பத்து ஆண்டுகளுக்கு முன்னாலேயே இந்து முன்னணியைச் சேர்ந்தவர்கள் துண்டறிக்கை வெளியிட்டார்கள். அதனை மறுத்து இந்துமத சாஸ்திரங்களில் தீண்டாமைக்கான ஆதாரங்களை அப்பொழுதே நாங்கள் வெளியிட்டோம். அதற்கான மறுப்பை அவர்கள் இதுவரையிலும் வெளியிடவில்லை.

அதனை மறுக்காமலேயே மீண்டும் மீண்டும் அதேபோல ஒரு துண்டறிக்கைகளை அவர்களது தொழிற்சங்கத்தின் பேரால் வெளியிட்டார்கள். 2017ம் ஆண்டு ஏப்ரல் மாதம் பிஎம்எஸ் நியூஸ் என்ற செய்தி இதழினை அம்பேத்கர் ஜெயந்தி சிறப்பிதழ் என்று சொல்லி வெளியிட்டுள்ளார்கள். அதிலேயும் தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் இடமில்லை என்றும் சாமியார்கள் சங்கராச்சாரியார்கள் எல்லாம் சேர்ந்து இந்து மத சாஸ்திரங்களில் தீண்டாமைக்கு இடமில்லை என்று தீர்மானம் நிறைவேற்றிவிட்டதாகவும் அதனால் தீண்டாமை ஒழிந்து விட்டதாகவும் கதை விட்டிருக்கிறார்கள்.

அதற்கெல்லாம் நாம் பதிலடி கொடுத்தாலும் அதனை அறிவுப் பூர்வமாகவோ ஆதாரப்பூர்வமாகவோ மறுத்துப் பேசாமல் சொன்ன பொய்யை மறுபடியும் மறுபடியும் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள்.

2012ம் ஆண்டு இந்துத்துவா கும்பலின் நச்சு விதைக்கு பதிலடி என்ற தலைப்பில் ஒரு புத்தகம் வெளியிட்டோம். அது அனைவர் மத்தியிலும் நல்ல வரவேற்பைப் பெற்றது. திராவிடர் கழகத் துணைத்தலைவர் மானமிகு கவிஞர். கலி.பூங்குன்றன் அவர்கள் அதற்கு அணிந்துரை தந்து ஊக்குவித்தார்கள். திராவிடர் கழக செயலவைத் தலைவர் மானமிகு அறிவுக்கரசு அவர்கள் அதனை வெளியிட்டு நம்மை மேலும் ஊக்குவித்தார்கள்.

தற்பொழுதும் இந்து மதக் காவலர்கள் சொன்ன பொய்யையே மீண்டும் மீண்டும் சொல்லி வருவதால் பழைய தொகுப்புகளை மீண்டும் தேடி எடுத்து தற்போதுள்ள நிகழ்வுகளையும் அத்துடன் இணைத்து புத்தகமாக வெளியிடத் துணிவு பெற்றோம்.

இதற்கு அய்யா அறிவுக்கரசு அவர்களிடம் அணிந்துரை எழுதித்தரக் கேட்டவுடன் மனமுவந்து தன்னுடைய வேலைப்பளுவை யெல்லாம் ஒதுக்கி வைத்து அணிந்துரை வழங்கியதுடன் மேலும் என்னுடைய எழுத்துப் பணிக்கு ஊக்குவிக்கும் வகையில் கருத்துக்களைத் தெரிவித்துள்ளார்கள்.

எனவே, இத்தகைய பணிகளுக்கு என்னை ஊக்குவித்து வரும் அய்யா கலி.பூங்குன்றன் அவர்களுக்கும், அய்யா அறிவுக்கரசு அவர்களுக்கும் நான் என்றென்றும் நன்றிக் கடன் பட்டவனாகின்றேன்.

எப்பொழுதும் உங்கள் அனைவருடைய ஒத்துழைப்பையும் நாடுகிறேன். அனைவரும் இதனை வாங்கிப் படித்து மற்றவர்களையும் படிக்கச் செய்து இந்நாட்டில் நிலவும் தீண்டாமையை ஒழித்துக்கட்ட முன்வருமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

என்றும் நட்புடன்

பெல் ம. ஆறுமுகம்

# பொருளடக்கம்

## 1. கொடுமையிலும் மிகப் பெரிய கொடுமை

“உலகத்திலுள்ள கொடுமைகள் எல்லாவற்றிலும் இந்தியாவில் மக்களை மக்கள் தீண்டாமை என்கிற இழிவு சம்மந்தமாகச் செய்து வரும் கொடுமையே மிகப்பெரியதாகும். அதற்குச் சமமாக வேறு எந்தக் கொடுமையையும் கூற முடியாது. இது எல்லா மக்களாலும் சமூக இயல்வாதிகளாலும் ஒப்புக் கொள்ளப்பட்ட விசயமாகும். ஆனால் அத்தீண்டாமையை ஒழிக்க உருப்படியான வழியில் எந்தவொரு முயற்சியையும் இதுவரை யாரும் செய்யாமலேயே வெறும் வாய்ப்பந்தல் போட்டு மக்களை ஏமாற்றி காலங் கழித்து வருகின்றனர்” என்றார் அறிவுலக ஆசான் தந்தை பெரியார்.

உலகின் பல்வேறு நாடுகளிலும் அடிமைத்தனங்கள் நிலவி வருவது உண்மையென்றாலும் இந்தப் புண்ணிய (?) பாரதபூமியில்தான் மனிதனை மனிதன் தொட்டால் தீட்டு பார்த்தால் பாவம், நிழல் பட்டால் தோஷம் என்ற நிலை நிலவுகிறது.

ஆடு, மாடு, நாய் பன்றி யாவும் நடமாடும் வீதிகளில் ஆறறிவு படைத்த மனிதன் நடக்கவே கூடாது என்ற நிலை இந்த நாட்டிலன்றி வேறு எங்கும் காண முடியாது. இந்த விலங்குகளெல்லாம் இறங்கி நீந்தும் நீர்நிலைகளில் தாகத்திற்குத் தண்ணீர் அருந்தக்கூட அனுமதி மறுக்கப்பட்ட மக்கள் கூட்டம் இந்த நாட்டில்தான் உண்டு.

மலத்தை ஒரு மனிதன் மிதித்துவிட்டால் மலம் பட்ட இடத்தை மட்டும் கழுவினால் போதும். ஆனால் ஒரு மனிதனை இன்னொரு மனிதன் தானாகத் தொட்டாலும் தெரியாமல் உடல் பட்டுவிட்டாலும் உடுத்தியிருக்கும் உடையுடன் குளிக்க வேண்டும் என்ற கொடுமை வேறு எங்காவது உண்டு என்று யாராலும் கூற முடியாது.

உண்ணுகின்ற உணவும் தாங்கள் விரும்பியபடி உண்பதற்கு அவர்கள் அனுமதிக்கப்பட்டதில்லை. உடுத்துகின்ற துணிகள்கூட நல்ல விதமாக அணிந்து கொள்ளவும் ஆபரணங்கள் அணியவும் இவர்கள் அனுமதிக்கப்பட்டதில்லை. கல்வி கற்கவும் செல்வம் சேர்க்கவும்

பல்லாயிரம் ஆண்டுகளாய் அவர்கள் அனுமதிக்கப்பட்டதில்லை.

தாங்கள் விரும்புகின்ற கடவுளை வணங்குவதற்குக்கூட இவர்களுக்கு அனுமதி கிடையாது. தங்கள் பிள்ளைகளுக்கு தாங்கள் நல்ல பெயர்கள் வைத்து அழைப்பதற்குக்கூட அனுமதியில்லை. இன்னும் பல சொல்லொணாத் துயர்களை இந்நாட்டுத் தீண்டத்தகாத மக்கள் அனுபவித்த கொடுமைகளைப் போல வேறு எந்த நாட்டு அடிமையும் அனுபவித்ததாக எவரும் ஒப்பிட்டுக் கூறிட முடியாது.

தீண்டத்தகாதவர்களை உயர்ஜாதியினர் தங்களைப் போன்ற மனிதராகவே கருதியதில்லை. தனக்கு இருக்கும் ஆடு, மாடு, வீடு, நிலம் போன்று அவர்களும் ஒரு சொத்தாகவே மதிக்கப்பட்டார்கள். ஒரு நிலச்சுவான்தார் தன்னுடைய நிலத்தை வேறு ஒருவருக்கு விற்பனை செய்யும்போது இந்த நிலத்தில் உள்ள மரம், செடி, கொடி அனைத்தும் மற்றும் நிலத்திற்கு அடியிலுள்ள செல்வங்களும் மேற்படியாருக்கு சொந்தம் என்றும் அதனை அவரே முழுவதும் ஆண்டு அனுபவித்துக் கொள்ளலாம் என்றும் பத்திரம் பதிவு செய்யும் போது இந்த நிலத்தில் காலங்காலமாக எனக்கு அடிமையாக இருந்து உழைத்த பறையர் குடும்பத்தினர் நூறு பேரையும் உங்களுக்கு கிரயசாசனமாக எழுதித் தருகிறேன் என்று ஒப்பந்தம் போடுவார்.

அதுபோல ஒரு பண்ணையாரிடம் வேலை செய்த தீண்டத்தகாதவர்கள் அவரது கொடுமை தாங்காமல் தப்பி ஓடிவிட்டால் அவர்களைப் பிடித்துத் தரச்சொல்லி மாவட்ட ஆட்சியரிடம் முறையிட்டு அவர்களை கொத்தடிமைகளை மீட்பதுபோல மீட்டுத் தந்த வரலாறும் இங்குதான் நடந்தது.

அதுபோல மன்னர் குடும்பத்தில் யாராவது ஒருவர் நோய்வாய்ப்பட்டாலோ, மன்னர் பதவி ஏற்றாலோ, அரண்மனை கட்டினாலோ, கோயில்கள் கட்டினாலோ, ஆடு மாடுகளைப் பலி கொடுப்பது போல தீண்டத் தகாதவர்களையும் நரபலி கொடுத்திருக்கிறார்கள் என்பதும் இந்த நாட்டு மக்களின் மறைக்கப்பட்ட வரலாறு சொல்கிறது.

தீண்டாமையின் கொடுமை பற்றி டொமினிக் லேப்பியர், லேரி காலின்ஸ் ஆகியோர் எழுதிய ‘நள்ளிரவில் சுதந்திரம்’ என்ற நூலில்

உள்ளவற்றைக் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் என்று நம்புகிறோம்.

“இந்திய மக்கள் தொகையில் ஆறில் ஒரு பங்கினராகத் தீண்டத்தகாதோர் இருந்தனர். முற்பிறவியில் செய்த பாவங்களால் சபிக்கப்பட்டு எந்த சாதியிலும் சேர்க்கப்படாமல் ஒதுக்கப்பட்டவர்கள் என்று இவர்கள் கருதப்பட்டனர். கருப்புத் தோல், கெஞ்சிப்பணியும் குணம், கிழிந்துபோன ஆடை ஆகியவற்றால் இவர்கள் அடையாளம் காணப்பட்டனர். அவர்களின் பெயரைச் சொல்வதுகூட இழிவாகக் கருதப்பட்டது. அவர்களின் லேசான தீண்டல்கூட சாதி இந்துவைத் தீட்டாக்கிவிடும். சடங்கு முறைகளுடன் குளித்தே இந்தத் தீட்டு நீக்கப்பட்டது. பிராமணர்கள் வசிக்கும் பகுதியில் அவர்கள் காலடி படுவதுகூடத் தீட்டாகக் கருதப்பட்டது. சாதி இந்து ஒருவர் வரும்போது எதிரே வரும் தீண்டத்தகாதோரின் நிழல்கூட அந்தப் பாதையில் விழக்கூடாது. அந்த அளவுக்கு அவர்கள் ஒதுங்கிச் செல்ல வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டனர். இந்தியாவின் சில பகுதிகளில், தீண்டத்தகாதோர் இரவு நேரங்களில் மட்டுமே குடிசைகளிலிருந்து வெளியே வர அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் காணத் தகாதோராகக் கருதப்பட்டனர்.

தீண்டத்தகாதோர் முன்னிலையில் எந்த இந்துவும் உணவருந்த மாட்டார். அவர்களால் கொண்டு வரப்பட்ட தண்ணீரை அருந்த மாட்டார். அவர்கள் தொட்ட பாத்திரத்தைத் தொட மாட்டார். பல இந்துக் கோயில்கள் அவர்களுக்குப் பூட்டப்பட்டிருந்தன. அவர்களின் குழந்தைகள் பள்ளிகளில் அனுமதிக்கப்படவில்லை. மரணத்தில்கூட அவர்கள் பறையர்கள் என்று ஒதுக்கியே வைக்கப்பட்டனர். பொதுவான சுடுகாட்டைப் பயன்படுத்த தீண்டத்தகாதோர் அனுமதிக்கப்படவில்லை. உடல் தகனத்துக்குத் தேவையான கட்டைகளை வாங்க முடியாத அளவுக்கு அவர்கள் பரம ஏழைகள் என்பதால் அவர்களின் உடல்களைத் தீயுண்ணுவதை விட கழுகுகள் உண்பதுதான் அதிகம்.

இந்தியாவில் இன்னமும் சில பகுதிகளில் அடிமைகள் போல இவர்கள் வேலை செய்த பண்ணைகளுடன் சேர்த்து விற்கவும் வாங்கவும் பட்டார்கள். பொதுவாக தீண்டத்தகாதோரில் ஒரு இளைஞன் ஒரு எருதின் விலைக்குச் சமமாக விற்கப்பட்டான். சமூக வளர்ச்சி காணும் நாட்டில் இவர்கள் ஒரே ஒரு உரிமையை மட்டும்

அனுபவித்தார்கள். அதாவது புனிதமான பசு தொற்று நோய்க்குப் பலியாகி விட்டால் அதனை வண்டியில் ஏற்றி செல்லும் தீண்டத்தகாதோர் அந்த அழுகிப் போன மாட்டிறைச்சியை அவர்களைப் போன்ற மற்றவர்களுக்கு விற்றுக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர்" (நள்ளிரவில் சுதந்திரம் பக்கம் 154.)

கறுப்பர் வெள்ளையர் என்பது கூட நிறத்தால் அடையாளப்படுத்த முடியும். ஆனால் தோற்றத்தில் மற்ற மக்களிடமிருந்து எந்த வேறுபாடும் இல்லாத அந்த மக்களை மேல் ஜாதி மேல்வருணத்தார் ஒதுக்கி வைத்ததற்கு எந்தவித நியாயமான காரணத்தையும் யாரும் கூற முடியாது. அந்தக் கறுப்பர் இனத்தவரை வெள்ளையர் திருமணம் செய்துகொள்ள எந்தத் தடையும் இல்லை. வெள்ளையரை கறுப்பர் திருமணம் செய்து பிள்ளைகள் பெற்றுக்கொண்டு இனிமையாகக் குடும்பம் நடத்தி வருவதை பல நாடுகளில் நாம் காண்கிறோம்.

ஆனால் இங்குதான் விரும்பிய ஒரு ஆணும் பெண்ணும் திருமணம் செய்து வாழ்வதை இந்த சமுதாயம் அனுமதிப்பதில்லை. வெட்டுவது குத்துவது கொல்லுவது தீவைத்துக் கொளுத்துவது எல்லாம் இந்தத் திருமணத்தினால் இந்நாட்டில் அன்றாடச் செய்திகள். மற்ற மற்ற ஜாதியினருடன் திருமண உறவை மறுக்காத சமுதாயம் இத்தீண்டாத சமுதாயத்தினருடன் மட்டும் திருமண உறவு வைத்துக் கொள்வதை 2018ல்கூட விரும்புவதில்லை.

இந்தக் கொடுமைகள் அனுபவிக்க என்ன காரணம் என்பதை அம்மக்களும் அறிவதில்லை. அக்கொடுமையினைப் புரியும் ஆதிக்கவாதிகளும் நியாயமான காரணத்தைக் கூறமுடியவில்லை.

இம்மக்களால் சமுதாயத்திற்கு ஏதாவது கேடு சூழ்ந்ததா? அவமானம் நேர்ந்ததா? பாதிப்பு நிகழ்ந்ததா? யாராலும் ஆம் என்று கூற முடியாது. சமுதாயத்திற்குப் பயன்படாதவர்களா? தேவையில்லாத காரியம் ஏதாவது செய்கிறார்களா? எந்த அறிவாளியும் அதனை நிரூபிக்க முடியாது.

இத்தீண்டாதவர்கள்தான் இச்சமுதாயத்திற்கு மிகமிக அத்தியாவசியமான பணியைச் செய்தவர்கள். இன்றும் செய்து

வருகிறவர்கள். இவர்கள் தங்கள் பணியைச் செய்யவில்லை என்றால் நாடு நகரமெல்லாம் நாறிவிடும். எவனும் செருப்பின்றி நடக்க முடியாது. செத்துப்போன மனிதனும் ஆடுமாடுகளும் அப்புறப்படுத்த ஆளில்லாமல் வீதிகளில் நாற்றமெடுத்துக் கிடக்கும். உண்ண உணவும் எவனுக்கும் தின்னக் கிடைக்காது.

இவ்வளவு அத்தியாவசியமான பணிகளைச் செய்யும் மக்களைத் தீண்டத் தகாதவர்களாக நடத்துபவர்கள் யார்? இவர்களது உழைப்பால் பலன் ஏதும் பெறாதவர்களா என்றால் அதுதான் இல்லை. இவ்வளவு பலன்களையும் யார் அனுபவிக்கிறார்களோ அவர்கள்தான் இவர்களைத் தீண்டத் தகாதவர்கள் என்கிறார்கள்.

இவர்களை இவ்வாறு கொடுமைப் படுத்துபவர்கள் வேறு நாட்டினரா? இல்லவே இல்லை. இப்பாரத தேசத்தவர்தான் இவ்வளவு கொடுமைகளையும் புரிபவர்கள். இம்மக்களை இவ்வாறு ஒதுக்கி வைத்தவர் வேறு மதத்தினரா என்றால் இம்மக்களை இந்துமதத்தவர் என்று கூறும் அதே இந்துக்கள்தான் இவ்வளவு கொடுமைகளையும் செய்து வருபவர்கள்.

சரி, அறிவு வளர்ச்சியில்லாத காலத்தில்தான் இவ்வாறு நடத்தினார்கள் என்றால் அறிவும் அறிவியலும் வளர்ச்சியடைந்த இந்தக் காலத்திலாவது இது நடைபெறாமலிருக்கிறதா என்றால் இன்னும் இந்திய தேசத்தில் பல்வேறு பகுதிகளிலும் நடந்துகொண்டுதான் வருகிறது.

உலகில் நடந்த பல கொடுமைகளுக்கும் பரிகாரம் நடந்திருக்கிறது. பல்வேறு நாடுகளில் நடந்த கொடுமைகள் தடுக்கப்பட்டிருக்கிறது. கொடுமைகள் புரிந்தவர்கள் திருந்திவிட்டார்கள். அதனை நியாயப்படுத்துவதில்லை.

## கொடுமைக்காரர்கள் யார்?

ஆனால் இந்நாட்டில் நடந்த அந்தக் கொடுமைக்கு மட்டும் இன்னும் பரிகாரம் கிடைக்கவில்லை. அக்கொடுமைகள் தடுக்கப்படவில்லை. கொடுமைக்காரர்கள் இன்னும் திருந்தியபாடில்லை

என்பது மாத்திரமல்ல அதனை இன்னும் நியாயப் படுத்தவும் செய்கிறார்கள். அக்கொடுமைகளுக்கு யாரும் இதுவரை பொறுப்பேற்றுக் கொள்ளாதது மாத்திரமல்லாது அதற்கெல்லாம் காரணம் தாங்கள் கிடையாது என்பதோடு வேறு யாரையோ காரணம்கூறித் தப்பிக்கவும் பார்க்கிறார்கள்.

இத்தீண்டாமையை எதிர்ப்பதாகச் சொல்பவர்கள் அத்தீண்டாமைக்கான காரணத்தை நியாயமாகச் சொல்லாமல் வேறு எப்படியோ இங்கு வந்து புகுந்துவிட்டது என்பதுபோல் பேசியும் எழுதியும் இந்நாட்டு மக்களை நம்பச் சொல்கிறார்கள்.

அத்தகையவர்களில் ஒருவர்தான் இந்துமுன்னணியின் மாநில அமைப்பாளர் திரு.இராம.கோபாலன் ஆவார்.

அவர் மாத்திரமல்ல, இந்துத்துவா சிந்தனைகளில் மூழ்கிக்கிடக்கும் இல.கணேசன் போன்றவர்கள், சோ.இராமசாமி போன்றவர்கள் எல்லோருமே இந்துமதத்தில் தீண்டாமையே இல்லை என்றும் தீண்டாமைக்கு ஆதாரமே இல்லை என்றும் முழுப்பூசணிக்காயையும் பரிமாறின சோற்றுக்குள் மறைக்கப் பார்க்கிறார்கள்.

இந்துமதத்தில் தீண்டாமையும் இல்லை; தீண்டாமைக்கு ஆதாரமும் இல்லை என்றால் இந்துமதத்தில் மட்டும் தீண்டாமை எப்படி வந்து புகுந்தது? இந்துக்கள் என்பவர்கள் மட்டும் தீண்டாமையைக் கடைப்பிடிப்பது ஏன்? வேறு எங்காவது இருந்திருந்து அது இங்கு வந்து புகுந்து விட்டது என்றால் இந்து மதத்தைத்தவிர வேறு மதத்திலும் இருக்க வேண்டுமா? இல்லையா?

ஒருவர் தனக்குச் சம்மந்தமில்லாத ஒரு பொருளைப் பயன்படுத்துகிறார் என்றால் ஒன்று அவர் அப்பொருளை விலைகொடுத்து வாங்கி இருக்க வேண்டும். அல்லது அதனை யாரிடமிருந்தாவது திருடி இருக்க வேண்டும்.

நான்தான் இப்பொருளைப் பயன்படுத்துகிறேன். ஆனால் இப்பொருள் எப்படி இங்கு வந்தது என்று எனக்குத் தெரியாது. எனவே,

அதில் ஏதாவது கோளாறு என்றால் அதற்கு நான் பொறுப்பு அல்ல. அந்தக் கோளாறை நான் சரி செய்ய மாட்டேன் என்று சொல்கிறார் என்றால் ஒன்று அவர் பொய் சொல்லுகிறார் என்று பொருள். அல்லது அவர் நாணயமற்றவர் என்றுதான் பொருள். இதுபோன்ற ஒரு கருத்தைத்தான் இராம.கோபாலனும் சொல்லுகிறார்.

# 2. தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் ஆதாரம் இல்லையா?

ஆர்எஸ்எஸ், இந்து முன்னணி, பிஎம்எஸ், பிஜேபி ஆகியவற்றின் பித்தலாட்டமான பிரச்சாரம்:

“தீண்டாமை என்பது ஆதியில் இல்லை. இடையில் எப்படியோ வந்து புகுந்துவிட்டது. இந்து மதத்தின் எந்த சாஸ்திரத்திலும் புனித நூலிலும் தீண்டாமை குறிப்பிடப்படவில்ல.” என்று இராம.கோபாலன் அய்யர்வாள் ‘இந்துமித்திரன்’ என்ற இதழில் எழுதியிருப்பதாக பெல் நிறுவனத்தில் இந்துமுன்னணிக்காரர்கள் துண்டறிக்கை ஒட்டியிருந்தார்கள்.

அத்துடன் ஆர்எஸ்எஸ் பிரச்சாரகராக இருந்து அதன் கொள்கைகளை தொழிலாளர் மத்தியில் பரப்பி தொழிலாளர்களுக்கு மதவெறி ஊட்டுவதற்காக பாரதீய மஸ்தூர் சங்கம் என்ற தொழிற்சங்கத்தைத் துவக்கியவர் தத்தோபந்த் தெங்கடி என்பவர். அவருடைய நினைவுநாளில் பெல் நிறுவனத்தில் அந்த சங்கத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு துண்டறிக்கை வெளியிட்டார்கள். அதில்

“தெங்கடிஜியும் அம்பேத்காரும் பல நாட்கள் சமுதாயப் பிரச்சினைகள் குறித்து விவாதித்ததாகவம் அம்பேத்கர் அவர்கள் இந்துமதக் கோட்பாடுகள் எதிலும் தீண்டாமை சொல்லப்படவில்லை என்பதை ஹிந்து சன்னியாசிகள் துறவியர் ஒன்று கூடி பகிரங்கமாக அறிவித்திட வேண்டும் என்று விரும்பியதாகவும் அதனை ஏற்று சமுதாயத்தில் நிலவி வரும் தீண்டாமைக் கொடுமைக்கு சாஸ்திர அங்கீகாரம் கிடையாது என தீர்மானம் இயற்றப்பட்டதாகவும் பிஹெச்இஎல்&லில் 13&10&2014&ல் துண்டறிக்கை வெளியிட்டார்கள். அதேபோல 2017ல் அம்பேத்கர் சிறப்பிதழ் வெளியிட்டு மறுபடியும் அதையே சொல்கிறார்கள். சாதுக்கள் சன்னியாசிகள் தீர்மானம் இயற்றி தீண்டாமையை ஒழித்துவிட்டார்கள் என்பதை தொடர்ந்து ஆர்எஸ்எஸ் கூட்டம் சொல்லிக்கொண்டே வருகிறது.

அவர்கள் துண்டறிக்கை வெளியிட்ட அதே வாரத்தில் ராஞ்சியில்

நடந்த மதவிழா ஒன்றில் பூரி சங்கராச்சாரி நிச்சலானந்தா பேசும்போது "பகவத் கீதை 16வது அத்தியாயத்தில் வர்ணாஸ்ரமம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது நான்கு வர்ணங்கள் மனித குலத்தின் நன்மைக்காக உருவாக்கப்பட்டவைகள். அவரவர்கள் அவரவர்க்கான பணியைச் செய்வதே சிறப்பான ஒன்றாகும். இதற்காகத்தான் வர்ணமுறையை உருவாக்கினார்கள். ஆனால் இந்த வர்ண முறையை மீறி அதற்குக் களங்கம் விளைவிக்கும் விதமாக தற்போது நடந்து வருகிறது. அதாவது சனாதனிகள் கோயிலுக்குள் நுழையத் தடை இல்லை. ஆனால் சூத்திரர்கள் தலித்துகள் எப்படி கோயிலுக்குள் நுழையலாம்? வர்ணாஸ்ரமக் கொள்கையின்படி தூய்மையானவர்கள் மாத்திரமே கோயிலுக்குள் நுழைய முடியும். அப்படி இருக்க தூய்மைப் படுத்தும் பணியில் உள்ளவர்கள் கோயிலுக்குள் நுழைய எப்படி அனுமதிக்க முடியும்? இது அவர்களாகவே புரிந்துகொண்டு கோவிலுக்குள் நுழைவதைத் தவிர்க்க வேண்டும். இது சாஸ்திரத்திலும் கூறப்பட்டுள்ளது" என்று பேசியுள்ளார்.

இந்த நிகழ்ச்சியில் மத்தியப்பிரதேச ஆளுனர் ராம்நரேஷ் மற்றும் பல முக்கிய அரசியல் பிரமுகர்கள் கலந்துகொண்டனர். இந்த நிகழ்ச்சியில் பேசிய மத்தியப்பிரதேச ஆளுனர் ராம்நரேஷ் கூறியதாவது:

"சங்கராச்சாரியாரின் பேச்சில் எந்தத் தவறும் இல்லை. அவர் சாஸ்திரத்தை மேற்கோள் காட்டிப் பேசினார்" என்று கூறியிருந்தார்.

சிருங்கேரி சங்கராச்சாரி; கடந்த சில ஆண்டுகளுக்கு முன்னால் "உலகத்திலேயே மிக உயர்ந்த சோப்புப் போட்டுக் குளித்தாலும் விலை உயர்ந்த ஆடை ஆபரணங்களை அவர்கள் அணிந்து கொண்டாலும் தீண்டத்தகாதவர்களின் உடலில் உள்ள அழுக்கு வேண்டுமானால் போகுமே தவிர அவர்கள் பிறவியில் உள்ள அழுக்கு நீங்காது" என்று சொன்னவராவார்.

இந்துமத சாஸ்திரங்களில் தீண்டாமைக்கு ஆதாரம் இல்லை என்று சொல்லுகின்ற இராமகோபாலன்கள் தெங்கடிகள், இல கணேசன்கள் இந்த தீண்டாமை வெறி பிடித்த சங்கராச்சாரிகளை எதிர்த்து குரல் கொடுக்க மாட்டார்கள். சங்கராச்சாரி சொல்கிற மாதிரி கீதையில் தீண்டாமைக்கான ஆதாரம் இருப்பதை இவர்கள் ஒத்துக்

கொண்டு அந்த கீதையைக் கொளுத்த முன்வர மாட்டார்கள். மாறாக அந்த கீதையை புனித நூலாகவும் அதைச் சொன்ன கிருஷ்ணனை பகவானாகவும் வணங்குபவர்கள்தான் இவர்கள்.

தீண்டாமைக்கு சாஸ்திர அங்கீகாரம் இல்லை என்று தீர்மானம் இயற்றியதாகச் சொல்லப்படும் சாதுக்கள், சன்னியாசிகள், துறவியர் யார் யார் என்பதையும் இவர்கள் கூறமாட்டார்கள். அந்த துறவியரும் சன்னியாசிகளும் இந்த சங்கராச்சாரிகளின் இந்தப் போக்கைக் கண்டிப்பார்களா என்ற கேள்விக்கும் விடையில்லை.

இந்த சங்கராச்சாரியின் கூற்றை ஆதரிக்கிற ஆளுநரையும் இவர்கள் கண்டிக்க மாட்டார்கள். அந்த சங்கராச்சாரியுடன் பாஜக பிரதமரான மோடியும் மிக நெருக்கமாக இருப்பவர்தான். அந்த மோடியையும் இவர்கள் கொஞ்சமும் எதிர்க்க மாட்டார்கள்.

தீர்மானம் இயற்றிவிட்டதாலேயே தீண்டாமை ஒழிந்துவிடும் என்பது எவ்வளவு பெரிய மோசடி? எந்நத விதமான ஆக்கப் பூர்வமான பணியும் செய்யாமல் தீர்மானம் இயற்றி விடுவதாலேயே ஒரு பிரச்சினைக்குத் தீர்வு வந்துவிடுமா?

நாளை முதல் இந்த நாட்டில் வறுமை ஒழிந்து விட்டது என்று தீர்மானம் மட்டும் இயற்றி விட்டால் அந்த வறுமை ஒழிந்து விடுமா? அதே போல இந்த நிமிடம் முதல் இலஞ்சம் ஊழல் ஒழிந்து விட்டது என்று தீர்மானம் இயற்றி விட்டால் அது இல்லாமல் போகுமா? வேலை இல்லாத் திண்டாட்டத்தைப் போக்க எந்த நடவடிக்கையுமே எடுக்காமல் நாளை முதல் இந்த நாட்டில் வேலை இல்லாத் திண்டாட்டமே இருக்காது என்று தீர்மானம் இயற்றி விட்டால் வேலை இல்லாத் திண்டாட்டம் ஒழிந்து போகுமா?

அப்படி எந்த விதமான ஆக்கப் பூர்வமான செயல்கள் எதையுமே செய்யாமல் தீண்டத்தகாத மக்களை ஏய்க்க வேண்டும் என்பதற்காக நாங்கள் தீர்மானம் இயற்றி விட்டோம். அதனால் தீண்டாமை ஒழிந்து விட்டது என்று சொல்கிறார்கள் என்றால் இது எப்பேர்ப்பட்ட பித்தலாட்டம்?

அண்ணல் அம்பேத்கர் இந்திய அரசியல் சட்டம் எழுதியபோது அந்தச் சட்டத்தில் தீண்டாமை ஒழிக்கப்பட்டு விட்டது. தீண்டாமையை எந்த வடிவத்தில் கடைப்பிடித்தாலும் அது சட்டப்படி தண்டனைக்குரிய குற்றம் என்று எழுதி இருந்தாலும் இதுவரை தீண்டாமை ஒழிந்தபாடில்லையே! பாழாய்ப்போன இந்துமதம் அந்தத் தீண்டாமையை அவ்வளவு கெட்டியாக அல்லவா பாதுகாத்து வைத்திருக்கிறது?

அத்துடன் அம்பேத்கரின் வரலாற்றையே புரட்டி எழுதுகின்ற வேலையையும் பிஎம்எஸ் அந்தத் துண்டறிக்கையில் செய்திருந்தது. அதாவது “1952 பொதுத்தேர்தலில் குருஜி கோல்வால்கரின் ஆலோசனையின் பேரில் அம்பேத்கர் போட்டியிட்ட பாம்பே வடகிழக்குத் தொகுதியில் தெங்கடிஜி அம்பேத்கருக்காக தேர்தல் பணி செய்தார். இத் தேர்தலில் காங்கிரஸ் பல முறைகேடுகளைச் செய்து அம்பேத்கரைத் தோற்கடித்தது.. முறைகேடுகளை ஆதாரங்களுடன் திரட்டி தெங்கடிஜி தேர்தல் ஆணையத்திற்குப் புகார் மனு அனுப்பினார். பின் பல மாதம் கழித்து விசாரணை செய்த தேர்தல் அதிகாரி தேர்தலில் முறைகேடு நடந்துள்ளதாக அறிவித்தார்.

1954ம் ஆண்டு பொதுத்தேர்தலில் அம்பேத்கர்ஜி பண்டாரா தொகுதியில் போட்டியிட்டார். அவருடைய அதிகாரப்பூர்வமான தேர்தல் ஏஜன்டாக அம்பேத்கர் தெங்கடியை நியமித்தார்” என்று அவர்கள் துண்டறிக்கை ஒட்டியிருந்தார்கள்.

இது எவ்வளவு பெரிய வரலாற்றுப் புரட்டு என்பதனை அம்பேத்கரது உண்மை வரலாற்றைப் படித்தவர்களால் புரிந்துகொள்ள முடியும். ஆனால் அம்பேத்கரது வரலாறே தெரியாமல் அவரது கொள்கைகளையும் புரிந்துகொள்ளாமல் பாமரத்தனமாக அம்பேத்கர் பெயரை மட்டும் உச்சரிக்கின்ற அப்பாவி தாழ்த்தப்பட்ட இளைஞன் என்ன நினைப்பானென்றால் ‘இருந்தாலும் இருக்கும், தெங்கடிஜி அம்பேத்கருக்குத் தேர்தல் பணி செய்தாலும் செய்திருப்பார். அவரை தேர்தல் ஏஜன்டாக அம்பேத்கர் நியமித்தாலும் நியமித்திருப்பார் என்று கருதி ஆர்எஸ்எஸ் காரர்கள் சொல்லக் கூடிய புளுகுகளை நம்பினாலும் நம்புவார்கள். அதன் பலன் என்னவாகும் எனில் அம்பேத்கரை ஆதரித்த இவர்களை நாம் ஆதரித்தால் என்ன என்ற சிந்தனை இளைஞர்களிடையே உருவானாலும் உருவாகலாம். அப்படிப்பட்ட

எண்ணத்தை உருவாக்கி அந்த அறுவடையைச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் இதுபோன்ற வரலாற்றுப் புரட்டுகளை ஆர்எஸ்எஸ் கும்பல் செய்து வருகிறது.

ஆனால் உண்மை நிலை என்ன தெரியுமா**?**

புளுகு நம்பர் **1:** 1952 பொதுத் தேர்தலில் குருஜி கோல்வால்கரின் ஆலோசனையுடன் தெங்கடிஜி அம்பேத்கருக்குத் தேர்தல் பணி செய்தார் என்பதாகும். ஆனால் உண்மை என்ன தெரியுமா?

இதோ தனஞ்செய்கீர் எழுதிய அண்ணல் அம்பேத்கர் வாழ்க்கை வரலாறு (மொழிபெயர்ப்பு க.முகிலன்) பக்கம் 652 இவ்வாறு கூறுகிறது: 'தீண்டப்படாத சாதிகள் பேரவையானது தேர்தலில் காங்கிரசு, இந்து மகாசபை, கம்யூனிஸ்டு கட்சி ஆகிய எவற்றுடனும் உடன்பாடு வைத்துக்கொள்ளாது என்று அறிவித்தது'

இந்துமகாசபை என்றால் யார் என்று இந்தக்கால இளசுகளுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. இன்றைய பிஜேபியின் அன்றைய பெயர். அது ஆர்எஸ்எஸால் வழி நடத்தப்பட்டது. இந்துமகாசபா என்ற பெயர் பின்னாளில் ஜனசங்கமாக மாறியது. அந்த ஜனசங்கம்தான் இன்று பிஜேபி யாக உருவெடுத்துள்ளது.

ஆக பந்தியிலேயே உட்கார அம்பேத்கர் இவர்களுக்கு வாய்ப்பளிக்கவில்லை. அப்படியிருக்க தெங்கடிஜி பந்தியில் உட்கார்ந்து இலைகளின் ஓட்டையை எண்ணிக் கொண்டிருந்தார் என்கிறது பிஎம்எஸ்.

புளுகு நம்பர் **2:** காங்கிரஸ் கட்சி தேர்தலில் பல முறைகேடுகளைச் செய்து அம்பேத்கரைத் தோற்கடித்தது. தெங்கடிஜி ஆதாரங்களைத் திரட்டி தேர்தல் ஆணைத்திற்குப் புகார் அளித்தார். தேர்தல் அதிகாரி தேர்தலில் முறைகேடு நடந்துள்ளது என்று அறிவித்தார்.

இதன் நிலை என்ன தெரியுமா? அதே நூல் பக்கம் 662 இவ்வாறு

கூறுகிறது: அம்பேத்கரும் அவருடன் இரட்டை உறுப்பினர் தொகுதியில் அவருடன் இணைந்து போட்டியிட்ட சோசலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த அசோக் மேத்தாவும் முறைகேடு குறித்து வழக்குத் தொடுத்தனர். அவ்வழக்கில் அம்பேத்கரே வாதிட்டார். ஆயினும் இவ்வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

வழக்கே தள்ளுபடி செய்யப்பட்ட நிலையில் தேர்தல் அதிகாரி தேர்தலில் முறைகேடு நடந்துள்ளது என்று அறிவித்தார் என்று புளுகுகிறது பிஎம்எஸ். அடுத்து 1954ம் ஆண்டு நடந்த தேர்தலிலும் யாருடனும் கூட்டு சேராமல் சுயேச்சை வேட்பாளருடன் இணைந்து போட்டியிடத்தான் விரும்பினாரே தவிர இந்துமகாசபா என்ற பேச்சுக்கே இடமில்லை. அப்படியிருக்க புளுகு மூட்டைகளை அவிழ்த்து விடுகிறது பிஎம்எஸ்.

அத்துடன் அம்பேத்கருடன் தெங்கடி பல நாட்கள் சமுதாயப் பிரச்சினைகளையும் அதற்கான தீர்வுகளைப் பற்றியும் விவாதித்ததாகவும் அப்போது அம்பேத்கர் ஹிந்து மதத்தின் கோட்பாடுகள் எதிலும் தீண்டாமை இல்லை என்று ஹிந்து சன்னியாசிகள், துறவியர்கள் ஒன்றுகூடி பகிரங்கமாக அறிவித்திட வேண்டும் என்று விரும்பியதாகவும் அதனை ஏற்று சமுதாயத்தில் நிலவி வரும் தீண்டாமைக் கொடுமைக்கு சாஸ்திர அங்கீகாரம் கிடையாது என்று தீர்மானம் இயற்றியதாகவும் அந்தத் துண்டறிக்கையில் மேலும் ஒரு வரலாற்றுத் திரிபை செய்திருந்தது பிஎம்எஸ்.

வரலாற்றுத் திரிபு

பல்வேறு தீண்டாமைக் கொடுமைகளுக்கு ஆளான அண்ணல் அம்பேத்கர் அவர்கள் சமுதாயத்தில் நிலவி வரும் தீண்டாமைக்கு எதிராகப் பல்வேறு போராட்டங்களை நடத்தி வந்தார். இதற்கெல்லாம் சற்றும் அசைந்து கொடுக்காத இந்து மதத்தவர்களால் மனம் நொந்து போன நிலையில் ‘பிறக்கும்போது இந்துவாகப் பிறந்தேன்; ஆனால் சாகும்போது இந்துவாகச் சாக மாட்டேன்’ என்று அறிவித்து தானும் தன்னைச் சேர்ந்தவர்களும் இந்து மதத்தைவிட்டு வேறு மதத்திற்கு மதம் மாறப்போவதாக அறிவித்தார்.

ஒவ்வொரு மதத்தைச் சேர்ந்தவர்களும் தங்கள் தங்கள் மதத்தில் சேர வருமாறு அம்பேத்கருக்கு அழைப்பு விடுத்தனர். தீண்டத்தகாதவர்கள் வேறு மதத்தை நாடிப் புகலிடம் தேட வேண்டியிருக்கும் என்று அம்பேத்கர் அறிவித்தவுடன் அவரது முயற்சிக்குப் பலரும் உள்நோக்கம் கற்பிக்க ஆரம்பித்தனர். அப்பொழுது அவர்களைப்பார்த்து “உங்களுடைய மதம்தான் எங்களுடைய மதம் எனில் உங்களுடைய உரிமைகளும் எங்களுடைய உரிமைகளும் சமமாக இருக்க வேண்டும். ஆனால் உண்மை நிலை அப்படியா இருக்கிறது? இல்லையே! அவ்வாறிருக்கும்போது நீங்கள் எட்டி உதைப்பதையும் அவமதிப்பதையும் பொறுத்துக் கொண்டு எந்த அடிப்படையில் எங்களை இந்து மதத்தில் இருக்கச் சொல்கிறீர்கள்? ஒரே மதத்தைப் பின்பற்றும் இரண்டு பேர்களிடையே வேறுபாடு காட்டும் மதம் ஒருதலைச் சார்பானதல்லவா? தன்னைப் பின்பற்றுகின்ற கோடிக்கணக்கானவர்களை கிரிமினல் குற்றம் செய்தவர்கள் போலவும் நாயினும் இழிந்தவர்களாகவும் நடத்தி தாங்க முடியாத இயலாமைகளை அவர்கள் மீது திணித்துத் துன்புறுத்துகின்ற மதம் எவ்வகையிலும் ஒரு மதமன்று. இக்கொடிய அமைப்பைப் போற்றுகின்ற எதுவும் மதம் என எப்படிப் பெயர் பெற முடியும்?” என்று முழங்கினார் அம்பேத்கர்.

அத்துடன் “செத்த பிறகு இந்த உலகத்தையோ அல்லது மேலுலகத்தையோ யாராவது பார்த்திருக்கிறார்களா? மூன்று மேல் வருணத்தாருக்கும் தொண்டூழியம் செய்வதன் மூலம் சூத்திரனுக்கு மோட்சம் கிடைக்கிறது என்று இந்துமத நூல்கள் பரப்பியிருப்பது கடைந்தெடுத்த கயமைத்தனம் அல்லவா?” என்று கேட்ட அம்பேத்கர் மதமாற்ற அறிவிப்பை திரும்பப் பெற வேண்டும் என்று அவரிடம் கோரிக்கை வைத்தவர்களிடம்

‘சாதி இந்துக்களின் மனமாற்றத்திற்காக நான் இன்னும் அய்ந்து முதல் பத்து ஆண்டுகள் வரை காத்திருக்க முடியும். ஆனால் இதற்கிடையில் ‘கேசரி’ பத்திரிகை வட்டத்தாரால் (கேசரி என்ற பத்திரிகை திலகரால் தொடங்கப்பட்டது) மிகச் சிறந்த இந்துவாகக் கருதப்படுகின்ற தீண்டப்படாதவரான கே.கே.சகத் தை மராட்டிய சித்பவன் பார்ப்பனர்கள் சங்கராச்சாரியார் பதவியில் ஓராண்டுக் காலத்திற்கு அமர்த்த வேண்டும். மனம் மாறியதற்கும் சமத்துவத்தை ஏற்றுக்கொண்டதற்கும் அடையாளமாக ஒரு நூறு சித்பவன் பார்ப்பனக் குடும்பங்கள் புதிய சகத் சங்கராச்சாரியின் காலில் விழுந்து வணங்க

வேண்டும்” என்று அம்பேத்கர் கூறினார்.

அப்படி அவர் அறிவித்து இருபது ஆண்டுகள் கழித்தும் அந்த நிலை உருவாகவில்லை. அதனால்தான் 1956ம் ஆண்டு அக்டோபர் மாதம் பல இலட்சம் மக்களுடன் புத்த மார்க்கத்தில் இணைந்தார்.

இது நாள் வரையிலும் அம்பேத்கரின் கோரிக்கை நிறைவேற்றப்படாததோடு சங்கராச்சாரிப் பொறுப்பில் உள்ளவரே தீண்டாமைக்கு சாஸ்திரத்தில் இடம் உண்டு என்று முழங்குகிறார். தலித்துகளும் சூத்திரர்களும் கோயிலுக்குள் நுழையக் கூடாது என்கிறார்.

# 3. சாமியார்கள், சங்கராச்சாரியார்கள், ஜீயர்களின் யோக்கியதை

சங்கராச்சாரியாராகக்கூட வேண்டாம் ஒரு சமையல்காரராகக்கூட சங்கர மடத்திற்குள் ஒரு தாழ்த்தப்பட்டவனோ பிற்படுத்தப்பட்டவனோ கூட நுழைய முடியாத நிலைதான் இன்னும் நிலவுகிறது. காஞ்சி சங்கர மடத்தில் மாத்திரமல்லாது காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலிலும் பார்ப்பனர் நுழைவதற்கு ஒரு வழியும் பார்ப்பனரல்லாதார் நுழைவதற்கு வேறொரு வழியும் வைத்து 2018லும் நிலவுகிறது.

சீரங்கம் அரங்கநாதர் கோயிலிலும் எந்த ஒரு தீண்டத்தகாதவனும் அல்லது பிற்படுத்தப்பட்டவனும்கூட ஒரு சமையல்காரராகக் கூட நுழைய முடியவில்லை. ஜீயரை சங்கராச்சாரி ஏற்றுக்கொள்ள மாட்டார். சங்கராச்சாரியை ஜீயர் ஏற்றுக் கொள்ள மாட்டார். ஆனால் இரண்டு பேருமே தீண்டாமையைக் கடைப்பிடிப்பதில் ஒன்றாக இருக்கிறார்கள்.

ஒருமுறை சீரங்கத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் கோயில் நுழைவுப் போராட்டம் நடத்தியபொழுது அவர்களை அங்கே நுழையக் கூடாது என்று அங்குள்ள பார்ப்பனர்கள் திட்டமிட்டு கோயிலில் நுழையவரும் தாழ்த்தப்பட்டவர்கள்மீது பெண்களைப் பயன்படுத்தி மிளகாய்ப் பொடியைத் தூவி அவர்களைக் கட்டையால் அடித்து விரட்டினார்கள் பார்ப்பனர்கள். அப்பொழுது அந்தக் கலவரத்திற்குக் காரணம் பெண்கள்தான் என்பதை அறிந்த காவல்துறையினர் தடியடி நடத்தி பெண்களை விரட்டி அடித்தனர். இதனைக் கேள்வியுற்ற சந்திரசேகரேந்திர சங்கராச்சாரி கண்ணீர் விட்டு அழுதாராம். எதற்காக? தாழ்த்தப்பட்டவர்களை கோயிலுக்குள் நுழைய விடவில்லையே என்பதற்காகவா? இல்லையில்லை. அவர்களை நுழைய விடாமல் மிளகாய்ப்பொடி தூவிய பொம்பளை ரவுடிகளை காவல்துறையினர் தடியடி நடத்தி விரட்டியடித்தார்களே என்றுதான் அவர் கண்ணீர் சிந்தினார் என்று ‘இந்துமதம் எங்கே போகிறது?’ என்ற நூலில் அக்னிஹோத்திரம் இராமானுஜ தாத்தாச்சாரி குறிப்பிடுகிறார்.

ஆக அவர்களுக்குள் எவ்வளவுதான் இணக்கமில்லை என்று சொன்னாலும் தீண்டாமை விசயத்தில் அனைவரும் ஒன்றாகத்தான்

இருக்கிறார்கள்.

அதேபோல பூரி சங்கராச்சாரி நம்ம ஊர் காஞ்சி சங்கராச்சாரியை சங்கராச்சாரியாராகவே அங்கீகரிக்க மாட்டார். காஞ்சிமடம் ஆதிசங்கரரால் கட்டப்பட்டது அல்ல என்று சொல்லக் கூடியவர்தான் பூரி சங்கராச்சாரி. அப்படிப்பட்ட பூரி சங்கராச்சாரிக்கும், காஞ்சி சங்கராச்சாரிக்கும் தீண்டாமை விசயத்தில் ஒரே கருத்துத்தான்.

இப்படிப்பட்ட ஜீயர், சங்கராச்சாரி போன்றவர்கள்தான் இன்று இந்துமதத்தின் அத்தாரிட்டியாகக் கருதப்படக்கூடியவர்கள். அவர்களே இன்னும் தீண்டாமையை அங்கீகரிக்கின்ற பொழுது சங்பரிவார்க்கூட்டம் ஹிந்து சன்னியாசிகள், துறவியர்கள் ஒன்றுகூடி சமுதாயத்தில் நிலவி வரும் தீண்டாமைக் கொடுமைக்கு சாஸ்திர அங்கீகாரம் கிடையாது என்று தீர்மானம் இயற்றியதாக புருடா விடுகிறது.

அப்படியானால் அவர்கள் சொல்லும் ஹிந்து சன்னியாசிகள் துறவியர்கள் பட்டியலில் இந்த காஞ்சி சங்கராச்சாரி, பூரி சங்கராச்சாரி, சீரங்கம் ஜீயர் யாரும் வர மாட்டார்களா?

வேறு யார் யாரெல்லாம் ஹிந்து சன்னியாசிகள். துறவியர் பட்டியலில் வருவார்கள்?

அந்த சன்னியாசிகள் துறவிகள் எப்பொழுது அதனை அறிவித்தார்கள்? அவர்கள் அறிவித்து எத்தனை ஆண்டுகள் ஆகிவிட்டன? அதற்குப் பிறகாவது அந்தத் தீண்டாமை ஒழிந்து விட்டதா? அந்த சன்னியாசிகள் துறவியர்கள் அத்தீண்டாமையை ஒழிக்க எடுத்த நடவடிக்கை என்ன? சாதாரண பொதுமக்களிடம்கூட வேண்டாம். இத்தகைய பெரிய மனிதர்களையாவது திருத்த அந்த சன்னியாசிகள் முயற்சித்திருக்க வேண்டாமா? இவ்வளவு நாள் போனது போகட்டும். இப்பொழுது இந்த பூரி சங்கராச்சாரி சொல்லியிருக்கிறாரே. அதனை மத்தியப்பிரதேச ஆளுனரும் ஆமோதித்திருக்கிறாரே! அந்த இரண்டுபேர் மீதும் அந்த சன்னியாசிகளும் துறவிகளும் நடவடிக்கை எடுப்பார்களா? அந்த சன்னியாசிகள் துறவியர்கள் இப்பொழுதும் இருக்கிறார்களா? அல்லது இறந்துவிட்டார்களா? அவர்கள் உயிரோடு

இருக்கும்போதே எவ்வளவு தீண்டாமைக் கொடுமைகள் நடந்தேறுகின்றன?

## 4. ஜெகஜீவன்ராம், ஜித்தன்ராம் மான்ஜிக்கு ஏற்பட்ட அவமானம்

இந்தியாவின் முப்படைகளுக்கும் தளபதியாக விளங்கிய இந்தியப் பாதுகாப்பு அமைச்சராக இருந்த பாபு ஜெகஜீவன்ராம் அவர்கள் காசியிலுள்ள இந்து பல்கலைக்கழகத்தில் சம்பூர்ணானந்த் என்பவரது சிலையைத் திறந்தார் என்பதற்காக அந்த சிலைக்கே கங்கை நீரை ஊற்றித் தீட்டுப் போக்கினார்களே! அப்பொழுது அந்த சன்னியாசிகள், துறவிகள் எங்கே போயிருந்தார்கள்? என்ன செய்துகொண்டிருந்தார்கள்?

அது கடந்த காலம். அதை விட்டு விடுவோம். இப்பொழுது 2014ல் பீகார் முதலமைச்சர் ஜித்தன்ராம் மஞ்ஜி கோயிலுக்குள் சென்று கடவுளை வழிபட்டார் என்பதற்காக அந்தக் கோயிலில் தீட்டுப் போக்கியிருக்கிறார்களே அர்ச்சகப் பார்ப்பனர்கள்?

ஒரு தாழ்த்தப்பட்ட நீதிபதி அமர்ந்த நாற்காலியில் உயர்ஜாதி நீதிபதி ஒருவன் அமரமாட்டேன் என்று அடம் பிடித்து அந்த நாற்காலியை கங்கை நீர்கொண்டு சுத்தம் செய்து அதன்பிறகு அமர்ந்தானே!

பிரதமராகவே இருந்தாலும், பாதுகாப்பு மந்திரியாக இருந்தாலும், ஒரு மாநிலத்தை ஆளும் முதலமைச்சராகவே இருந்தாலும் நீதிபதியாகவே இருந்தாலும் நீங்கள் தீண்டத்தகாதவர்தான். அடுத்த வேளைச் சோற்றுக்கே வழியில்லாவிட்டாலும் அழுக்கு வேட்டியைத் துவைத்துக்கட்ட வக்கில்லாவிட்டாலும் ஒரு பரதேசிப் பார்ப்பானைவிட நீங்களெல்லாம் கீழானவர்கள்தான் என்கின்ற மனப்பான்மை இருக்கிறதே அந்தத் திமிர்த்தனத்தை ஒழித்துக்கட்ட ஆர்எஸ்எஸ் சங்பரிவார்க் கும்பல் செய்தது என்ன?

தீண்டாமை அதிகாரப் பூர்வமாக அட்டாணிக்கால் போட்டு கோயிலுக்குள் அதன் கருவறைக்குள் உட்கார்ந்திருக்கிறதே! அதை மாற்றியமைக்க ஆர்எஸ்எஸ் கும்பல் செய்தது என்ன? அனைத்து ஜாதியினரும் அர்ச்சகரானால் இத் தீண்டாமைக் கொடுமை ஒழிந்துபோகுமே! அந்தச் சட்டத்திற்குத் தடை வாங்கியிருக்கிறார்களே திமிர் பிடித்த பார்ப்பனர்கள், அந்தத் தடையை உடைக்க இதுவரை ஒரு

துரும்பையாவது அசைத்ததுண்டா ஆர்எஸ்எஸ் கும்பல்?

தனிப்பட்ட நபர்களுக்கு நேர்ந்த அவமானமாக இதைக் கருத முடியாது. சமுதாயத்தில் அனைத்து ஒடுக்கப்பட்ட மக்களின் மீதும் நடத்தப்பட்ட தாக்குதலாகத்தான் இவற்றையெல்லாம் கருத வேண்டும். மக்கள் மனங்களில் மண்டிக்கிடக்கும் மத சாஸ்திர சம்பிரதாயங்கள்தான் இதற்கெல்லாம் காரணம். மக்கள் மனதை சுத்தப்படுத்துகின்ற வேலையை ஆர்எஸ்எஸ் கும்பல் ஒருபோதும் செய்யாது. மாறாக அந்த மக்களை தங்கள் பக்கம் ஈர்த்து வைத்துக்கொண்டு மதவெறியை ஊட்டி பார்ப்பன ஆதிக்கத்தைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான் இவர்களின் நோக்கம்.

அதற்காக எத்தகைய பொய்யையும் அவிழ்த்து விடுவார்கள் என்பதற்கு ஒரு அடையாளம்தான் அம்பேத்கருடன் ஆர்எஸ்எஸ் காரரான தெங்கடிஜியை இணைத்து வைத்துப் பேசுவதும் ஆகும். இறந்துபோன மனிதர் மீண்டும் பிறந்து வந்து சாட்சி சொல்லப் போகிறாரா என்ன என்கின்ற எண்ணத்தில் இதுபோன்ற பொய்களை அவர்கள் அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அவர் மீண்டும் பிறந்து வரவேண்டிய அவசியமே இல்லை. அவரது பேச்சுக்களும் எழுத்துக்களும் காலம் காலமாக நிலைத்து நின்று இவர்களின் முகத்திரையைக் கிழித்துக்கொண்டே இருக்கும். அதனை நாம் தொடர்ந்து செய்வோம்.

தீண்டாமை ஒழிய வழி!

வேறு ஒன்றும் ஆர்.எஸ்.எஸ்.காரர்கள் செய்ய வேண்டியதில்லை. அம்பேத்கர் அய்ந்து முதல் பத்து ஆண்டுகளுக்கு நான் காத்திருக்கத் தயார். தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஒருவரை சங்கராச்சாரியாக்கி அவர் காலில் ஒரு நூறு பார்ப்பனக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் விழுந்து வணங்கத் தயாரா? என்று கேட்டாரே, அதை மாத்திரமாவது செய்து காட்ட சங் பரிவார்க் கும்பல் தயாரா?

தீண்டாமையை அவர்களே கடைப்பிடித்தாலும் தீண்டாமையின்

கொடுமையினை அவர்களால் நியாயப்படுத்த முடியவில்லை. ஆனாலும் அதனைப் போக்கவும் அவர்கள் முன் வருவதில்லை. ஒப்புக்காக நாங்களும் தீண்டாமையை ஏற்றுக் கொள்வதில்லை. அதனை ஒழிக்கவே பாடுபடுகிறோம் என்று பசப்புகிறார்கள். ஆனால் அதனை ஒழிக்க உருப்படியான எதனையும் அவர்கள் செய்வதுமில்லை.

இவர்கள்தான் இந்துமதத்தைப் பாதுகாப்பதற்காகவே தாங்கள் அவதாரம் எடுத்துள்ளதாகக் கூறி வருகிறார்கள்.

அந்த இந்துமதமே தீண்டாமை என்கின்ற அடித்தளத்தில் கட்டப்பட்ட ஒரு கட்டிடம்தானே! இந்துமதம் என்ற ஒன்று தனியாகக் கிடையாது. அதனை தோற்றுவித்தது யார்? அதன் காலம் என்ன? அதன் கோட்பாடு என்ன? என்பதற்கு எந்தவித ஆதாரமும் கிடையாது.

ஜாதிகளின் தொகுப்புத்தான் இந்துமதம். அந்த ஜாதிகள்தான் தீண்டாமைக்கு ஆதாரம். அந்த ஜாதிகளை ஒழிக்காமல் தீண்டாமையை ஒழிக்க முடியாது. அந்த ஜாதிக்கு ஆதாரம் இந்துமதம். அந்த இந்துமதம் இருக்கின்ற வரையும் ஜாதிகளை ஒழிக்க முடியாது. அந்த இந்து மதத்திற்கு அடிப்படை வருணாசிரமதர்மம். அந்த வருணாசிரமம் ஒழிக்கப்படாமல் தீண்டாமையை ஒழிக்க முடியாது.

இவர்கள் எல்லோருமே வருணாசிரம தர்மத்தைக் காக்க வேண்டும் என்று சொல்லக் கூடியவர்கள். தீண்டாமையை ஒழிக்கப் புறப்பட்ட காந்திகூட வருணாசிரமம் நல்லது. அது பாதுகாக்கப்பட வேண்டும் என்ற கருத்தைக் கொண்டவர்தான்.

தந்தை பெரியார் அவர்களுக்கு காந்தியாரிடம் கருத்து வேறுபாடு ஏற்படுவதற்குக் காரணமே காந்தியாரின் இந்த வருணாசிரம ஆதரவுதான். வருணாசிரமத்தை அப்படியே வைத்துக்கொண்டு தீண்டாமையை ஒழிக்க முடியாது என்பதனை காந்தியாரிடமே பெரியார் அவர்கள் நேருக்குநேர் வாதம் செய்திருக்கிறார்கள்.

அதே கொள்கையைக் கொண்டவர்கள்தான் இந்த இராம.கோபாலன், இல.கணேசன் போன்ற ஆர்எஸ்எஸ் காரர்களும்.

இவர்கள் ஒன்றும் அறியாத அப்பாவிகள் அல்ல. எல்லாம் தெரிந்திருந்தும் தெரியாததுபோல் நடிக்கும் ஏமாற்றுப் பேர்வழிகள்.

தொடாதே, தீண்டாதே, கிட்ட நெருங்காதே என்று கீழ்ஜாதி மக்களை இவர்கள் செய்த கொடுமை தாங்காமல் தங்களைத் தொட்டுத் தீண்டிய அன்பு பாராட்டிய எல்லா உதவிகளையும் செய்த கிறிஸ்தவ மதத்திற்கும் இஸ்லாம் மதத்திற்கும் அத்தீண்டத்தகாதவர்கள் மாறியதை இந்த இந்துமதக் காவலர்களால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

தீண்டாமைக் கொடுமை தாங்காமல் எல்லாத் தீண்டத்தகாதவர்களும் மதம் மாறிவிட்டால் அத் தீண்டத்தகாதவர் செய்த துப்புரவுப் பணியை யார் செய்வார்கள்? யார் தங்களது மலத்தைத் தலையில் சுமப்பார்கள்? தங்களுக்கு செருப்புத் தைத்துக் கொடுப்பது யார்? தங்கள் வீட்டில் இறந்த கிழடுகளை யார் அப்புறப்படுத்திப் புதைப்பது? எரிப்பது? தங்கள் வீட்டில் இறந்த ஆடுமாடுகளை அப்புறப்படுத்தி சுத்தம் செய்வது யார்? என்று கவலைப்படுகின்ற இவர்கள் அத்தீண்டத்தகாத மக்களை அப்படியே இந்துமதத்தில் தக்க வைத்துக் காலம்காலமாக அவர்கள் தொண்டூழியம் செய்து அடிமைப்பட்டது போதாதென்று மேலும் அத்தொழில்களைச் செய்து காலம் காலத்திற்கு அவர்கள் துன்பத்தில் உழல வேண்டும் என்ற கெட்ட எண்ணத்தில்தான் இந்த இராம.கோபாலன்களும், இல கணேசன்களும் தந்திர வார்த்தையைக் கூறுகிறார்கள்.

இந்து மதத்தில் தீண்டாமை இருக்கிறது என்பதை ஒத்துக்கொண்டால் அந்த மக்களைத் தங்கள் மதத்திலேயே தக்க வைத்துக் கொள்ள முடியாதல்லவா? அதனால்தான் இந்துமத்தில் தீண்டாமையே இல்லை. அத்தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரத்தில் இடமேயில்லை என்று பசப்புகிறார்கள்.

## 5. பெரிய மனிதர்களின் தீண்டாமைவெறி!

இந்த இராம.கோபாலன், இல.கணேசன் கும்பல் காஞ்சி சங்கராச்சாரிமீது மிகுந்த மரியாதை கொண்டவர்கள். இந்துமதத்தின் அத்தாரிட்டியே அந்த சங்கராச்சாரிதான் என்ற கருத்துக் கொண்டவர்கள்தான் இவர்கள். அந்த சங்கராச்சாரி தீண்டாமை குறித்து என்ன கருத்துக் கொண்டிருந்தார்?

‘‘தீண்டாமை ஷேமகரமானது’ என்று தெய்வத்தின் குரல் என்ற நூலில் எழுதவில்லையா? தீண்டாமையை ஒழிக்கப்போவதாகப் பேசி வந்த காந்தியாரிடமே சங்கராச்சாரியார் ‘தீண்டாமை சாஸ்திர சம்மதமானது; அதனை ஒழிக்க நான் சம்மதிக்க மாட்டேன்’ என்று கூறி கும்பகோணத்திற்கு வந்த காந்தியாருக்கு தனது சீடர்களை விட்டு கறுப்புக் கொடி காட்டச் செய்தாரே, அவருக்கு சாஸ்திரம் தெரியாதா?

அந்த சங்கர மடத்தின் தலைவராக இருந்து இறந்துபோன சுப்பிரமணிய சங்கராச்சாரி காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயில் மேலாளரைப் போட்டுத்தள்ளி விட்டு ஜெயிலுக்குப் போனபோதுகூட வேறு ஜாதிக்காரன் சமைத்ததைச் சாப்பிட மாட்டேன் என்று அடம் பிடித்ததால் பார்ப்பன கான்ஸ்டபிளை விட்டு சமைக்கச் செய்து அதனைச் சாப்பிட்டாரே! அது தீண்டாமை இல்லையா? ஏன் இன்னமும் அந்த சங்கர மடத்தில் ஒரு பியூனாகக்கூட ஒரு தாழ்த்தப்பட்டவன் அனுமதிக்கப் படுவதில்லையே! அது தீண்டாமை இல்லையா?

இந்த நாட்டின் முதல் குடிமகன் என்ற குடியரசுத்தலைவராக மிக உயர்ந்த பதவியில் இருந்த வி.வி.கிரி வெளிநாட்டுக்குச் செல்லும்போது அந்த நாட்டுக்காரன் சமைத்ததைச் சாப்பிடக் கூடாது என்பதற்காக கூடவே ஒரு பார்ப்பன சமையல்காரரை அழைத்துச் சென்றாரே, அது தீண்டாமை இல்லையா? அவருக்கு சாஸ்திரம் தெரியாதா?

இந்த இராம.கோபாலன்கள் உயர்வாகப் போற்றுகின்ற இன்னொரு மனிதர் திலகர். தீண்டாமையை ஒழிக்கக் கூடாது என்பதற்காக காங்கிரஸ் மாநாடு முடிந்த அடுத்தநாள் சமூகசீர்திருத்த மாநாடு நடத்தியவர்களை எதிர்த்துத் தாக்குதல் நடத்தியவர்தான் அந்தத் திலகர். சமூக சீர்திருத்தம் என்பதையே ஏற்றுக் கொள்ளாதவர்தான் திலகர்.

தாழ்த்தப்பட்டவர்களை காங்கிரஸ் மாநாடு நடந்த பந்தலுக்கு உள்ளேயே அனுமதிக்கக் கூடாது என்றவர்தான் அந்தத் திலகர்.

பூனாவில் கிறிஸ்தவ மிஷினரி நடத்திய ஒரு விழாவில் பங்குகொண்ட திலகர் கிறிஸ்தவப் பாதிரியார் அனைவருக்கும் வழங்கிய தேநீரையும் பிஸ்கட்டையும் உண்டார் என்பதற்காக சாதிவிலக்கம் செய்யப்பட்டார். அப்படி சாதிவிலக்கம் செய்ததை எதிர்த்துப் பேசாமல் அதற்குப் பரிகாரம் செய்தவர் திலகர்.

அவர் வங்காளத்துக்குச் செல்லுகின்றபொழுது அங்குள்ள வங்கத்துப் பிராமணர் சமைத்ததையே உண்ண மாட்டாராம். மகாராட்டிரத்திலிருந்து மராட்டிய சித்பவன் பார்ப்பனர் ஒருவரை உடன் அழைத்துச் சென்று அவரைச் சமைக்கச் சொல்லி அதைத்தான் சாப்பிடுவாராம் அந்தத் திலகர் பெருமான். இது தீண்டாமை இல்லையா? அந்தத் திலகருக்கு சாஸ்திரம் தெரியாதா?

பாரதீய மஸ்தூர் சங்கத்தைத் துவக்கியவர் தெங்கடி. அவர் ஆர்எஸ்எஸ் தலைவரான குரு கோல்வால்கரின் ஆலோசனையின் பேரில் திலகரின் பிறந்தநாளான ஜூலை 23ந் தேதி அந்த சங்கத்தைத் துவக்கினதாகப் பெருமைபடப் பேசுவார்கள். அந்த தெங்கடி தீண்டாமையை ஒழிக்க அம்பேத்கருடன் சேர்ந்து பாடுபட்டது போன்ற தோற்றத்தை ஆர்எஸ்எஸ் கும்பல் உருவாக்குகிறதே! உண்மை என்ன? திலகரைப் பெருமையாகக் கருதுகின்றவர்கள் திலகர் அம்பேத்கருக்கு என்ன செய்தார் என்பதையும் வெளி உலகுக்குச் சொல்ல வேண்டும் அல்லவா?

1920ல் அண்ணல் அம்பேத்கர் ‘மூக் நாயக்’ என்ற பத்திரிகையைத் துவக்குகிறார். அந்தப் பத்திரிகை வெளிவருவது பற்றி காசுகொடுத்து விளம்பரம் கொடுத்தபொழுது திலகர் நடத்திய ‘கேசரி’ என்ற பத்திரிகை அதனை வெளியிட மறுத்து விட்டது. ஒரு தீண்டத்தகாதவன் நடத்துகின்ற பத்திரிகைக்கு விளம்பரம் வெளியிடுவதே தீட்டு என்று கருதியது அந்த கேசரி.

இவர்கள் திலகரையும் தலைவராக ஏற்றுக் கொள்வார்களாம். அம்பேத்கரையும் இவர்கள் மதித்து தீண்டாமையை ஒழிக்க

உதவினார்களாம். எவ்வளவு இரட்டைவேடம்?

காஞ்சி சுப்பிரமணிய சங்கராச்சாரியை 2014ல் இரண்டு பேர் சந்திக்கிறார்கள். இரண்டுபேருமே பாரதீய ஜனதாக் கட்சியைச் சேர்ந்தவர்கள்தான். ஒருவர் அமைச்சர். இன்னொருவர் அமைச்சருமல்ல. கட்சியின் எந்தப் பதவியிலும் இல்லாதவர். பதவியில் இல்லாதவர் சங்கராச்சாரியைச் சந்திக்கச் சென்றபோது அவருக்கு நாற்காலி போட்டு தனக்குச் சமமாக அமர வைத்த சங்கராச்சாரி பாஜக வின் மாநிலத் தலைவராக இருந்து மத்திய அமைச்சரான ஒருவருக்கு நாற்காலி கூடத் தராமல் தரையில் உட்கார வைத்துப் பேசுகிறார்.

நாற்காலியில் உட்கார வைக்கப்பட்டவர் சு.சாமி. தரையில் உட்கார வைக்கப்பட்டவர் பொன் இராதா கிருஷ்ணன். சு.சாமியின் முதுகில் பூணூல் தொங்குகிறது. பொன்னாருக்கு அது இல்லை. இது தீண்டாமை இல்லையா? ஜாதித்திமிர் இல்லையா? இராம கோபாலன் விளக்குவாரா? இதற்குக் காரணமாக இருப்பது எது?

அதே சுப்பிரமணிய சங்கராச்சாரியை இராம.கோபாலன். அய்யர்வாள் பார்க்கப் போகிறார். அவரைத் தொட்டு ஆப்பிளைக் கொடுக்கிறார் சங்கராச்சாரி. அந்த சங்கராச்சாரியை இந்து மக்கள் கட்சித் தலைவர் அர்ஜூன் சம்பத் சந்திக்கச் சென்றபோது அவரைத் தொட்டுவிடாமல் மேலே தூக்கி ஆப்பிளைப் போடுகிறார். அதனை மிகவும் பவ்யமாக அரஜூன் சம்பத் குனிந்து வாங்கிக் கொள்கிறார். இது தீண்டாமை அல்லாமல் வேறு என்ன?

பார்ப்பனர்கள் சாப்பிடுவதை மற்றவர்கள் பார்த்தால் தீட்டு என்று கூறி யாரும் பார்க்காதபடி பார்ப்பனர்கள் சாப்பிட்டு வந்தார்களே! அதுவும் தீண்டாமைதானே? வெள்ளைக்காரன் கண்டுபிடித்த இரயில் நம் நாட்டிற்கு வந்தபோது இரயில்வே உணவகங்களில் பிராமணாள் சாப்பிடும் இடம் என்று தனியாக இடம் ஒதுக்கி மற்றவர்கள் பார்க்காதபடி அமர்ந்து சாப்பிட்டார்களே பார்ப்பனர்கள், அது தீண்டாமை இல்லையா? வெள்ளைக் காரனையே உங்களுக்கு ஆதரவாக இழுத்து இத்தகைய சலுகைகளைப் பெற்றது எப்படி?

‘நீங்கள் எங்கள் மதத்திலும் ஜாதியிலும் சாஸ்திரத்திலும்

கைவைக்காமல் இருந்தால் வெள்ளையர் ஆட்சிக்கு முழு ஒத்துழைப்புத் தருகிறோம் என்று கூறி உங்களுடைய ஜாதி உயர்வை நீங்கள் பாதுகாத்துக் கொள்ளவில்லையா?

1833ல் விக்டோரியா மகாராணியோடு ஏற்பட்ட உடன்படிக்கையின்படி எழுதப்பட்ட அரசியல் சட்டத்தில் பார்ப்பனர்களுக்கென்று தனிச் சலுகைகள் பெற்றது எப்படி? ஒரு கொடிய குற்றம் புரிந்த பார்ப்பான் ஜெயிலுக்குப் போனாலும் ஜெயிலில் அவனுடைய மலத்தை அவனே எடுத்துப் போட வேண்டியதில்லை. ஆனால் உணவுக்கு வழியில்லாமல் ஒரு கவளம் உணவைத் திருடிவிட்டு ஜெயிலில் இருக்கும் பறையன் அந்தப் பார்ப்பானுடைய மலத்தை அப்புறப்படுத்த வேண்டும் என்று சிறை விதிகளில் எழுதிக்கொள்ளவில்லையா?

அனைத்துக் கைதிகளும் இடுப்பில் அரைஞாண் கயிறு உட்பட அனைத்தும் நீக்கப்பட வேண்டும் என்று இருந்தாலும் பார்ப்பனக் கைதியிடம் பூணூலை அப்புறப்படுத்தக்கூடாது என்று பார்ப்பானுக்கு சலுகை பெற்றது எப்படி?

பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்கூட பார்ப்பானுக்குத் தனி வார்டு ஒதுக்கிக்கொண்டது எப்படி?

எல்லாம் உங்கள் சாஸ்திரங்களைக் காட்டித்தானே?

1871ல் திருச்செந்தூர்க் கோயிலில் கோயில் நுழைவு உரிமை வேண்டும் என்று நாடார்கள் தொடர்ந்த வழக்கில் எந்த எந்த ஜாதிக்காரன் எந்த இடத்தில் நின்று கடவுளை வழிபட வேண்டும் என்று வெள்ளைக்கார நீதிபதியையே தீர்ப்புச் சொல்ல வைத்தீர்களே! மதுரை மீனாட்சி கோயிலிலும் நாடார்கள் நுழைவதற்கு அனுமதியில்லை என்று இலண்டன் பிரிவி கவுன்சிலிலேயே தீர்ப்பு வழங்கப்பட்டதே! அவையெல்லாம் உங்கள் சாஸ்திரங்களை மீறக்கூடாது என்று வெள்ளைக்காரர்களுடன் நீங்கள் செய்துகொண்ட ஒப்பந்தப்படி சாஸ்திரங்களைப் பார்த்து வழங்கப்பட்ட தீர்ப்புகள்தானே?

மகாராஷ்டிரா மாநிலம் மகாத் நகராட்சிக்குச் சொந்தமான குளத்தில்

அண்ணல் அம்பேத்கரும் அவர்தம் தொண்டர்களும் நீர் அருந்தினார்கள் என்பதற்காக அந்தக் குளம் தீட்டாகி விட்டதாகக் கூறி ஆயிரத்தி எட்டுக் குடங்களில் மாட்டுச்சாணம், மாட்டின் சிறுநீர், பால், தயிர் என அனைத்தையும் கலந்து அதனைக் குளத்தில் கரைத்து தீட்டுப் போக்கினார்களே, அது தீண்டாமை இல்லையா?

உங்கள் பெரிய புராணத்தில் நடராசரைத் தரிசனம் செய்ய வந்த நந்தனாரை கோயிலுக்குள் நுழைய விடாமல் தடுத்தது தீண்டாமை இல்லையா?

இப்படி ஏராளமான உதாரணங்கள் உங்கள் இந்து மதத்தில் தீண்டாமைக்கான ஆதாரம் இருக்கும்போது இந்துமத சாஸ்திரங்களில் தீண்டாமைக்கு ஆதாரமே இல்லை என்பது வடிகட்டின பித்தலாட்டம் இல்லையா?

ஒரு குற்றவாளியைக் கூட ஆதாரம் இல்லாமல் தண்டிக்கக் கூடாது என்கிறபோது ஆதாரமே இல்லாத தீண்டாமையை இவ்வளவு நாள் கடைப்பிடித்தது கிரிமினல் குற்றம் இல்லையா?

அவ்வாறு ஆதாரம் இல்லை என்று நீங்கள் கூறுவதை ஒத்துக்கொண்டால் அப்படி ஆதாரம் எதுவும் இல்லாமலேயே தீண்டாமையைக் கடைப்பிடித்து இந்திய சமுதாயத்தில் நான்கில் ஒரு பகுதி மக்களைக் கொடுமைப்படுத்திய கூட்டத்திற்கு என்ன தண்டனை விதிப்பது?

# 6. இந்தக் கொடுமைகளுக்கெல்லாம் யார் பொறுப்பு?

இந்தக் கொடுமைகளுக்கெல்லாம் யார் பொறுப்பேற்பது? பொறுப்பேற்காதது மட்டுமல்லாது இன்னமும் அதனை நியாயப்படுத்தவும் பாதுகாக்கவும் முனைகின்றார்களே! அவர்களுக்கு என்ன தண்டனை வழங்கலாம்?

இன்று உலகில் பல தீவிரவாதச் செயல் நடந்துகொண்டிருக்கிறது. பல குண்டுவெடிப்புக்கள், விமானக் கடத்தல்கள் போன்ற செயல்கள் நடக்கின்றன. ஆனால் அதனைச் செய்தவர்கள் தாங்கள்தான் என்று பொறுப்பேற்றுக் கொள்வார்கள். இன்னின்ன காரணங்களால் இந்த குண்டுவெடிப்பை நிகழ்த்தினோம். எங்களுக்கு இன்னின்ன கோரிக்கைகள். அந்தக் கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும் என்று கோரிக்கை வைக்கிறார்கள். இந்தக் காரணத்தால் நாங்கள் விமானத்தைக் கடத்தினோம். அந்தக் கோரிக்கையை நிறைவேற்றித் தரவேண்டும் என்று மிரட்டவாவது செய்வார்கள்.

ஆனால் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக இந்த நாட்டுக்குச் சொந்தக் காரர்களான ஆதிகுடிகளை மண்ணின் மைந்தர்களை மிருகங்களையும் விட மிகமிகக் கேவலப்படுத்தி அந்த சமுதாயத்தின் வளர்ச்சியையே தடுத்ததோடு இன்னமும் அந்தக் கொடுமைகள் தொடர்ந்து கொண்டிருக்கிறதே அந்தக் கொடுமைக்கு யார் பொறுப்பு? யார் அந்தத் தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறார்களோ அவர்கள் குற்றவாளிகளா? இல்லையா?

இதற்கெல்லாம் இராம.கோபாலன்கள் பதில் சொல்வார்களா?

அண்ணல் அம்பேத்கரும் தந்தை பெரியாரும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் ஆவார்கள். அவர்கள் இருவரும் தீண்டாமை ஒழிய வேண்டும் என்றும் ஜாதி ஒழிய வேண்டும் என்றும் தங்கள் வாழ்நாள் முழுவதும் பாடுபட்டார்கள்.

தந்தை பெரியாருடைய தத்துவங்களை யாரும் திரிபுவாதம்

செய்துவிடக் கூடாது என்பதில் திராவிடர் கழகத் தலைவர் மானமிகு அய்யா வீரமணி அவர்கள் கண்ணுங்கருத்துமாக இருந்து பாதுகாத்து வருகிறார்கள். ஆனால் அண்ணல் அம்பேத்கருடைய கருத்துக்களைப் பாதுகாக்கவும் அவருடைய சிந்தனைகளில் யாரும் திரிபுவாதம் செய்துவிடாமலும் பாதுகாக்கக்கூடிய தலைமையோ அமைப்போ முறையாக இல்லாததால் யார் யாரோ அம்பேத்கருக்கு விழா எடுத்து அவருடைய கொள்கைக்கு நேர் எதிரான செயல்களைச் செய்துவருகிறார்கள்.

ஆர்எஸ்எஸ் சங்க் பரிவார் இந்துமுன்னணி, பாஜக கும்பலைச் சேர்ந்தவர்கள்கூட அம்பேத்கருக்கு விழா எடுக்கிறோம் என்று சொல்லி அம்பேத்கர் சிலைகளுக்கு மாலை அணிவித்து நாங்களும் அம்பேத்கரை மதிக்கிறோம் என்று ஏமாற்றி தாழ்த்தப்பட்ட மக்களை தங்கள் அமைப்புக்களுக்குள் சேர்த்து தங்களுக்கு அடியாட்களாகப் பயன்படுத்தி வருகிறார்கள்.

அப்படிப் பயன்படுத்துபவர்கள் அம்பேத்கருடைய கருத்துகளை ஏற்றுக் கொள்வதில்லை. மக்களிடமும் அதனைக் கொண்டு செல்வதில்லை.

## 7. அம்பேத்கர் தீண்டாமை குறித்து என்ன கூறுகிறார்?

‘ஒரு இந்து தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறான் எனில் அதற்குக் காரணம் இந்துமதம் அவனுக்கு அவ்வாறு கட்டளை இட்டிருப்பதுதான். தீண்டாதோரை நிலைபெற்றுள்ள கட்டுக்கோப்பினை எதிர்த்துத் தீண்டாதோர் புரட்சி செய்யாத வண்ணம் இந்துக்கள் கொஞ்சமும் ஈவு இரக்கமின்றியும் சட்டவிரோதமாகவும் கடைப்பிடிப்பதற்குக் காரணம் இந்துமதக் கட்டுப்பாடு தெய்வீகமானது. அதனால் அது புனிதமானது என்று சொல்வதோடு மட்டுமல்ல இந்தக் கட்டுப்பாட்டினை எல்லா இயன்ற வழிகளிலும் பேணிக்காப்பது கடமை என்று விதித்திருப்பதுதான். அவர்கள் மனிதாபிமானக் குரலுக்கும் செவிசாய்ப்பதில்லை என்றால் அதற்குக் காரணம் அவர்கள் தீண்டாதோரை மனிதர்களாகவே கருதக் கூடாது என்று இந்துமதம் கட்டளை இட்டிருப்பதுதான். தீண்டாதோரை அடிப்பது, அவர்கள் சொத்துக்களைக் கொள்ளையடிப்பது, தீயிட்டுக்கொளுத்துவது, மற்றும் பல்வேறு கொடுமைகளை அவர்களுக்கு இழைப்பது ஆகிய செயல்களை கொஞ்சமும் மன உறுத்தலின்றிச் செய்வதற்குக் காரணம் இந்துமதம் அவர்களுக்கு இந்த சமூகக் கட்டுக் கோப்பினைக் காப்பாற்ற எந்தவிதப் பாவத்தையும் செய்வது தவறல்ல என்று போதிப்பதுதான்’’ என்று கூறுகிறார்.

இந்துமதம் எங்கே போகிறது? என்ற நூலில் அவ்வாறு தீண்டத்தகாதோரை மனிதர்களாகவே கருதக்கூடாது என்று இந்துமதம் ஏன் கூறுகிறது? நாம் கூறுவதைவிட அக்கிரஹாரவாசியான அக்கினிஹோத்திரம் இராமானுஜ தாத்தாச்சாரி ‘இந்துமதம் எங்கே போகிறது?’ என்ற நூலில் கூறுகிறார். கேளுங்கள்.

‘சூத்திரர்களைத் தனியாகப் பிரித்து வைத்த பிராமணர்கள் அனைத்து வகைகளிலும் பிராமணரல்லாதாரைக் கொடுமைப் படுத்தினார்கள். இப்படிச் செய்வதற்கு அவர்களது கையில் கசங்காமல் இருந்த மனுஸ்மிருதிதான் ரொம்ப உதவியாக இருந்தது.

மனு மூலம் சூத்திரர்களைக் கெடுபிடி செய்த பிராமணர்கள் இந்தக் கொடுமைக்கு அதிகமான கொடுமைகளை இன்னொரு பிரிவினருக்குச்

செய்தார்கள். யாருக்கு? சத்திரியர்களுக்கா? இல்லை. வைசியர்களுக்கா? இல்லை. சண்டாளர்களுக்கு.

சண்டாளர்களா**?** யாரவர்கள்**?**

மனு கூற்றுப்படி சண்டாளர்கள் யார் என்பதை என் எழுத்தில் கூற முடியவில்லை. என்னிடம் மகாத்மா கூறியதை அப்படியே உங்களுக்குத் தருகிறேன்.

'யார் அந்தச் சண்டாளர்கள்? துரோகம் செய்தவனை, கொலை பாதகனை, பத்தினிகளை வேட்டையாடுபவனை பொதுவாகச் சண்டாளர்கள் என்று கூறுவார்கள். ஆனால் மனு யாரைச் சண்டாளர்கள் என்கிறது தெரியுமா? சூத்திரர்களுக்குக் கீழ்ப்பட்டவர்கள், எல்லா விதத்திலும் ஒடுக்கப்பட வேண்டியவர்கள், வருணபேதத்தின் கடைசிக் கூட்டத்தினர், இப்படியாக அருவருப்புடன் வருணிக்கப்படும் தலித்துகளைத்தான் மனு தனது அகராதியில் பஞ்சமர்களென்றும் சண்டாளர்களென்றும் குறிப்பிட்டார்' என்று கூறுகிற தாத்தாச்சாரி காந்தியைச் சந்தித்த நிகழ்ச்சியைக் கூறுகிறார்.

தீண்டாமை ஒழிப்புப் பிரச்சாரத்திற்காக காந்தி கும்பகோணம் வந்தாராம். அப்போது இளைஞராக இருந்த தாத்தாச்சாரி உட்பட சில இளைஞர்கள் "தீண்டாமை ஒழிப்பில் ஈடுபடும் காந்தியாரே, திரும்பிப் போங்கள்! சனாதன தருமத்தை எதிர்க்காதீர்கள்" என்று முழக்கமிட்டு காந்திக்குக் கறுப்புக்கொடி காட்டினார்களாம்.

அந்த எதிர்ப்பை மீறி காந்தி அவர்கள் கூட்டத்தில் பேசிவிட்டு அவருக்குக் கறுப்புக்கொடி காட்டிய தாத்தாச்சாரி உள்ளிட்ட இளைஞர்களைக் கூப்பிட்டு, ஏன் கறுப்புக்கொடி காட்டுகிறீர்கள் என்று கேட்டாராம். இவர்கள் போராட்டம் பற்றிக் கூறிய உடன் "நீங்கள் மனுஸ்மிருதியைப் படித்ததில்லையா? மனுவில் பஞ்சமர்களைச் சண்டாளர்கள் என்று அபாண்ட வார்த்தைகளால் குறிப்பிட்டுள்ளார்கள்" என்று கூறிய காந்தி, சண்டாளர்கள் சூத்திர ஆணுக்கும் பிராமணப் பெண்ணுக்கும் பிறந்தவர்கள். அவர்களின் தகப்பனார் யார்? தாயார் யார்? என எண்ணிப் பாருங்கள். இதெல்லாம் புஸ்தகத்தில்தான் உள்ளது. நானாகச் சொல்லவில்லை. இவர்களைத்தான் நீங்கள்

தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கி வைத்துள்ளீர்கள்.” என்று காந்தி கூறியதாகக் கூறும் தாத்தாச்சாரி, பிராமண, சத்திரிய வைசிய, சூத்திர என்று பிரிக்கப்பட்ட வருணதருமத்தில் வருணக்கலப்பு, சாதிக்கலப்பு ஏற்படாமல் நிலையான சமுதாயம் (ஷிtணீதீறீமீ ஷிஷீநீவீமீtஹ்) அமைய பிராமணர்கள் செய்த சூழ்ச்சியினை விவரிக்கிறார்.

அவ்வாறு காந்தியை எதிர்த்து தாத்தாச்சாரியும் அவரைப் போன்ற இளைஞர்களும் போராடியதற்கு என்ன காரணம்?

அந்நிகழ்ச்சி நடந்தது 1925 காலக்கட்டம். அந்தக் காலக்கட்டத்தில்தான் காந்தி அடிகள் காஞ்சி சந்திரசேகரேந்திர சங்கராச்சாரியை சந்தித்து தீண்டாமையை ஒழிக்க ஆதரவு கோரியபோது “தீண்டாமை சாஸ்திர சம்மதமானது. தீண்டாமை ஷேமகரமானது. எனவே, தீண்டாமையை ஒழிக்க நான் சம்மதிக்க மாட்டேன்” என்று மறுத்துவிட்டார் சங்கராச்சாரி. வைசிய வருணத்தவரான காந்தியுடன் அவர் உரையாட தேர்ந்தெடுத்த இடம் ஒரு மாட்டுக் கொட்டகை என்பதும் அங்கு பேசினால் தீட்டு இல்லை என்பதாலும்தான் சங்கராச்சாரி அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்து காந்தியிடம் உரையாடினார் என்பதும் குறிப்பிடத் தக்கது.

தந்தை பெரியார் உள்ளிட்ட சமூக சீர்திருத்தவாதிகள் மற்றும் காந்தியாரின் தீண்டாமை ஒழிப்புக்கு செல்வாக்கு ஏற்படவே, பார்ப்பனர்கள் இந்துமகாசபை என்ற அமைப்பை உருவாக்கி மக்களை ஏய்க்க தீண்டாமை ஒழிய வேண்டும் என்று தீர்மானம் இயற்றுவார்கள். அதே ஆசாமிகள் வருணாசிரமசபை என்ற ஒன்று கூட்டி தீண்டாமை வேத சம்மதமென்றும் மனுதர்ம விதியென்றும் வருணாசிரம தர்மத்தைக் காப்பாற்ற வேண்டும் என்றும் அதற்கு விரோதமாய் இருக்கும் காந்தியை ஒழிக்க வேண்டும் என்றும் தீர்மானம் இயற்றுவார்கள். கும்பகோணத்திலும் அப்போது இந்துமகாசபை துவக்கப்பட்டு அதில் தீண்டாமை சாஸ்திர சம்மதமானது என்றும் அதை ஒழிக்கக் கூடாது என்றும் தீர்மானம் இயற்றி அந்தத் தீர்மானத்தின் அடிப்படையில்தான் தாத்தாச்சாரி போன்ற இளைஞர்கள் காந்தியை எதிர்த்துக் கறுப்புக்கொடி காட்டுகிறார்கள். அவ்வாறு தீர்மானம் இயற்றி இருப்பதைக் கண்டித்துப் பெரியார் குடியரசு ஏட்டில் (13&12&1925) எழுதியிருக்கிறார்கள் என விடுதலை வரலாற்றுச் சுவடுகள் பகுதியில் வெளியிடப்பட்டுள்ளது.(13&07&2008)

தாழ்த்தப்பட்ட மக்களைப் பஞ்சமர் என்றும் அவர்ணஸ்தர் என்றும் சண்டாளர் என்றும் இழிவுபடுத்துவது இந்துமதம். ஆரியர்கள் ஏற்படுத்திய நான்கு வருணத்தையும் ஏற்றுக் கொள்ளாத இந்நாட்டின் பூர்வகுடிகள்தான் தாழ்த்தப்பட்டவர்கள். அவர்களை வேசிப்பிள்ளைகள் என்று இழிவுபடுத்தி கீழ்மைப்படுத்துவது அயோக்கியத்தனம். அதனை அண்ணல் அம்பேத்கர் மிகத் தெளிவாக விளக்கி இருக்கிறார்கள்.

"சூத்திர ஆணுக்கும் பிராமணப் பெண்ணுக்கும் கூடாவொழுக்கத்தில் பிறந்த பிள்ளைகள்தான் சண்டாளர்கள் என்று மனு கூறியுள்ளார். இது உண்மையாக இருக்க முடியுமா? அப்படி உண்மையாக இருக்குமானால் பிராமணப் பெண்கள் தனது ஒழுக்கத்தில் உறுதியற்றவர்களாக இருந்தார்கள் என்றாகிவிடும். இது நம்ப முடியாததாகும். சண்டாளர்களின் மக்கள் தொகையை வைத்துப் பார்க்கும்போது ஒவ்வொரு பிராமணப் பெண்ணும் ஒரு சூத்திர ஆடவனுக்கு காமக்கிழத்தியாக இருந்தால்கூட சண்டாளர்களின் கணக்கைச் சரிக்கட்ட முடியாமல் போய்விடும்.

"இந்த நாட்டின் எண்ணற்ற மக்களின் தோற்றத்திற்கு இழிவைக் கற்பித்து அவர்களின் சமூக ஒழுக்க இழிவிற்கு வழிவகுத்திருக்கிறது" என்று மனுவைச் சாடும் அம்பேத்கர் "இந்த மக்கள் அனைவரும் சுதந்திரமாக வாழ்ந்திருக்கிற சூழ்நிலையில் அவர்களுடைய சாதியின் தோற்றம் கலப்பினால் உண்டானது என்று கூறுவது தவறானது என்று கூறுகிறார் அம்பேத்கர். இது மக்களின் குறிப்பாகப் பெண்களின் நடத்தையைக் கேவலப்படுத்திக் காட்டுகிறது" என்றும் அம்பேத்கர் எழுதுகிறார். (ஆதாரம்: அம்பேத்கர் எழுத்தும் பேச்சும், தொகுதி 8, பக்கம் 306)

## 8. பார்ப்பனப் பித்தலாட்டம்

மனுதர்மத்தில் பிரம்மாவின் முகத்தில் பிராமணனும், தோளில் சத்திரியனும், தொடையில் வைசியனும், காலில் சூத்திரனும் பிறந்ததாக எழுதப்பட்டிருக்கிறது. பஞ்சமர்கள் எங்கே பிறந்தார்கள் என்று எழுதப்படவில்லை. இதுபற்றித் தந்தை பெரியாரிடம் கேட்டதற்கு அவர்கள்தான் ஒரு தாய்க்கு இயற்கையாக எங்கே பிறக்க வேண்டுமோ அங்கே முறையாகப் பிறந்தார்கள் என்று கூறினாராம்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் அவர்கள் அந்த மனுதர்மம் பற்றி,

‘முகத்தில் பிறப்பாருண்டோ முட்டாளே!
தோளில் பிறப்பாருண்டோ தொழும்பனே!
இடையில் பிறப்பாருண்டோ எருமையே!
காலில் பிறப்பாருண்டோ கழுதையே!
நான்முகன் ஒருவன் உண்டோ கூறடா நாயே!
புளுகடா புகன்றவை அனைத்தும் போக்கிலியே!’

என்று பிறப்புப் பற்றிய பார்ப்பனப் புரட்டைச் சாடுகிறார்.

கைபர் போலன் கணவாய் வழியாக ஆடுமாடு மேய்க்க வந்த ஆரியக்கூட்டம் இந்நாட்டு உழைக்கும் மக்களை சூத்திரன் என்று பிரித்து வைத்து பார்ப்பானின் வைப்பாட்டி பிள்ளைகள் என்று இழிவுபடுத்தியது மட்டுமல்லாமல் சமுதாயத்துக்கு மிகவும் அத்தியாவசியமான பணிகளான பிணம் சுடுதல், மலம் எடுத்தல் உழவு செய்தல், செருப்புத்தைத்தல் போன்ற அத்தியாவசியமான தொழில்களைச் செய்து வந்தோரை பஞ்சமர் என்றும் அவர்ணஸ்தர் என்றும் புலையர் என்றும் தீயர் என்றும் தஸ்யூக்கள் என்றும் இழிவுபடுத்தி மிகமிகக் கேவலமாக நடத்தி வந்தார்கள். இந்தச் சொற்கள் எல்லாம் வேத புராண இதிகாசங்களிலும், ஸ்ருதி, ஸ்மிருதிகளிலும் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது.

## 9. மனுதர்மத்தில் தீண்டாமைக்கான ஆதாரம்

மனுதர்மத்தில் சண்டாளர் என்ற சொல் பல சுலோகங்களில் இடம்பெற்றுள்ளது.

"வீடு முதலானவற்றிற்கு சண்டாளர்களால் அசுத்தம் நேரிடுகின்றபொழுது விலக்குதல், மெழுகுதல், கோமூத்திரம் தெளித்தல், கொஞ்சம் மேல்மண்ணை எடுத்துப் போடுதல், பசுமாட்டை ஒருநாள் வசிக்கும்படிச் செய்தல் இவ்வைந்தினாலும் அப்பூமி பரிசுத்தப்படுகிறது" (மனு அத்தியாயம் 5 சுலோகம் 134).

மனுதர்மத்தில் சூத்திரன் கெட்டியான சுட்டசெங்கல், ஓடு ஆகியவைகளால் வீடு கட்டிக் கொள்ளக் கூடாது என்று சொல்லப்பட்டுள்ளது. இதுபோன்ற வீட்டை பிராமணரும் மற்ற மூன்று வர்ணத்தாருமே கட்டிக் கொள்ள முடியும். அந்த வீட்டைக் கட்டுகின்ற கட்டுமானத் தொழிலைச் செய்கின்றவர்களில் இக்காலத்திலும்கூட பார்ப்பனர் யாரும் ஈடுபடுவது கிடையாது. முழுக்க முழுக்க தாழ்த்தப்பட்ட & பிற்படுத்தப்பட்ட மக்கள்தான் இப்பொழுதும் அப்பணியைச் செய்து வருகிறார்கள். அவ்வாறு அம்மக்கள் வேலை செய்வதால் அந்த வீடு தீட்டாகி வீடுமாம். அந்தத் தீட்டைப் போக்கத்தான் மேற்சொன்ன மனு (அ) தர்ம ஸ்லோகத்தின்படி தீட்டுப் போக்கப்படுகிறது.

மனிதன் நுழைந்ததால் தீட்டு ஏற்படுகிறது. அந்தத் தீட்டு மாட்டு மூத்திரத்தால் போக்கப்படுகிறது. மாட்டை ஒருநாள் அந்த வீட்டில் வசிக்கச் செய்வதால் அத்தீட்டுப் போக்கப்படுகிறது என்று மனு சொல்கிறது என்கின்ற பொழுது மாட்டைவிட மனிதன் இழிவுபடுத்தப்படுகிறானா? இல்லையா?

இதனை அறியாத பிற்படுத்தப்பட்ட & தாழ்த்தப்பட்ட மக்கள் இன்று புதிய வீடு கட்டும்போது பார்ப்பனரை அழைத்து பசுமாட்டை வீட்டுக்குள் விட்டு அந்த மூத்திரத்தை கோமியம் என்ற பெயரில் வீடெல்லாம் தெளித்து பூஜை செய்கிறார்கள். அதற்குப் பார்ப்பனர் சொல்லுகின்ற காரணம் கணபதி ஹோமம் செய்து கடவுள் அனுக்கிரஹத்தைப் பெற்றுத் தருகிறோம். சரஸ்வதி கடாட்சம், லட்சுமிகடாட்சம் பெற்றுத் தருகிறோம் என்பதாகும். இப்படிச்

செய்தால்தான் லட்சுமியும் சரஸ்வதியும் அந்த வீட்டில் வசிப்பார்கள். அவர்களுடைய அருள் கிடைக்கும் என்று சொல்லி ஏமாற்றுகிறார்கள். ஆனால் மனுதர்ம சாஸ்திரத்தின்படி அது தீட்டுப் போக்குகின்ற வேலைதான். இதனை வெளிப்படையாகச் சொன்னால் பார்ப்பனரல்லாதாருக்கு சொரணை வந்துவிடும் என்பதாலும் தங்களுடைய பிழைப்புப் போய்விடும் என்பதாலும் பார்ப்பனர் எவரும் அதன் பொருளை வெளிப்படையாகச் சொல்ல மாட்டார்கள்.

இந்தத் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்கள் எவருக்கும் நூறு ஆண்டுகளுக்கு முன்னால் ஓட்டு வீடோ மச்சு வீடோ மாடி வீடோ எதுவும் கிடையாது. காரணம் அவர்கள் அதுபோன்ற வீடுகள் கட்டிக்கொள்ளக் கூடாது என்று சாஸ்திரத்தின் பேரால் தடுக்கப்பட்டார்கள்.

இன்றைக்கு எல்லோரும் அதுபோன்ற வீடுகள் கட்டிக் கொள்கிறார்கள் என்றால் அதற்கெல்லாம் காரணம் என்ன? அவர்களுக்குக் கல்வி கிடைத்துள்ளது. நல்ல உத்தியோகம் கிடைத்துள்ளது. நல்ல வசதி ஏற்பட்டுள்ளது என்றால் அதற்கெல்லாம் இந்த லட்சுமியும் சரசுவதியுமா காரணம்?

கல்வி மறுக்கப்பட்ட மக்களாகிய இவர்களுக்கு கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் இட ஒதுக்கீடு பெற்றுத் தந்த பெரியாரும் அம்பேத்கரும் கல்வி வள்ளல் காமராசரும் அல்லவா காரணம்? நூறு ஆண்டுகளுக்கு முன்பு இந்த சரசுவதியும் லட்சுமியும் எங்கே போயிருந்தார்கள்? ஏன் இம்மக்களுக்குப் படிப்பு இல்லை? நல்ல உத்தியோகம் இல்லை? இதைப்பற்றி யாரும் சிந்திப்பதில்லை.

அப்படிச் சிந்திக்க மறந்த மக்கள் அல்லது சிந்திக்க மறுக்கின்ற மக்கள் உண்மையில் தங்கள் உயர்வுக்குக் காரணமானவர்களை மறந்து விட்டு தங்களுக்கு இந்தக் கல்வியும் வேலைவாய்ப்பும் கிடைக்கவே கூடாது என்று கருதக்கூடிய பார்ப்பனரை அழைத்து கிரஹப்பிரவேசம் என்ற பேரில் இந்த பூஜையினைச் செய்கிறார்கள்.

அதனுடைய உண்மையான பொருள் தங்கள் இனத்தவர் வேலை செய்ததால் தீட்டாகி விட்டது என்பதும் அந்தத் தீட்டைப் போக்கவே பார்ப்பனர் இந்த பூஜை செய்கிறார். அப்படிச் செய்வதுதான்

சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாகும்

இதனை அறியாமல் தங்களுடைய இனத்தவரையே இழிவுபடுத்தும் காரியத்தை இதுவரை தங்களை இழிவுபடுத்தி வந்த கும்பலை வைத்துச் செய்துவருகிறார்கள்.

இவ்வாறு சுயமரியாதை அற்ற மக்கள் பார்ப்பன சடங்குகளில் மூழ்கிக்கிடக்கின்ற காரணத்தால்தான் இராம கோபாலன் போன்றவர்கள் சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் புனித நூல்களிலும் தீண்டாமை குறிப்பிடப்படவில்லை என்று முழுப்பூசணிக்காயை பரிமாறின சோற்றில் மறைக்கப் பார்க்கிறார்கள்.

ஆனால் இந்துமத சாஸ்திரங்களில் ஏராளமான இடங்களில் தீண்டாமை வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

மனுதர்மம் அத்தியாயம், சுலோகம் 79 இவ்வாறு கூறுகிறது.

“பதிதர், சண்டாளர், மூர்க்கர், பொருள் முதலியவற்றால் கர்வமடைந்தவர்கள், வண்ணான் முதலிய தாழ்ந்த சாதியார், செம்படவர் இவர்களுடன் ஒரு மரத்தின் நிழலில்கூட ஒருமித்து வசிக்கக்கூடாது” என்கிறது.

அத்துடன், “சண்டாளன், ஊர்ப்பன்றி, கோழி, நாய், மாதவிடாய் ஆன ஸ்திரீ இவர்கள் பிராமணன் புசிக்கும்போது பாராமலிருக்கும்படி செய்ய வேண்டியது” என்று தாழ்த்தப்பட்டவர்களைப் பன்றி, நாய், கோழி ஆகியவற்றுடன் ஒப்பிட்டு அவற்றுக்கு சமமாய்க் கூறி இழிவுபடுத்துகிறது.

மனுதர்மத்தில் பறையன் என்ற சொல் நேரடியாகவே கூறப்பட்டுள்ளது.

“பறையன், தூமையானவள் (மாதவிலக்கானவள்), கணவன் இறந்தபிறகு பிள்ளைபெற்றவள், பிணம், பிணத்தைத் தொட்டவன், இவர்களைத் தெரியாமல் தொட்டுவிட்டால் தீட்டு உண்டாகிறது.

அவ்வாறு தொட்டுவிட்டால் அவன் குளிப்பதன் மூலம் பரிசுத்தனாகிறான்” என்று மனு அத்தியாயம் எட்டு சுலோகம் 85) கூறி தாழ்த்தப்பட்டவனை பிணத்துக்குச் சமமாகக் கூறுகிறது.

“சூத்திரன் ராசாவாயிருக்கும் ராச்சியத்திலும், தருமம் (வருணாசிரமம்) அறியாதவர்கள், பாஷாண்டிகள், இவர்கள் வசிக்கும்படியான கிராமத்திலும், சமீபத்தில் சண்டாளர்கள் வசிக்கின்ற கிராமத்திலும் (பிராமணர்) வாசஞ்செய்யப்படாது” என்று மனு அத்&4, சுலோகம் 61 கூறுகிறது.

சூத்திரன் ராசாவாக இருந்தால் அவனை ஒழித்துவிட வேண்டும், சாதியை கடைப்பிடிக்காதவர்களை ஒழித்துவிட வேண்டும், சண்டாளர்களை அதாவது தாழ்த்தப்பட்டவர்களை ஊருக்கு ஒதுக்குப்புறமாக தொலைதூரத்திற்குத் துரத்திவிட வேண்டும், அருகிலேயே நெருங்கவிடக் கூடாது என்பது இதன் பொருள்.

இந்த சுலோகத்தின்படிதான் தாழ்த்தப்பட்டவர்களின் குடியிருப்புக்கள் ஊருக்கு ஒதுக்குப் புறமாக அமைந்துள்ளன.

# 10. தீண்டத்தகாதார் அனுபவித்த கொடுமைகள்

ஈராயிரம் ஆண்டுகளுக்குமேல் தீண்டத்தகாதவர்கள் அனுபவித்த கொடுமைகளுக்கு அளவே இல்லை. இந்துக்கள் என்று சொல்லிக்கொள்வோர் தீண்டத்தகாத மக்களுக்குச் செய்த கொடுமைகள் உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் வேறு எந்த மக்களும் அனுபவித்திராத கொடுமைகளாகும்.

அண்ணல் அம்பேத்கர் தீண்டத்தகாதவர் அனுபவித்த கொடுமைகளைப் பட்டியலிடுகிறார்.

1. தீண்டத்தகாதோர் இந்துக்கள் வசிக்கும் இடத்துக்கு அப்பால் வசிக்க வேண்டும். இவ்விதியை மீறுவது குற்றமாகும்.
2. தீண்டாதோர் இருக்கும் பகுதி தெற்குத் திசையில் இருக்க வேண்டும். ஏனெனில், தெற்குதான் நான்கு திசைகளில் அமங்கலமானது. இந்த விதியை மீறி நடப்பது குற்றமாகும்.
3. தீண்டாதோர் தீட்டு ஏற்படுத்தும் தூரம் அல்லது நிழல் தீட்டு பற்றிய விதிகளை பின்பற்ற வேண்டும். இவ்விதியை மீறுவது குற்றமாகும்.
4. தீண்டத்தகாதோர் நிலம், கால்நடைகள் போன்ற செல்வங்கள் சேர்ப்பது குற்றமாகும்.
5. தீண்டத்தகாத சமுதாயத்தினர் ஓட்டுக்கூரை உள்ள வீடு கட்டுவது குற்றமாகும்.
6. தீண்டத்தகாத சமுதாயத்தினர் சுத்தமான உடை உடுத்துவது, செருப்பு அணிவது, கைக்கடிகாரம் அல்லது தங்க நகை அணிவது குற்றமாகும்.
7. தீண்டத்தகாத சமுதாயத்தினர் தங்கள் குழந்தைகளுக்கு கம்பீரமாக ஒலிக்கும் பெயர்களை வைப்பது குற்றமாகும். அவர்களின் பெயர் இழிவைக் குறிப்பதாக இருக்க வேண்டும்.
8. தீண்டத்தகாத சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர் ஓர் இந்துவின் முன்னால் நாற்காலியில் உட்காருவது குற்றம்.
9. தீண்டத்தகாத சமுதாயத்தினர் கிராமத்தின் வழியே குதிரையின்மீதோ, பல்லக்கிலோ அமர்ந்து செல்வது குற்றம்.
10. தீண்டத்தகாத சமுதாயத்தினர் கிராமத்தின் வழியே தங்கள்

ஊர்வலத்தை நடத்திச் செல்வது குற்றம்.

11. தீண்டத்தகாத சமுதாயத்தினர் இந்துவுக்கு வணக்கம் தெரிவிக்காமலிருப்பது குற்றம்.
12. தீண்டத்தகாத சமுதாயத்தினர் பண்பட்ட மொழியொன்றைப் பேசுவது குற்றம்.
13. தீண்டத்தகாத சமுதாயத்தினர் யாரேனும் இந்துக்கள் உண்ணாவிரதமிருக்கிற புனிதநாளிலும், உண்ணாவிரதத்தை முடித்துக்கொண்டு உணவு உண்ணப்போகும் நேரத்திலும் செல்ல நேர்ந்தால் பேசிக்கொண்டு செல்வது குற்றம். ஏனெனில் அவர்கள் மூச்சுக்காற்று ஊரின் காற்றையும் இந்துக்களின் உணவையும் மாசுபடுத்துவதாகக் கருதப்படுகிறது.
14. தீண்டத்தகாத ஒருவர் தீண்டத்தக்கவரின் புறச்சின்னங்கள் எதையும் அணிந்து தன்னைத் தீண்டத்தக்கவர்போல் காட்டிக் கொள்வது குற்றம்.
15. தீண்டாதவர் தன்னுடைய தாழ்ந்த அந்தஸ்துக்குத் தக்கவாறு நடந்துகொண்டு பொதுமக்கள் அவரை எளிதில் அடையாளம் கண்டுகொள்ளும் வண்ணம் பின்வருவன போன்ற புறச்சின்னங்களைக் கொண்டிருக்க வேண்டும்.

அ) இழிவான பெயரைக் கொண்டிருப்பது.

ஆ) சுத்தமான உடை அணியாதிருப்பது.

இ) வீட்டுக்கு ஓட்டுக்கூரை

இல்லாதிருப்பது.

ஈ) வெள்ளி, தங்கநகை அணியாதிருப்பது.

இந்த விதிகளில் எதையும் மீறுவது குற்றமாகும் என்று எழுதும் பாபாசாகேப் அம்பேத்கர் எழுபது எண்பது ஆண்டுகளுக்கு முன்னால் இந்த விதிகளை மீறியவர்கள் என்ன என்ன தண்டணைகளை அனுபவித்தார்கள் என்பதையும் அந்தக் காலக்கட்டத்தில் பத்திரிகைகளில் வந்த செய்திகளை வைத்து ஆதாரப்பூர்வமாக எழுதுகிறார்.

1928 பிப்ரவரி 26ந்தேதி பிரதாப் என்ற இதழில் வந்ததாக ஒரு

செய்தியை அண்ணல் அம்பேத்கர் குறிப்பிடுகிறார்.

“ஜோத்பூர் சமஸ்தானத்தில் சண்டயல் என்ற இடத்தில் தாழ்த்தப்பட்டோர் அல்வா சாப்பிடுவதற்கு உரிமை இல்லாதவர்கள் என்று நினைக்கும் மனிதர்கள் இன்னும் இருக்கிறார்கள். சில நாட்களுக்கு முன் ஒரு திருமணத்தில் அல்வா தயாரித்துப் பரிமாறப்பட்டது. தாழ்த்தப்பட்டோர் அல்வா சாப்பிடுவது தங்களை அவமானப்படுத்துவதாக நினைத்த உயர்ஜாதி இந்துக்கள் அவர்களுக்கு இருநூறு ரூபாய் அபராதம் விதித்தார்கள்.”

1931 நவம்பர் 3ந்தேதி சம்யசம்வாத் என்ற இதழிலிருந்து ஒரு செய்தி:

“டில்லிக்கருகே திருமணக்குழு ஒன்று மணப்பெண்ணை பல்லக்கில் தூக்கிக்கொண்டு ஊர்வலமாகச் சென்றனர். உயர்ஜாதி இந்துக்கள் இது தங்களை அவமானப்படுத்துவதாகக் கருதினார்கள். அவர்கள் திருமணக் குழுவைத் தடுத்து நிறுத்தி இரண்டு நாட்கள் உணவும் தண்ணீரும் தராமல் வைத்திருந்தார்கள். பின்னர் அங்கு காவல்துறையினர் வந்து அவர்களை மீட்டனர்” என்று அண்ணல் அம்பேத்கர் பதிவுசெய்கிறார். இன்னும் இதுபோல ஏராளமான நிகழ்வுகளை அம்பேத்கர் அவர்கள் சுட்டிக்காட்டுகிறார்கள்.

அந்த நடைமுறை இன்னும் நாட்டின் பல பாகங்களில் நடந்து வருவது கண்கூடு. மத்தியப்பிரதேசத்தில் அண்மையில் ஒரு தீண்டத்தகாத சாதிக்காரர் தனது மகளுக்கு திருமணம் செய்யும்போது அத்திருமணத்திற்கு பேண்டு வாத்தியம் வைத்திருந்தார் என்பதற்காக அவர் உயர்ஜாதி என்று சொல்லப்பட்டவர்களால் அடித்து உதைக்கப்பட்டார் என்ற செய்தி பத்திரிகைகளில் வந்தது. தீண்டத்தகாதவர் தாரை தப்பட்டைதான் வைக்க வேண்டுமே தவிர பேண்டு வாத்தியம் வைக்கக் கூடாது என்பது அவர்களின் நிபந்தனை ஆகும்.

தற்பொழுது கூட குஜராத்தில் தீண்டத்தகாத இளைஞன் ஒருவன் குதிரையில் சென்றான் என்பதற்காக அவனை உயர்ஜாதி இளைஞர்கள் அடித்துக் கொன்றிருக்கிறார்கள் என்ற செய்தி தமிழ் இந்து நாளிதழில் வந்துள்ளது.

இந்துமதம் அரசமதமாகக் கடைப்பிடிக்கப்பட்டு மனுதர்மத்தின்படி பிராமணர்களின் ஆலோசனையோடு ஆட்சி நடந்த பகுதி திருவாங்கூர் சமஸ்தானமாகும். அங்கு நடந்த தீண்டாமைக் கொடுமைகள் அளவற்றவை. அந்த சமஸ்தானத்தில் நடந்த ஒரு நிகழ்வை மட்டும் இங்கு சுட்டிக் காட்டுகிறோம்.

அங்கு வசித்த ஈழவ இன மக்கள் உயர்ஜாதி மக்களால் மிகமிக இழிவாக நடத்தப்பட்டார்கள். அந்த இனத்தைச் சேர்ந்த பெண்கள் வயதுக்கு வந்த பிறகு தங்கள் மார்பை மறைக்க ஜாக்கெட் அணியக் கூடாது என்று சட்டம் போட்டு அந்தச் சட்டத்தை கடுமையாக நடைமுறைப்படுத்தியது திருவாங்கூர் சமஸ்தானம். அங்கு அதிகாரிகளாக இருந்தவர்கள் பார்ப்பனர்களும் மேல்ஜாதிக்காரர்களும்தான். அந்த சட்டத்தை மீறி எந்தப் பெண்ணாவது ஜாக்கெட் அணிந்தால் அவர்களைக் கட்டி வைத்து அடிப்பதோடு அவர்களுக்கு ‘முலைவரி’ என்ற ஒரு வரியையும் போட்டு கொடுமைப்படுத்தினார்கள். ஒரு பெண்ணிடம் அந்த அதிகாரிகள் முலைவரி கேட்டு மிரட்டிய நிலையில் வரி கொடுக்க வழியில்லாததால் அந்தப் பெண் தன்னுடைய மார்பை அறுத்து வாழை இலையில் வைத்து அந்த அதிகாரிகளிடம் கொடுத்து விட்டு இறந்து போனார். அந்த ஊர் ‘முலைச்சிப்பறம்பு’ என்ற பெயரில் இன்னமும் கேரளாவில் இருப்பதாக நாராயணகுருவின் வாழ்க்கை வரலாறு நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

அண்ணல் அம்பேத்கர் அவர்களே வெளிநாடு சென்று படித்து வந்து பரோடா சமஸ்தானத்தில் இராணுவச் செயலாளராகப் பணியாற்றியபோது அவரை இன்னார் என்று தெரிந்துகொண்டவர்கள் அவருக்கு குடியிருக்க உணவு விடுதிகளிலோ, தங்கும் விடுதிகளிலோ இடம் தர மறுத்துவிட்டார்கள். ஒரு பார்சி நடத்தும் சத்திரத்தில் தனது சாதியைக் கூறாமல் தீண்டத்தக்கவர்போல் காட்டிக்கொண்டு சாதியை மறைத்துத் தங்குகிறார். சில நாட்களிலேயே அந்தப் பார்சிக்கு அம்பேத்கர் ஒரு தாழ்த்தப்பட்டவர் என்று தெரிந்துவிடுகிறது. உடனே அவர்கள் தங்கள் சத்திரத்தின் புனிதம் கெட்டுவிட்டதாகக் கூறி அம்பேத்கரின் சாமான்களையெல்லாம் தூக்கி வெளியில் எரிந்துவிடுகிறார்கள்.

அம்பேத்கர் ஒரு மரத்தடியில் நின்று தேம்பித் தேம்பி அழுகிறார்.

எவ்வளவோ எதிர்ப்புக்களைத் தனது வாழ்நாளில் சந்தித்திருந்தாலும், அமெரிக்காவிலும், இலண்டனிலும் சென்று கல்வி கற்று மன்னரின் இராணுவச் செயலாளராகப் பணியாற்றிய நிலையிலும் படிப்பறிவில்லாத அறிவற்ற ஜனங்கள் மேல்ஜாதி என்கின்ற ஆணவத்தில் தன்னிடம் நடந்துகொண்ட முறையை எண்ணிப் பார்க்கிறார். படித்த பட்டம்பெற்ற தனக்கே இந்த நிலையென்றால், கல்வி அறிவு மறுக்கப்பட்டு, சேரிகளிலும் ஒதுக்குப் புறங்களிலும் ஒதுக்கப்பட்டு, புறக்கணிக்கப்பட்ட தன்னுடைய மக்களின் நிலையை எண்ணிப் பார்த்த அவருக்கு கண்ணிலிருந்து பொலபொலவெனக் கண்ணீர் கொட்டுகிறது.

இதுபோன்ற அவமானங்களெல்லாம் இராம. கோபாலன்களுக்கு எங்கே தெரியப் போகிறது? அதனால்தான் தீண்டாமை என்பதை உடையில்பட்ட தூசுபோல நினைத்து இந்துமதத்தில் தீண்டாமையே இல்லையென்ற தோற்றத்தை உருவாக்க முயலுகிறார்.

## 11. தீண்டாமைக்கு அம்பேத்கர் காட்டும் ஆதாரம்

இவ்வளவு கொடுமைகளும் தாழ்த்தப்பட்டவர்கள் அனுபவிப்பதற்குக் காரணம் தீண்டாமை, தீண்டாதோர் குறித்து இந்துக்களின் கடமையாக மனுதர்மம் வெளிப்படுத்தும் விதிகள்தான் காரணம் என்று அண்ணல் அம்பேத்கர் அவர்கள் மிகவும் ஆணித்தரமாகவும் ஆதாரபூர்வமாகவும் சுட்டிக் காட்டுகிறார்.

1. ‘பிரம்மத்தின் வாய், தோள், தொடை, பாதங்கள் ஆகியவற்றிலிருந்து தோன்றியவர்களின் சமுதாயத்திற்கு வெளியில் உள்ள எல்லா இனக் குழுக்களும், அவர்கள் மிலேச்சர்களின் (நாகரிகமற்றவர்களின்) மொழியைப் பேசினாலும் ஆரியர்களின் மொழியைப் பேசினாலும் அவர்கள் தஸ்யூக்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். (மனு அத்&10, சுலோகம் 45)
2. இவர்கள் அனைவரும் பட்டணத்துக்கும் ஊருக்கு வெளியிலும் மரத்தடி, தோப்பு, மயானத்துக்குச் சமீபமான இடம், மலை, பூந்தோட்டம் இவைகளில் அனைவருக்கும் இவர்கள் இன்ன தொழிலாளி என்று தெரியும்படி தன் தொழிலைச் செய்துகொண்டு வசிக்க வேண்டும். (மனு அத்&10, சுலோகம் 50)
3. ஆனால் சண்டாளர்களும் ஸ்வாபவர்களும் வசிக்குமிடம் கிராமத்திற்கு வெளியே இருக்க வேண்டும். அவர்களுடைய செல்வம் நாய்களும் கழுதைகளும் ஆகும். (மனு அத்&10, சுலோகம் 51)
4. அவர்களின் உடைகள் இறந்தவர்களின் துணிகளே ஆகும். தங்கள் உணவை உடைந்த தட்டுக்களில் இருந்து அவர்கள் உண்பார்கள். கரும் இரும்பே அவர்களது அணிகலன். அவர்கள் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்குத் திரிந்துகொண்டே இருக்க வேண்டும். (மனு அத்&10, சுலோகம் 52)
5. சமயக் கடமைகளை நிறைவேற்றுபவர்கள் அவர்களுடன் உடலுறவை நாடக்கூடாது. அவர்களின் திருமணங்கள் அவர்களுக்குச் சமமானவர்களுடனேயே இருக்கும். (மனு

அத்&10, சுலோகம் 53)

6. அவர்களின் உணவு அவர்களுக்கு (ஆரியர் தவிர) மற்றவர்களால் உடைந்த தட்டில் கொடுக்கப்படும். இரவில் அவர்கள் கிராமங்களிலும் நகரங்களிலும் நடந்துசெல்லக் கூடாது. (மனு அத்&10, சுலோகம் 54)
7. பகலில் அவர்கள் மன்னனின் கட்டளைப்படி அடையாளக் குறிகளுடன் தங்கள் வேலைகளைச் செய்ய வேண்டும். உறவினர் இல்லாத மனிதர்களின் சவங்களை அவர்கள் எடுத்துச் செல்ல வேண்டும். இது முடிவான விதியாகும். (மனு அத்&10, சுலோகம் 65)
8. மன்னனின் உத்தரவுப்படி அவர்கள் குற்றவாளிகளுக்கு சட்டத்தின்படி மரணதண்டனையை நிறைவேற்றுவார்கள். அந்தக் குற்றவாளிகளின் துணிகள், படுக்கைகள், அணிகலன்கள் ஆகியவற்றை அவர்கள் எடுத்துக் கொள்வார்கள். (மனு அத்&10, சுலோகம் 56)
9. மிகத் தாழ்ந்த சாதிப்பெண்ணுடன் தொடர்பு கொண்டவன் கொல்லப்படுவான் (விஷ்ணுபுராணம் அத்&5, சுலோகம் 43)
10. ஒரு சண்டாளன் அல்லது வேறு தாழ்ந்த சாதியைச் சேர்ந்த தீண்டத்தகாதவன் வேண்டுமென்றே இரு பிறப்பாளர்களாலேயே தீண்டத் தகுந்த (இருபிறப்புச் சாதியைச் சேர்ந்த) ஒருவனைத் தொட்டுவிட்டால் அப்படிச் செய்தவன் கொல்லப்படுவான்.

மனுவின் இந்த விதிகளைப் படிப்பவர்கள் எவரேனும் இந்துமதம்தான் தீண்டாமையை நிரந்தரமாக்கியது என்பதையும், தீண்டாதோரைப் பொறுத்த அளவில் இந்துக்களின் மனச்சாட்சியற்ற தன்மைக்கும் சட்டவிரோத மனப்பான்மைக்கும் பொறுப்பு என்பதையும் மறுக்க முடியுமா?

ஏற்கனவே விவரித்தபடி இந்துக்களால் தீண்டாதோர் அனுபவித்து வந்த கொடுமைகளுடன் இந்த பத்து விதிகளை ஒப்பிட்டால் இந்துக்கள் மேற்கண்ட செயல்களை இந்த விதிகளைப் பின்பற்றித்தான் செய்து வந்துள்ளார்கள் என்பது விளங்கும். ஒரு இந்து தீண்டாதானைத் தீண்டாமல் இருப்பதற்கும் தீண்டாதான் தீண்டினால் குற்றம் என்று கருதுவதற்கும் மேற்கண்ட விதிகளான சமயக் கடமைகளை நிறைவேற்றுபவர்கள் அவர்களுடன் உடலுறவை

நாடக்கூடாது. அவர்களின் திருமணங்கள் அவர்களுக்குச் சமமானவர்களுடனேயே இருக்கும். (மனு அத்&10, சுலோகம் 43)

ஒரு சண்டாளன் அல்லது வேறு தாழ்ந்த சாதியைச் சேர்ந்த தீண்டத்தகாதவன் வேண்டுமென்றே இருபிறப்பாளர்களாலேயே தீண்டத் தகுந்த (இருபிறப்புச் சாதியைச் சேர்ந்த) ஒருவனைத் தொட்டுவிட்டால் அப்படிச் செய்தவன் கொல்லப்படுவான் என்ற விதிகளின்படிதான்.

இந்துக்கள் தீண்டாதோரை ஒதுக்கியே வைத்திருக்க வேண்டும் என்று எண்ணுவது மேற்கண்ட 3வது விதியான சண்டாளர்களும் ஸ்வாபவர்களும் வசிக்குமிடம் கிராமத்திற்கு வெளியே இருக்க வேண்டும். அவர்களுடைய செல்வம் நாய்களும் கழுதைகளும் ஆகும். (மனு அத்&10, சுலோகம் 51)

என்ற விதியின்படிதான். தீண்டாதோர் சொத்து சேர்ப்பதை இந்துக்கள் சகிக்காது இருப்பதற்குக் காரணமும் இந்த விதியின்படிதான்.

தீண்டாதோர் ஆடை அணிகலன்கள் அணியக்கூடாது என்பதற்குக் காரணம் 8வது விதியான மன்னனின் உத்தரவுப்படி அவர்கள் குற்றவாளிகளுக்கு சட்டத்தின்படி மரணதண்டனையை நிறைவேற்றுவார்கள். அந்தக் குற்றவாளிகளின் துணிகள், படுக்கைகள், அணிகலன்கள் ஆகியவற்றை அவர்கள் எடுத்துக் கொள்வார்கள் (மனு அத்&10, சுலோகம் 56) என்ற விதியின்படிதான்.

உண்மையில் இந்த விசயத்தைக் கஷ்டப்பட்டு அலசத் தேவையில்லை. தீண்டாதாரின் இந்த துரதிர்ஷ்டத்திற்குக் காரணம் இந்துமதமும் அதன் போதனைகளும்தான் தலையாய பொறுப்பு என்பதை மறுப்பதற்கு இடமில்லை (அண்ணல் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுதி 9 பக்கம் 137, 138) என்று அண்ணல் அம்பேத்கர் அவர்கள் மிக ஆணித்தரமாக இந்துமதம்தான் தீண்டாமைக்குக் காரணம் என்பதை அடித்துச் சொல்கிறார்.

ஆனால் இந்துமதத்தைக் காப்பாற்றப் புறப்பட்டதாகச் சொல்லிக்

கொள்ளும் இராம கோபாலன், இல.கணேசன் போன்றவர்கள் இந்தத் தீண்டாமையை நியாயப்படுத்த முடியாமல் தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் ஆதாரம் இல்லை என்று அப்பட்டமாகப் பொய் சொல்லுகிறார்கள். இவர்கள்தான் அம்பேத்கரை நாங்கள் உயர்வாகப் போற்றுகிறோம் என்று மக்களிடம் பொய்யான கருத்தைப் பரப்பி வருகிறார்கள்.

# 12. தீண்டாமைக்கு ஆதாரமாக தந்தை பெரியார் காட்டும் காரணம்

இந்துமதம் என்பதே தீண்டாமையின்மீது கட்டப்பட்டதுதான். இந்துமதத்திலுள்ள அனைத்து ஜாதியினரும் அர்ச்சகராகலாம் என்ற சட்டம் வருகின்றபொழுது பார்ப்பனர்கள் நீதிமன்றத்திற்குச் சென்று அற்குத் தடை வாங்குகிறார்கள். அதற்கு அவர்கள் சொல்லும் காரணம் என்ன?

பார்ப்பனரைத் தவிர பிற ஜாதியார் ஆண்டவன் சிலையைத் தொட்டுவிட்டால் அது தீட்டாகிவிடும் என்பதுதான். அதற்கு அவர்கள் ஆகமங்களையும் வேதங்களையும் ஸ்ருதி, ஸ்மிருதி போன்றவற்றைக் காரணம் காட்டுகிறார்கள்.

"வைகானச ஆகமத்தில்" உள்ள பிருகு சம்ஹிதையின் கிரியாதிகாரம் பற்றிய 24வது அத்தியாயத்தில் தரப்பட்டிருக்கும் பிராயச்சித்தம் மீதான ஒரு குறிப்பு:

**12.** அர்ச்சக அன்யாத்லி ஜைஹி ஸ்புருஷ்டே சுத்தோடை ரபிஷ்சாயேத்
சபத்பிஹி சத்ரியைஹி ஸ்புருஷடே காலாசைஹி
ஸ்னபாயேத்தரிம்.

பொது வழிபாட்டுக்குரியதான கோயில்களில் கடவுளின் உருவத்தையோ, சிலையையோ அல்லது பிற இதுபோன்ற உருவத்தையோ (கோயில் சடங்குகளை அதிகாரப்பூர்வமாக நடத்தி வைப்பவரான) அர்ச்சகர் தவிர, பிற பிராமணன் எவனாவது தொட்டுவிட்டானானால், பின்னர் அந்தச் சிலையோ அல்லது உருவமோ தூய நீரினால் சம்ப்ரோட்சணம் செய்யப்பட வேண்டும்.

சத்திரியர்களால் (போர்வீரர், (ராஜ) சாதி) தொடப்பட்டு விட்டதானால், பின்னர் ஏழு கலசங்களை வைத்து முறைப்படி வணங்கியபின், சம்ப்ரோட்சணம் செய்யப்பட வேண்டும்.

13. ஸ்டிபாயேத் வைஸ்யா சமஸ்பர்ஷாய் சதுர்விம் சதிபிஸ்ததா.

சாந்திஹோமம் சா ஜுஹுயாத் சக்திதோ போஜ யேத்த்விஜன்.

வைசியர்களால் (வர்த்தக சமூகம்) தொடப்பட்டு விட்டதானால், பின்னர் இருபத்தி நாலு கலசங்களை வைத்து, முறைப்படி வணங்கியபின் பிம்பங்களுக்குச் சம்ப்ரோட்சணம் செய்யப்பட வேண்டும். அதைத் தொடர்ந்து சாந்திஹோமமும் பிராமணபோஜனமும் செய்யப்பட வேண்டும்.

14. அஷ்டோத்ர சதாய்ஹி சூத்ரைஹி சமஸ்புர்சே ஸ்னாபயேத் தடோ.

மகாசாந்திம் ததா ஹுத்வா பிராமணானி போஜயேத்.

ஸ்புர்வைஹி அனுலோனயஹி சூத்ரோத பிராயஸ் சமாச்சரேத்.

சூத்திரர்களால் (நாலாவதான உழைக்கும் சமூகம்) தொடப்பட்டு விட்டதானால், பின்னர் நூற்றியெட்டுக் கலசங்களை வைத்து, முறைப்படி வணங்கியபின், பிம்பங்களுக்குச் சம்ப்ரோட்சணம் செய்யப்பட வேண்டும். அதைத் தொடர்ந்து மகாசாந்தி ஹோமமும், பிராமணபோஜனமும் செய்யப்பட வேண்டும். அனுலோமர்களால் தொடப்பட்டு விட்டதானால், பின்னர் பிராயச்சித்தம், சூத்திர ஸ்பர்ஷத்துக்கு விதிக்கப்பட்டிருப்பதுபோல் செய்யப்பட வேண்டும். (அனுலோமர்: தீண்டத்தகாதவர்)

இதிலே சூழ்ச்சியாக இன்றைக்கும்கூட பார்ப்பனர்கள் சொல்லுகின்ற காரணம், மற்ற ஜாதிக்காரர் மட்டுமல்ல, அர்ச்சகர் தவிர பிற பார்ப்பனர்கள் தொட்டுவிட்டாலும் தீட்டு என்று புகுத்தி வைத்திருக்கிறார்கள். அது எவ்வளவு பெரிய பித்தலாட்டம் தெரியுமா? மற்றவர் தொட்டுவிட்டால் தீட்டு என்பவர்கள் அந்தத் தீட்டைப் போக்குவதற்கு பரிகாரம் வைத்திருக்கிறார்கள் பாருங்கள். அதிலேதான் அவர்களது சூழ்ச்சி இருக்கிறது. அதிலே ஒரு குலத்துக்கு ஒரு நீதி என்று சொல்லக்கூடிய அளவுக்கு பேதங்களைப் புகுத்தி இருக்கிறார்கள்.

பார்ப்பன சூழ்ச்சி நரித்தந்திரம் அதில்தான் அடங்கியிருக்கிறது. அர்ச்சகன் அதே ஜாதியானதால், அவர்களைப் பொறுத்து ஒரு குறிப்பை அதில் இணைத்துக் கொள்வதால் அவர்களுக்கு நட்டம் எதுவும் இல்லை. பொதுவாக அனைவருக்கும் தடை விதிக்கப்பட்டதுபோல் ஒரு பிரமை

ஏற்படுத்த அது உதவும் என்பதால்தான் அதனைப் புகுத்தியுள்ளார்கள்.

இதில் கவனிக்கப்பட வேண்டியது, நாலு சாதியினரும், நாலாஞ்சாதியினரும் இழிந்த அனுலோமசாதியினரும் அதில் தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டிருப்பதும், பிராமணரால் தீட்டு ஏற்பட்டு விட்டால், வெறும் தண்ணீர் ஊற்றிவிட்டால், சிலை மீண்டும் புனிதமாகிவிடும் என்பதும், அதே காரியத்தை சத்திரியன் செய்தால் ஏழு கலசம் வைக்கவும், வைசியன் செய்துவிட்டால் 24 கலசமும் சாந்திஹோமமும், பிராமணர்க்குப் போஜனமும் நடத்தப்பட வேண்டும் என்றும், சூத்திரன் செய்துவிட்டால் 108 கலசமும், மகாசாந்தி ஹோமமும், பிராமணப் போஜனமும் செய்விக்கப்பட வேண்டும் என்பதும் சாதி தர்மத்தைக் கட்டிக் காக்கும் ஏற்பாடு என்பதோடு தீட்டு என்பதற்கான ஆதாரமாகவும் இந்த ஆகமம் விளங்க வில்லையா?

'தீட்டு'ப்பட்டு விட்டால் அதற்குப் பரிகாரம் பிராயச்சித்தம் சாதிக்குச் சாதி வேறுபடுவானேன்?

(ஆதாரம்: தந்தை பெரியார் எழுதிய 'கோயில் பகிஷ்காரம் ஏன்?' என்ற நூல்)

இந்த ஆகமவிதியின்படிதான் மகாராஷ்டிரா மாநிலம் மகாத் நகராட்சிக்குச் சொந்தமான குளத்தில் அண்ணல் அம்பேத்கரும் அவர்தம் தொண்டர்களும் நீர் அருந்தினார்கள் என்பதற்காக அந்தக் குளம் தீட்டாகி விட்டதாகக் கூறி ஆயிரத்தி எட்டுக் குடங்களில் மாட்டுச்சாணம், மாட்டின் சிறுநீர், பால், தயிர் என அனைத்தையும் கலந்து அதனைக் குளத்தில் கரைத்து தீட்டுப் போக்கினார்கள், அது தீண்டாமை இல்லையா?

## பார்ப்பனர்களின் பித்தலாட்டம்

இதுபோல இன்னும் பல ஆதாரங்கள் தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் புதைந்து கிடக்கிறபோது அதையெல்லாம் மறைத்துவிட்டு இராம கோபாலன்கள் தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் ஆதாரமே இல்லை என்பது இந்த இருபத்தியோராம் நூற்றாண்டிலும் நமது மக்களைப் பாமரர்களாக நினைத்துக் கொண்டு

எதைச் சொன்னாலும் இம்மக்கள் நம்புவார்கள் என்ற எண்ணம்தானே? படிப்பறிவில்லாத காலத்தில் பாமரனாக இருந்தபோது இந்த சமுதாயம் உங்கள் பித்தலாட்டத்தை நம்பி இருக்கலாம். தந்தை பெரியாரும் அண்ணல் அம்பேத்கரும் பெருந்தலைவர் காமராசரும் எங்களுக்குக் கல்வி கிடைக்கப் பாடுபட்டு அந்த உரிமையைப் பெற்றுத் தந்துள்ள காலத்தில் இந்த பித்தலாட்டம் எடுபடாது என இராம.கோபாலன்களுக்கும் இல.கணேசன்களுக்கும் தெங்கடிஜிக்களுக்கும் எச்சரிக்க விரும்புகிறோம்.

இந்தத் தீணடாமைதான் இந்துமதத்தின் ஆணிவேர். இந்தத் தீண்டாமையின் கொடுமையை மனிதாபிமானமுள்ள எவராலும் நியாயப்படுத்த முடியாது.

அதனையே நியாயப் படுத்தியவர்கள்தான் திலகர் போன்றவர்கள். அந்தத் திலகரை வழிகாட்டியாகக் கொண்டவர்கள்தான் இராம.கோபாலனும், இல.கணேசன், சோ.ராமசாமி, தெங்கடி போன்றவர்கள்.

இவர்களால் நடமாடும் தெய்வம் என்று வணங்கப்படுபவர் சங்கராச்சாரி. இவர்தான் தனது தெய்வத்தின் குரல் என்ற நூலில் தீண்டாமை சேமகரமானது என்று எழுதியவர்.

அவர்கள் வழிவந்த இராம கோபாலன்கள் இந்துமதத்தைக் காப்பாற்றப் புறப்பட்டதாகத் தம்பட்டமடிப்பவர்கள். இந்த நாட்டில் பிராமணர்கள் செய்த கொடுமையினால்தான் பிராமணரல்லாதார் அனைவருமே கல்வி மறுக்கப்பட்டு, வேலைவாய்ப்பு மறுக்கப்பட்டு எந்தவித முன்னேற்றமும் இல்லாமல் நலிவுற்று இருந்தார்கள் என்ற வரலாற்றை ஒத்துக்கொண்டால் தங்களுடைய ஆதிக்கம் பறிபோய்விடுமே என்பதால் அதனைத் திசைதிருப்பி முஸ்லிம்களால்தான் இந்த நாடு கெட்டுப்போனதாகவும் அவர்கள்தான் ஆக்கிரமிப்பாளர்கள் என்றும் அவர்கள்தான் இந்த நாட்டின் எதிரிகள் என்றும் மதவெறியைத் தூண்டி குளிர்காய்ந்து வருகிறார்கள்.

அந்த இஸ்லாமியர்களை எதிர்த்து நேரடியாகப் போராடுவதற்கு பார்ப்பனர்களால் இயலாது. அதற்கு மதவெறியைத் தூண்டிவிட வேண்டும். பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட மக்களை அதற்குப்

பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு. அதனால் அந்தத் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்களை ஏமாற்ற வேண்டும் என்ற கெட்ட எண்ணத்தில்தான் தீண்டாமையை நாங்களும் ஒழிக்கப் புறப்பட்டுள்ளோம் என்று ஏமாற்றுகிறார்கள்.

அந்தத் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமானால் ஜாதியை ஒழிக்க வேண்டும். அந்த ஜாதியை ஒழிக்க வேண்டுமானால் வருணாசிரமத்தை ஒழிக்க வேண்டும். அந்த வருணாசிரமத்தை ஒழிக்க வேண்டுமானால் அவற்றைப் பாதுகாக்கின்ற மனுதர்மத்தையும் புராணங்களையும், இதிகாசங்களையும், சாஸ்திரங்களையும், சடங்குகளையும் ஒழிக்க வேண்டும், இந்த சடங்குகளையும் சாஸ்திரங்களையும் ஒழித்து விட்டால் இவர்களது இந்து மதமே ஒழிந்துவிடும். அப்படி இந்துமதம் ஒழிந்துவிட்டால் இவர்கள் பார்ப்பான் என்கின்ற உயர்ந்த அந்தஸ்து ஒழிந்துவிடும். அப்படி ஒழிந்துவிட்டால் உழைக்காமலேயே உண்டு கொழுக்கும் அந்த வாய்ப்புப் பறிபோய்விடும்.

பார்ப்பனர்கள் வயலில் இறங்கி வேலைசெய்வதில்லை. உழவுத்தொழில் பாவம் என்று மனுதர்மத்தில் எழுதி வைத்துக் கொண்டார்கள். அதனால் ஏர்பிடிக்கும் பார்ப்பானை அவர்கள் சாதிவிலக்கம் செய்து வைத்தார்கள். ஆனாலும் அவர்களுக்கு முனைமுறியாமல் பச்சரிசியும் பருப்பும் நெய்யும் காய்கறியும் பழங்களும் நோகாமல் கிடைக்கிறது.

அவர்கள் சித்தாள் வேலை செய்வதில்லை. கொத்தனார் வேலை பார்ப்பதில்லை. ஆனாலும் அவர்கள் குடியிருக்க மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் சொகுசாகக் கிடைக்கிறது.

அவர்கள் நெசவு நெய்வதில்லை. ஆனாலும் பட்டும் பீதாம்பரமும் நகைகளும் அணிகலனும் அலுங்காமல் கிடைக்கிறது. அவர்கள் முடிவெட்டுபவனையும் துணிவெளுப்பவனையும் இழிவாகச் சொல்வார்கள். ஆனால் அவர்களுக்கு அழுக்கில்லாத துணியும் அழகான முகமும் கிடைத்து விடுகிறது. அவர்கள் செருப்புத் தைப்பதில்லை. ஆனால் கம்பீரமாக ஷூவும் பாதணிகளும் கணக்காகக் கிடைத்து விடுகிறது. இவர்கள் வீட்டுச் சாக்கடைப் பக்கம் வந்தாலே நாற்றம்

குடலைப்பிடுங்கும். அவர்களுக்குச் சம்மந்தமில்லாத யாரோ வந்து அதனைச் சுத்தம் செய்து கொடுத்து விடுகிறார்கள். அவர்கள் செத்தாலும் நாறிப்போகாமல் அவர்களை எறிக்கப் புதைக்க ஏராளமானவர் இருக்கிறார்கள்.

விதைக்காமல் விளையும் கழனி என்று சொல்வதுபோல் எதுவுமே செய்யாமல் அனைத்துவித சுகபோகங்களையும் ஆண்டு அனுபவிக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் இந்த ஜாதிதானே?

அந்த ஜாதி ஒழிந்துவிட்டால் இந்த சுகபோகங்களெல்லாம் எப்படித் தானாகக் கிடைக்கும்?

பார்ப்பனர்களிலும் ஏழைகள் இருக்கிறார்கள். அவர்களும் வறுமையில் வாடுகிறார்கள். அதனால் பொருளாதார அடிப்படையில்தான் இட ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று இன்று சிலபேர் பேசி வருகிறார்கள். எவ்வளவு ஏழையாக இருந்தாலும், வறுமையில் வாடினாலும் பிச்சை எடுத்து உண்டாலும் உண்பார்களே தவிர இன்னமும் வயலில் பயிர் நடுவதற்கு, களை பறிப்பதற்கு எந்த பார்ப்பனப் பெண்ணும் வரமாட்டார். எந்தப் பார்ப்பானும் ஏர் பிடிக்க வரமாட்டான். சித்தாள் வேலைக்கும் கொத்தனார் வேலைக்கும் வர மனம் இடம் தராது.

சொர்க்க வாழ்வு வாழ்ந்து வரும் இவர்கள் தங்களுக்கு இவ்வளவு வசதிகளையும் வாய்ப்புக்களையும் உருவாக்கித் தரும் மக்களை எப்படி நடத்துகிறார்கள்? சூத்திரன் என்றும் பஞ்சமன் என்றும் கேவலப்படு:த்துகிறார்கள். இவர்களுக்காக உழைக்கும் மக்களுக்கு இவர்களைப்போல் சுகபோகம் கிடைப்பதில்லை. அவர்களுக்குக் கிடைக்கும் வாழ்வு நரகவாழ்வு. அதனால்தான் அண்ணல் அம்பேத்கர் சொன்னார் ‘இந்துமதம் உயர்ஜாதி மக்களின் சொர்க்கம்; கீழ்ஜாதி மக்களின் நரகம்’ என்று.

அந்த நரக வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களைப் பற்றி அவர்கள் கொஞ்சமும் சிந்திப்பதில்லை. அந்த நரகவாழ்வைப் போக்க வேண்டும் என்று இந்தப் பார்ப்பனர்கள் முயற்சிப்பதில்லை. ஜாதியையும், தீண்டாமையையும் ஒரு கொடுமையாகவே அவர்கள்

உணருவதில்லை.

ஆனால் தீண்டாமையை ஒழிக்கப் போவதாக மட்டும் பம்மாத்து வேலை செய்வார்கள்.

## 13. மதவெறி ஊட்டப்படும் தீண்டத்தகாதவர்கள்

ஆனால் இந்த ஜாதியையும் தீண்டாமையையும் பாதுகாக்கின்ற மனுதர்மத்தை இந்த நாட்டின் சட்டமாக ஆக்க வேண்டும் என்று சொல்பவர்கள் இந்த நாட்டின் ஆர்எஸ்எஸ், இந்து முன்னணி, விஸ்வ ஹிந்து பரிஷத், போன்ற சங் பரிவார் அமைப்புக்கள்.

இந்த அமைப்புக்களுக்கெல்லாம் முன்னோடியான திலகர் பெருமான் அவர்கள் இந்திய நாடு சுதந்திரம் அடைந்த உடன் இந்த நாட்டு அரசியல் சட்டமாக மனுதர்மம்தான் ஆக்கப்பட வேண்டும் என்றவர். அதனைக் கொள்கையாகக் கொண்டதுதான் ஆர்எஸ்எஸ் இந்து முன்னணி ஆகிய அமைப்புக்கள். ஆர்எஸ்எஸ்ஸின் ஊர்வலங்களில் மனுதர்மம் அலங்கரித்து எடுத்துச் செல்லப்படுகின்றது. பிஜேபியினுடைய வழக்கறிஞர் அணியில் மனுதர்மத்தை சட்டமாக ஆக்கப்பட வேண்டும் என்று தீர்மானங்கள் இயற்றப்படுகின்றன. பிஜேபி அரசாங்கம் 1996 முதல் இந்த நாட்டை ஆண்டபொழுது அரசியல் சட்டத்தை மாற்ற வேண்டும் என்பதற்காக வெங்கடாஜலய்யா என்பவர் தலைமையில் ஒரு குழு அமைத்து இந்த நாட்டின் அரசியல் சட்டத்தை மாற்ற வேண்டும் என்று முயற்சித்தது.

அந்தத் திலகர்பெருமானால் அறிமுகம் செய்யப்பட்ட பிள்ளையார் ஊர்வலத்தை தமிழ்நாட்டில் நடத்தி மதக்கலவரத்தைத் தூண்டுவதற்குக் காரணமாக இருப்பவர்தான் இராம.கோபாலன். ஊர்வலத்தை இஸ்லாமியர் அதிகம் இருக்கும் தெருக்கள் வழியாகச் செல்ல வேண்டும் என்றும் மசூதிகள் வழியாகச் செல்ல வேண்டும் என்றும் அடம் பிடிக்கும் சிறுபிள்ளைத்தனமான செயலைச் செய்பவர்தான் இராம.கோபாலன். சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள மசூதி வழியாகத்தான் செல்லுவேன் என்று அடம் பிடிப்பதும் காவல்துறை கைது செய்வதும்ஒவ்வொரு ஆண்டும் வாடிக்கையான ஒன்று.

அந்த ஊர்வலம் செல்லுகின்றபொழுது அதில் மேளதாளம் இசைத்துக் கொண்டு செல்வார்கள். இஸ்லாமியர் சில இடங்களில் மேளம் அடிப்பதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பார்கள். அப்படி எதிர்க்கின்றபொழுது மேளம் அடித்து வரும் தாழ்த்தப்பட்டவர்களைத்

தூண்டிவிட்டு இஸ்லாமியருக்கு எதிராக அவர்களை வன்முறைக்களத்தில் பயன்படுத்தி வருவது இந்துமுன்னணி இராம.கோபாலன் வகையறாக்கள்.

அந்தத் தீண்டத்தகாதவர்களிடம் இந்துமதத்தில் உள்ள தீண்டாமை காரணமாக அவர்கள் அனுபவிக்கும் கொடுமைகளை எடுத்துச் செல்லுகின்றபொழுது ‘இஸ்லாமியர் வாழும் தெருக்களிலும் மசூதியிலும் மேளம் அடிக்க இயலவில்லை என்று ஆத்திரப்படும் தீண்டத்தகாத மக்களே! உங்களை இந்துக்கள் என்று சொல்லுகின்ற மக்களே இந்துக்களான உங்களை அவர்கள் வீதியில் நடக்க அனுமதிக்கிறார்களா? என்று அவர்களது சிந்தனையைத் தூண்டுகின்றபொழுதுதான் இராம கோபாலன்கள் நாங்களும் தீண்டாமையை ஒழிக்கப் பாடுபடுகிறோம் என்று ஏமாற்றுகிறார்கள்.

## 14. இராமகோபாலனின் ஏமாற்றுத் தந்திரம்

தீண்டாமையை ஒழிக்க இராம கோபாலன் ஒரு அய்டியா சொல்கிறார் பாருங்கள். அது தீண்டாமையை ஒழிக்கவா? பாதுகாக்கவா? என்பது புரியும்.

அதாவது 'பொங்கல் போன்ற பண்டிகை நாட்களில் அரிஜன தம்பதியரை வீட்டுக்கு அழைத்து அவர்களுடன் உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு, நமது சகோதரி வீட்டுக்கு வந்துபோகும்போது எப்படி உபசரிப்போமோ அப்படி உபசரித்து அனுப்ப வேண்டும்' என்று அய்டியா சொல்லுகிறார்.

இதுதான் தீண்டாமையை ஒழிக்க இராம.கோபாலன் சொல்லும் அய்டியா. இதனால் எப்படி தீண்டாமை ஒழியும் என்பதுதான் நமக்கு விளங்கவில்லை.

தீண்டத்தகாதவன்தான் பார்ப்பான் வீட்டில் சாப்பிட மாட்டேன் என்று சொல்கிறானா? அவர்களுக்கு பார்ப்பான் சாப்பாடு போடுவதால் எப்படி தீண்டாமை ஒழியும்? தீண்டத்தகாதவர் வீட்டுக்கு நாமெல்லாம் செல்லுவோம். அங்கே தாழ்த்தப்பட்ட சகோதரியைச் சமைக்கச் சொல்லி பார்ப்பனர்கள் எல்லாம் சாப்பிடுவோம் என்று பார்ப்பனர்களிடம் சொன்னாலாவது ஓரளவு ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் பார்ப்பனர் வீட்டில் தீண்டத்தகாதவருக்கு சாப்பாடு போட்டால் தீண்டாமை ஒழியும் என்று சொல்கிறாரே அதுதான் நமக்குப் புரியவில்லை.

இவர்கள் பிராமணராகவே இருப்பார்கள். தீண்டத்தகாதவன் தீண்டத்தகாதவனாகவே இருப்பான். அதற்கான ஏறபாட்டைத்தான் இராம. கோபாலன் சொல்கிறார்.

தீண்டத்தகாதவனுக்கு மனுதர்மம் அளித்திருக்கும் ஒரே உரிமை பிச்சை எடுத்து உண்பதுதான். மனு அத்தியாயம் 10 சுலோகம் 54ன்படி பார்ப்பனர்கள் தவிர மற்றவர்கள் தீண்டத்தகாதவர்களுக்கு உடைந்த தட்டில் உணவளிக்க வேண்டும் என்று கூறுகிறது.

இதன்படி பிச்சை எடுத்து உண்பதுதான் ஆறுகோடி தீண்டத்தகாத மக்களின் முதன்மையான வாழ்க்கை ஆதாரமாக இருந்ததாக அண்ணல் அம்பேத்கர் கூறுகிறார். மேலும் கிராமத்தில் வழக்கமான உணவு நேரத்துக்குப்பின் சென்று பார்த்தால் தீண்டத்தகாதவர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று இதைச் சொல்லிக்கொண்டு பிச்சை கேட்பதைக் காணலாம் என்று அம்பேத்கர் கூறுகிறார்.

அந்த உரிமையை நிலைநாட்டத்தான் இராம கோபாலன் அரிஜன தம்பதியை அழைத்து பண்டிகை நாட்களில் உணவு வழங்கவேண்டும் என்கிறாரா? இதில் ஒன்றும் புதுமை இருப்பதாகத் தெரியவில்லையே! பொதுவாகவே கிராமங்களில் தன்னிடம் வேலைசெய்யும் தாழ்த்தப்பட்டவர்களை அழைத்து அவர்களது பண்ணையார்கள் சாப்பாடு போட்டு துணிமணி வாங்கிக் கொடுத்து அனுப்புவது காலம் காலமாக நடந்து வருவதுதான். இது எப்படித் தீண்டாமையை ஒழிக்கும் என்று இராம கோபாலனுக்கு உதித்ததோ தெரியவில்லை.

இதிலிருந்து ஒன்று நிச்சயமாகத் தெரிகிறது. தீண்டாமை ஏதோ தீண்டத்தகாதவரின் தவறினால் அல்லது குறைபாட்டினால்தான் ஏற்பட்டதுபோலவும் தீண்டத்தகாதவர்கள்தான் அவர்களது நிலைமைக்குக் காரணம் என்பதுபோலவும் சீர்திருத்தப்பட வேண்டியவர்கள் தீண்டத்தகாதவர்களே தவிர உயர்ஜாதி இந்துக்களைத் திருத்துவதற்கு ஏதுமில்லை. அவன் மனம் பழக்க வழக்கங்கள் மற்றும் ஒழுக்கரீதியாக மிகவும் நன்றாக இருக்கிறார்கள். அவன் முழுமை படைத்தவன் அவனிடம் எந்தக் குறையுமில்லை. அவன் பாவி அல்ல என்று தீண்டாதோரை கண்டு வருந்துவதாகக் கூறும் அனைவரும் கூறுவதாக அண்ணல் அம்பேத்கர் குறிப்பிடுகிறார். அதைப் போல தீண்டத்தகாத தம்பதியரை அழைத்து ஒருவேளை உணவு போட்டுவிட்டால் தீண்டாமை ஒழிந்துவிடும் என்று இராம கோபாலன் சொல்கிறார்.

இன்னமும்கூட தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்களின் இல்லங்களில் நடக்கும் திருமணம் போன்ற சடங்குகளைச் செய்ய வரும் பார்ப்பனர், சமைக்காத பச்சரிசி, காய்கறி, கிழங்கு, பழவகைகளைத்தான் வாங்கிச் செல்வாரே தவிர சமைத்த பொருளையோ புழுங்கலரிசியையோ கூட வாங்கிச் செல்லுவதில்லை. திருமண வீட்டில் பதினாறு வகைப் பதார்த்தங்களோடு சுவையான நெய், வடை

பாயாசத்தோடு உணவு பரிமாறப்பட்டாலும் சடங்கு நடத்தவரும் எந்தப் பார்ப்பானும் அந்தப் பந்தியில் அமர்ந்து சாப்பிடுவதில்லை. தீண்டத்தகாதவன் வீட்டில் சாப்பிட்டால் எந்தப் பார்ப்பானாவது இறந்து விடுவானா? சாப்பாடு விஷம் ஆகிவிடுமா? பிறகு ஏன் அவர்கள் தீண்டத்தகாதவன் வீட்டில் சாப்பிட மறுக்கிறான்? அதுதானே தீண்டாமை என்பது?

அந்தப் பர்ப்பனர்களுக்கு பார்ப்பனரல்லாதார் இல்லங்களிலே சென்று சாப்பிடுங்கள் என்று கோரிக்கையை விடுக்காமல் அரிஜன தம்பதியை அழைத்து விருந்து கொடுக்க வேண்டும் என்பது 21ம் நூற்றாண்டின் தலைசிறந்த நகைச்சுவை என்றுதான் சொல்ல வேண்டும். இராம.கோபாலன்கள் குறைந்தபட்சம் சங்கர மடத்தில் சமையல்காரனாக தாழ்த்தப்பட்ட சகோதரனை நியமிக்க வேண்டும் என்று போராடினாலாவது நாம்கூட அவருடன் அப்போராட்டத்தில் கலந்துகொள்ளலாம். இன்னமும் தீண்டாமையைப் பாதுகாக்கின்ற ஒரு மடமாக சங்கர மடம் விளங்கிக் கொண்டிருக்கிறது. அங்கு மீதமாகும் சாப்பாட்டைக்கூட மண்ணில் போட்டுப் புதைப்பார்களே தவிர பார்ப்பனரல்லாதாருக்கு அதனைச் சாப்பிடக் கொடுக்க மாட்டார்கன். இப்படி அப்பட்டமாக தீண்டாமையைக் கடைப்பிடிக்கும் மடத்தைக் கண்டித்து ஒரு வார்த்தைகூடப் பேச மாட்டார்கள்.

ஆனால் இந்துமதத்தைக் காக்கப் புறப்பட்டதாக சவடாலடிக்கும் இவர்கள் தீண்டாமைக்கு சாஸ்திரங்களில் இடமில்லை என்றும் தீண்டாமையை நாங்கள் ஒழித்து விடுவோம் என்றும் ஏமாற்றுகின்றார்கள்.

அதுபோல இப்பொழுது புதிதாக பிஜேபி காரர்களுக்கு ஞானோதயம் பிறந்துள்ளது. இவ்வளவு காலமாகத் தீண்டாமை ஒழிப்பைப் பேசாதது அவர்களுக்கு உறுத்தலாக இருந்திருக்கிறது. அத்துடன் தாழ்த்தப்பட்ட மக்களின் வாக்கு வங்கி மிகப் பெரிய அளவிற்கு இருக்கிறது. அந்த வாக்கு வங்கியைக் கவர புதிய உத்தியை பிஜேபி கையாளுகிறது. அதுதான் தீண்டத்தகாதவர்களின் இல்லங்களுக்குச் சென்று உணவருந்த வேண்டும் என்பது. பிஜேபி தலைவராக இருக்கக் கூடிய அமித்ஷா இப்படி ஒரு உத்தரவை பிஜேபியினருக்கு வழங்கி இருப்பதால் கர்நாடகாவில் எடியூரப்பா தாழ்த்தப்பட்டவர்களின் வீடுகளில் சென்று உணவு அருந்துகிறார். ஆனால் அதில் என்ன

பித்தலாட்டம் நடந்தது என்பதை சமூக வலைத்தள்கள் அம்பலப்படுத்தின. ஓட்டல்களில் இட்டிலியை வாங்கி வந்து தாழ்த்தப்பட்டவர் வீட்டுக்குச் சென்று அந்த இட்டிலியை அங்கே சாப்பிட்டிருக்கிறார். ஓட்டலில் வாங்கிச் சென்ற இட்டிலியை தலித் வீட்டில் சாப்பிடுவதால் எப்படி தீண்டாமை ஒழியும் என்பது நமது சிற்றறிவுக்கு எட்டவில்லை.

அதைவிட ஒரு கூத்து தமிழ் நாட்டில் நடந்தது. தமிழக பாஜக தலைவர் தமிழிசை சவுந்திரராசன் தலித் வீட்டில் சென்று சாப்பிடுவதுபோல படங்கள் வெளிவந்தன. அதிலிருந்து என்ன தெரிகிறது என்றால் தமிழிசை தன்னை உயர்ந்த ஜாதியாகக் கருதிக்கொண்டு எங்களைவிட நீங்கள் கீழ்ஜாதி. இருந்தாலும் நான் உங்கள் வீட்டில் வந்து சாப்பிடுகிறேன் என்று படம் காட்டுகிறார்.

உண்மையில் ஒரு காலத்தில் தமிழிசை சவுந்திரராசனின் ஜாதியைச் சேர்ந்தவர்கள் சமைத்ததைப் பிற ஜாதியினர் சாப்பிட மாட்டார்கள் என்பதுதான் உண்மை. இன்று வேண்டுமானால் நாடார் மெஸ், நாடார் ஓட்டல் என்று இருக்கலாமே தவிர நூறு ஆண்டுகளுக்கு முன்னால் நாடார்களும் தாழ்த்தப்பட்டவர்களாகத்தான் நடத்தப்பட்டார்கள்.

அதனால்தான் தீண்டாமையை ஒழிக்கப் பாடுபட்ட தந்தை பெரியார் அவர்கள் சுயமரியாதை மாநாடுகளில் நாடார் மற்றும் சாயபு சமையல் என்றும் தாழ்த்தப்பட்டவர் சமையல் என்றும் விளம்பரம் செய்து அவர்களைச் சமைக்கச் செய்து அவர்களையே பரிமாறவும் செய்து உயர்ஜாதியினர் என்று கருதிக் கொண்டிருப்போரையெல்லாம் சாப்பிட வைத்து புரட்சி செய்தார் தந்தை பெரியார்.

அப்பொழுதெல்லாம் இந்தத் திசையில் கூடத் திரும்பிப் பார்க்காதவர்கள்தான் ஆர்எஸ்எஸ் சங்பரிவார் அமைப்பினர். மாறாக அவர்களே தீண்டாமையை முழுவதும் கடைப்பிடித்தார்கள். இன்று தமிழ்நாட்டில் ஆட்சியைப் பிடிக்கத் துடிக்கும் பாஜக தீண்டாமை ஒழிப்பு என்ற பெயரில் செய்யும் கூத்து கேலிக்குரியதாகத்தான் பார்க்கப் படுகிறது

பாவம் தமிழிசை. அவரது இன வரலாறே அவருக்குத் தெரியாமல்

ஏதோ வானத்திலிருந்து பொத் தென்று குதித்து வந்ததுபோல நாடகம் ஆடுகிறார். இவர்தான் தான் ஒரு தலித் வீட்டில் சாப்பிட்டேன் என்று விளம்பரம் செய்கிறாரே தவிர இவர்கள் கட்சியில் உள்ள இல கணேசனையோ சு.சாமியையோ எஸ்.வி சேகரையோ ஒரு தலித் வீட்டில் சாப்பிட வைத்து அதனை புகைப்படம் எடுத்து வெளியிட முடியவில்லை. குறைந்தபட்சம் இராம கோபாலன் இல கணேசன் எச்சராஜா எஸ்வி சேகர் சு.சாமி ஆகியோரைத் தனது வீட்டுக்கு அழைத்து விருந்து சாப்பிட வைத்து புகைப்படம் எடுத்து வெளியிட்டால்கூர வரவேற்கலாம். அதைக் கூடச் செய்ய முடியாமல் தான் ஒரு தலித் வீட்டில் சாப்பிடுகிறேன் என்று கூறுவது கேலிக் கூத்து அல்லவா?

இதுதான் இவர்களின் தீண்டாமை ஒழிப்பு இலட்சணம். திராவிட இயக்கத்தை ஒப்பிடும்போது இது நூறு ஆண்டுகள் லேட்.

இராம கோபாலன் தமிழ்நாட்டில் இந்துமுன்னணி என்ற அமைப்பிற்குத் தலைமை தாங்குகிறார். அகில இந்திய அளவில் விஷ்வ இந்து பரிஷத் பஜ்ரங்தள் போன்ற அமைப்புகளின் பெயரால் இந்துத்துவாவைக் காக்கப் புறப்பட்டதாகக் கூறிக்கொள்பவர்கள் இயக்கம் வைத்திருக்கிறார்கள். அந்த விஷ்வ இந்து பரிஷத்தினுடைய தலைவராக இருக்கிற அசோக் சிங்கால் தீண்டாமை குறித்து என்ன கூறுகிறார் தெரியுமா?

ஹரியானா மாநிலத்தில் இறந்துபோன பசுமாட்டின் தோலை உரித்தார்கள் என்பதற்காக அய்ந்து தலித் இளைஞர்களை மதவெறியர்கள் கல்லாலேயே அடித்துக் கொன்று விட்டார்கள். ஒரு பசுவின் உயிரைவிடத் தாழ்த்தப்பட்டவன் உயிர் ஒன்றும் பெரிதல்ல என்று எக்காளமிட்டது அந்த மதவெறிக்கூட்டம்.

அப்பொழுது தீண்டாமை குறித்துக் கருத்துச் சொன்ன விஷ்வ ஹிந்த பரிஷத்தின் அகில உலகத் தலைவர் அசோக் சிங்கால் ஒரு பொன்மொழியை உதிர்த்தார். “தீண்டாமை கொடுமையானதுதான். அதற்காகத் தீண்டத்தகாதவர்கள் மதம் மாறுவது கூடாது. ஒரு இந்து தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறார் எனில் அது அவரது பிறப்புரிமை. அவரை நான் ஒன்றும் குறை சொல்ல மாட்டேன்” என்று திருவாய்

மலர்ந்தார்.

இதே கருத்தைக் கொண்டவர்தான் இராம.கோபாலன். இப்படிப்பட்டவர்களை இராம.கோபாலன் குறைகூற மாட்டார். தீண்டாமை சேமகராமனது என்று சொல்கின்ற சங்கராச்சாரியை இவர்கள் நடமாடும் தெய்வம் என்பார்கள். உலகத்திலேயே மிக உயர்ந்த சோப்புப் போட்டுக் குளித்தாலும் விலை உயர்ந்த ஆடை ஆபரணங்களால் தங்களை அலங்கரித்துக்கொண்டாலும் அவர்களது உடலிலுள்ள அழுக்கு வேண்டுமானால் போகலாமே தவிர அவர்களது பிறவியிலுள்ள அழுக்குப் போகாது என்று சொன்ன பூரி சங்கராச்சாரியை இராம.கோபாலன்கள் எதிர்த்துப் பேச மாட்டார்கள்.

அதே போல இன்னமும் தீண்டாமையைக் கடைப்பிடிக்கும் மக்களிடம் சென்று தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் ஆதாரமில்லை. எனவே, தீண்டாமையைக் கடைப்பிடிக்காதீர்! என்று சொல்ல மாட்டார்கள். தருமபுரியில் ஒரு உயர்ஜாதி இந்துப் பெண்ணை தாழ்த்தப்பட்டவன் காதலித்தான் என்பதற்காக மூன்று கிராமங்களைத் தீவைத்துக் கொளுத்தி வீடுகளை இடித்துத் தரைமட்டமாக்கினார்களே, அந்த ஊருக்கெல்லாம் சென்று தீண்டத்தகாதவன் என்பதற்கு ஆதாரம் இல்லை. அவனும் இந்துதான். இந்தப் பெண்ணும் இந்துதான். எனவே, அவர்கள் திருமணம் செய்து கொள்வது தவறு இல்லை என்று சொல்ல மாட்டார்கள்.

சங்கர் தயாள் சர்மா குடியரசுத் தலைவராக இருந்தபொழுது ஒவ்வொரு வாரமும் திருப்பதி கோயிலுக்கு வந்து தரிசித்து விட்டுச் செல்வார். அவருக்கு திருப்பதி தேவஸ்தான நிருவாகம் சிவப்புக் கம்பள வரவேற்பு அளித்தது. அவருக்குப் பிறகு மாண்பமை கே.ஆர் நாராயணன் அவர்கள் குடியரசுத் தலைவராக பொறுப்பேற்றார்கள். அவர் எங்கே சங்கர் தயாள் சர்மா போல திருப்பதிக்கு வந்துவிடப் போகிறாரோ என்ற அச்சத்தில் அவசர அவசரமாக திருப்பதி தேவஸ்தானம் இனி எந்த விஅய்பிக்களுக்கும் சிவப்புக் கம்பள வரவேற்பு அளிப்பதில்லை என்று தீர்மானம் போட்டது. இந்திய நாட்டின் முதல் குடிமகனாகக் கருதப்படும் குடியரசுத்தலைவராக இருந்தாலும் தீண்டத்தகாதவன் தீண்டத்தகாதவன்தான் என்பதுதானே அதன் பொருள்?

அந்த திருப்பதி தேவஸ்தானத்தை எதிர்த்து இராம.கோபாலன் கண்டனக்குரல் எழுப்பியதுண்டா? கிடையாது. தீண்டாமைக்கு இந்துமத சாஸ்திரங்களில் ஆதாரம் இல்லையென்றால் திருப்பதி தேவஸ்தானம் ஏன் அப்படித் தீர்மானம் இயற்றியது? அவர்கள் என்ன சாஸ்திரங்களைப்பற்றி அறியாதவர்களா?

தீண்டாமைக்கு ஆதாரம் இல்லை என்று தீண்டத்தகாதவர் மத்தியில் மாத்திரம் சொல்லி அவர்களை ஏமாற்றுவார்கள். ஏனெனில் அந்தத் தீண்டத்தகாத மனிதனை வைத்து இஸ்லாமியருக்கு எதிரான வன்முறையில் அடியாட்களாகப் பயன்படுத்தலாம் என்கிற கெட்ட எண்ணமே இதற்குக் காரணம்.

நம் நாட்டிலுள்ள இஸ்லாமியர் யாரும் அரேபியாவிலிருந்தோ துபாயிலிருந்தோ வந்தவர்களல்ல. நம்நாட்டில் பிறந்து இந்து மதத்தால் கீழ் ஜாதியாக்கப்பட்டு தீண்டத்தகாதவர்களாய் இழிவாக நடத்தப்பட்ட கொடுமை தாங்காமல் இஸ்லாம் மதத்திற்கு மாறியவர்கள்தான் அவர்கள். அதாவது இன்னமும் இந்துவாக இருக்கிற தாழ்த்தப்பட்ட இனத்தவனுடைய உறவினர்தான் அவர்கள். அவர்களெல்லாம் மதம் மாறிச் சென்றுவிட்டதால் தங்களுக்குத் தொண்டூழியம் செய்யும் அடிமைகளின் எண்ணிக்கை குறைந்துபோனதே என்கிற ஆத்திரத்தில் அவர்களைக் குத்த வேண்டும் கொல்ல வேண்டும், ஒழித்துக்கட்ட வேண்டும் என்ற வெறி பிறக்கிறது. அந்த வெறியில் தாமே களத்தில் நின்று அவர்களை எதிர்ப்பதற்குப் பதிலாக அவர்களது இனத்தவரைக் கொண்டே அவர்களைத் தாக்குவது மிகமிக எளிதல்லவா? அதனால்தான் தாழ்த்தப்பட்ட மக்களை ஏய்க்க முஸ்லிம்களுக்கு எதிரான வெறியைத் தூண்டி விடுகிறார்கள்.

முகமதியர்கள் இந்தியாவின்மீது படையெடுத்து வந்ததாகவும் இந்தியாவிலுள்ள செல்வங்களையெல்லாம் கொள்ளையடித்துச் சென்று விட்டதாகவும், இங்கு ஆட்சியைப் பிடித்து இந்துக்களையெல்லாம் இஸ்லாமியர் கொடுமைப்படுத்தியதாகவும் இந்துக்கள்மீது இஸ்லாமிய மன்னர்கள் வரிமேல் வரிபோட்டுக் கொடுமைப்படுத்தியதாகவும் வெறியினை ஏற்படுத்தி மதவெறியைத் தூண்டிக் குளிர்காய்வார்கள்.

அவர்களை எதிர்த்து யாரும் கேள்வி கேட்டுவிடாதபடி அம்மக்களை

மதபோதை மதுபோதை ஆகிய போதையிலேயே ஆழ்த்தி வைத்திருப்பார்கள்.

முஸ்லிம்கள் நடத்திய ஆக்கிரமிப்புக்களோ கொலைகளோ கொள்ளைகளோ ஒரு குறிப்பிட்ட காலம் மட்டும்தான் நடந்திருக்க வாய்ப்புள்ளது. முன்னூறு ஆண்டுகளுக்கு மேல் இந்த நாட்டை ஆண்ட இஸ்லாமியர் நினத்திருந்தால் இந்த நாட்டு மக்கள் அனைவரையுமே கத்திமுனையில் மதமாற்றம் செய்திருக்க முடியும். அப்படி இல்லாமல் விருப்பப் பட்டவர்களை மட்டுமே தங்களுடைய மதத்தில் சேர்த்துக்கொண்டார்களே தவிர அனைவரையும் அவர்கள் கட்டாயப்படுத்தவில்லை. பார்ப்பனர் இந்த நாட்டுச் செல்வத்தைக் கொள்ளையடித்ததைவிட அதிகமாக எந்த முஸ்லிமும் இந்த நாட்டைக் கொள்ளையடித்திருக்க வாய்ப்பில்லை. அப்படியே கொள்ளையடித்திருந்தாலும் அதனை எந்த முஸ்லிமும் கடந்த காலத்தில் நிகழ்ந்த ஆக்கிரமிப்புக்களையோ கொள்ளைகளையோ கொடுமைகளையோ இன்று ஆதரித்துப் பேசுபவர் யாரும் கிடையாது.

ஆனால் இந்துமதத்தின் ஜாதிக் கொடுமைகளுக்கு, தீண்டாமைக் கொடுமைகளுக்கு யாரும் இன்றுவரை பொறுப்பேற்றுக் கொள்ளாததோடு ஜாதியை இன்னமும் கடைப்பிடித்துக்கொண்டு தீண்டாமையையும் கடைப்பிடித்து வருபவர்கள் உயர்ஜாதி இந்துக்கள் ஆவார்கள். அந்தத் தீண்டாமையை இன்னமும் நியாயப்படுத்தியும் வருகிறார்கள்.

தீண்டாமை கொடுமையானது என்றால் அதனைக் கடைப்பிடிப்பவர்களும் கொடியவர்கள்தானே? அப்படியானால் அந்தக் கொடியவர்களுக்கு என்ன தண்டனை கொடுப்பது? எத்தனை ஆயிரம் ஆண்டுகளாக இந்தத் தீண்டாமைக் கொடுமைக்கு அம்மக்கள் ஆளாகி இருப்பார்கள்.

ஒரு முன்னூறு ஆண்டுக்காலம் இஸ்லாமியர்களால் கொடுமைப்படுத்தப்பட்டதாகக் கூறிக்கொண்டு முஸ்லிம் சமுதாயத்தையே அழிக்க வேண்டும் என்ற வெறியைத் தூண்டிவிடும் இராம.கோபாலன் அவர்களே! ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அடக்கப்பட்டு ஒடுக்கப்பட்டு நசுக்கப்பட்டுக் கிடந்த மக்கள்

கிளர்ந்தெழுந்தால் நீங்கள் என்ன ஆவீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். அப்படிக் கிளர்ந்து எழுந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் அவர்களை ஏமாற்ற இந்துமத சாஸ்திரத்தில் தீண்டாமைக் கொடுமைக்கு ஆதாரம் இல்லை என்று கதை விடுகிறீர்கள்.

தீண்டாமைக்கு இந்துமத்தில் ஆதாரம் இல்லை என்றால் அது எப்படி வந்து புகுந்தது என்பதையாவது கூறமுடியுமா? உங்கள் மதம்தான் அர்த்தமுள்ள இந்துமதம் ஆயிற்றே! அதில் எப்படி யாருக்கும் தெரியாமல் தீண்டாமை உள்ளே புகுந்தது என்பதைக் கூறமுடியுமா? உங்களுக்குத் தெரியாமல் உங்கள் மதத்திலும் உங்கள் மனத்திலும் தீண்டாமையைப் புகுத்தியவன் இஸ்லாமியனா? கிறிஸ்துவனா? ஆங்கிலேயனா? ஜப்பான்காரனா? சீனாக்காரனா? யார் இந்தத் தீண்டாமையை உங்கள் மதத்தில் புகுத்தியது?

நீங்கள் புகன்றவை அனைத்தும் புளுகுகள் என்பதனை ஆதாரங்களோடு எடுத்து வைத்திருக்கிறோம். அதனை உங்களால் மறுக்க முடியுமா?

மனுதர்மத்தில் உள்ளதையும் சாஸ்திரங்களில் உள்ளதையும் ஆதாரப்பூர்வமாக எடுத்துச் சொல்லி இருக்கிறோம். அந்த மனுதர்மம் ஜாதியையும் தீண்டாமையையும் பாதுகாக்கிறது என்பதனால்தான் ஜாதியையும் தீண்டாமையையும் ஒழிக்க உண்மையிலேயே பாடுபட்ட தந்தை பெரியாரும் அண்ணல் அம்பேத்கரும் அந்த மனுதர்மத்திற்குத் தீ வைத்துக் கொளுத்தினார்கள்.

எனவே, தீண்டாமைய ஒழிக்க வேண்டுமானால் அதற்கு ஆதாரமாக உள்ள ஜாதியை ஒழிக்க வேண்டும். ஜாதியை ஒழிக்க வேண்டுமானால் அதனைப் பாதுகாக்கின்ற மனுதர்மம், இராமாயணம், மகாபாரதம், பகவத் கீதை ஆகியவற்றைக் கொளுத்த வேண்டும் என்று சொல்லுகின்றபொழுது பார்ப்பனரல்லாத மக்களே கூட மிகவும் புத்திசாலித்தனமாகப் பேசுவதாக நினைத்துக்கொண்டு ‘இப்பவெல்லாம் எங்க சார் மனுதர்மம் இருக்கிறது? அது செல்லரித்த ஏடுகளில்தான் இருக்கிறது’ என்று வியாக்கியானம் செய்கிறார்கள்.

அவர்களைத்தான் திராவிடர் கழகத் தலைவர் மானமிகு வீரமணி அவர்கள் ‘படித்த பாமரர்’ என்பார்.

## 15. மனுதர்மம் எங்கே இருக்கிறது?

குஜராத் மாநிலத்தில் மனுதர்மம் பாடப்புத்தகத்திலே இடம் பெற்றிருக்கிறது. ராஜஸ்தான் உயர்நீதிமன்ற வளாகத்திலே மனுவுக்கு சிலை அமைக்கப்பட்டிருக்கிறது. இந்திய அரசியல் சட்டத்தில் ‘இந்துலா’ என்பதற்கு அடிப்படை மனுதர்மம்தான்.

அந்த மனுதர்மத்தின்படி இன்று நாட்டில் பல வழக்குகளில் தீர்ப்புக்கள் சொல்லப்பட்டு வருகின்றன. 1980களில் சூத்திரன் சன்னியாசம் வாங்கக் கூடாது என்று மும்பை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்தது இந்த மனுதர்மத்தின் அடிப்படையில்தான்.

இராஜஸ்தான் மாநிலத்தில் பன்வாரிதேவி என்ற பழங்குடி இனப்பெண் சமூகநல ஊழியராகப் பணியாற்றினார். அந்த மாநிலத்தில் உயர்ஜாதியினரிடையே நடந்த குழந்தைத் திருமணத்தைப் பற்றி காவல்துறைக்கு புகார் கொடுத்து அதனைத் தடுத்து நிறுத்தினார். அதனால் ஆத்திரமடைந்த மேல்ஜாதிக் கும்பலைச்சேர்ந்த அய்ந்துபேர் பன்வாரிதேவியை பாலியல் வன்கொடுமை செய்து கொடுமைப்படுத்தினர். இது வழக்கு மன்றம் சென்றபொழுது நீதிபதிகள் என்ன தீர்ப்புச் சொன்னார்கள் தெரியுமா?

‘ஒரு கீழ்ஜாதிப் பெண்ணை உயர்ஜாதிக்காரர்கள் கற்பழித்திருப்பார்கள் என்பதை நம்ப முடியாது’ என்று தீர்ப்பளித்து அய்வரையும் விடுதலை செய்தார்கள். ஜனநாயக நாட்டிலேயே இதுபோன்ற தீர்ப்புக்கள் வழங்கப்படுகிறது என்று சொன்னால் மன்னராட்சிக்காலத்தில் மனுதர்மம் கோலோச்சிய காலத்தில் எப்படிப்பட்ட கொடுமைகளெல்லாம் நடந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கவே முடியவில்லை. அந்தப் பன்வாரிதேவி இன்னமும் அதற்கு கண்கண்ட உதாரணமாக உயிருடன் வாழ்ந்துகொண்டிருக்கிறார்.

அதுபோல் சிபிஎஸ்இ பாடத்திட்டத்தில் 2018ல் ஆறாம் வகுப்பு சமூகவியல் பாடத்தில் இப்படி ஒரு கேள்வி கேட்கப்பட்டுள்ளது. மத்திய அரசு கல்வி வாரியமான சிபிஎஸ்இயில் 6ம் வகுப்பு மாணவர்களுக்கான கேள்வித்தாளில் வர்ணாசிரமத்தின்படி கீழ் சாதி எது என்று கேட்கப்பட்டுள்ள கேள்வி சர்ச்சையை ஏற்படுத்தியுள்ளது. வர்ணாசிரமத்தின்படி கீழ் சாதி எது என்று மாணவர்கள் மனதில் சாதிய

சிந்தனைகளை வளர்க்கும் வகையில் விஷத்தை விதைக்கும் விதமாக கேட்கப்பட்டுள்ள இந்த கேள்வியால் சர்ச்சை எழுந்துள்ளது. இந்தக் கேள்விக்கான விடைகளாக பிராமணர்கள், சூத்திரர்கள், ஷத்ரியர்கள், வானப்ரஸ்தா என்று கொடுக்கப் பட்டுள்ளன.

இது அப்பட்டமான மனுதர்மச் சிந்தனை அல்லாமல் வேறு என்ன? பிஞ்சு வயதிலேயே மனுதர்ம நஞ்சை ஊட்டுகின்ற வேலையை மத்திய கல்வி நிறுவனம் செய்து கொண்டிருக்கிறதா? இல்லையா? இந்துராஜ்யம் என்று அறிவிக்கப்படாமலேயே இப்படிப்பட்ட சிந்தனையை மாணவர்கள் மத்தியில் ஊட்டுகிறார்கள் என்றால் இந்துராஜ்யம் வந்துவிட்டால் நிலைமை என்னவாகும்?

அந்த மனுதர்மத்தைப் பார்த்து இன்னும் பல வழக்குகளில் தீர்ப்புக்கள் சொல்லப்பட்டு வருகின்றன. 2008 இறுதியில் சென்னை உயர்நீதிமன்றத்துக்கு ஒரு வழக்கு வந்தது. அதாவது ஒரு உயர்ஜாதி ஆணும் தாழ்ந்த ஜாதிப்பெண்ணும் திருமணம் செய்துகொண்டார்கள். அவர்களுக்குப் பிறந்த குழந்தை என்ன ஜாதி என்பது வழக்கு.

அந்த வழக்கில் ஆணினுடைய சாதிதான் பிள்ளைக்கும் இருக்க வேண்டும். கீழ்ஜாதி ஆணுக்கும் மேல்ஜாதிப் பெண்ணுக்கும் பிள்ளை பிறந்தால் அது கீழ்ஜாதி என்றும், மேல்ஜாதி ஆணுக்கும் கீழ்ஜாதிப்பெண்ணுக்கும் குழந்தை பிறந்தால் அது மேல்ஜாதிதான் என்றும் மனுதர்மத்தில் இருப்பதைச் சுட்டிக்காட்டி அந்த வழக்கில் குழந்தையின் தந்தை மேல்ஜாதியாக இருப்பதால் அந்தக் குழந்தையும் மேல்ஜாதிதான் என்றும் தீர்ப்பளித்து அந்தப் பிள்ளைக்கு தாழ்த்தப்பட்டவர்க்கான இடஒதுக்கீட்டின் பலன்களைப் பெற உரிமையில்லை என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

இதுபோன்ற வழக்குகளுக்கு இந்துலா தான் அடிப்படை என்பதை யாராலும் மறுக்க முடியாது. இத்தகைய மனுநீதியை சுயராஜ்யம் வந்தால் சட்டமாகவே ஆக்க வேண்டும் என்று கூறியவர்தான் இந்துத்வாவின் முன்னோடியான பாலகங்காதர திலகர் அவர்கள்.

இவரைப்பற்றி மேற்கோளாக அடிக்கடி கூறப்படுவது ‘சுயராஜ்யம் எனது பிறப்புரிமை’ என்று கூறி இந்திய விடுதலைக்காகப் பாடுபட்டவர்

என்பதாகும். அந்தத் திலகர்பெருமான் அவர்களது சுயராஜ்யம் என்பதற்கு மகாராஷ்டிர அரசின் கல்வித்துறை 1994ல் வெளியிட்ட ‘சத்திரபதி சாகு & சமூக ஜனநாயகத்தின் தூண்’ என்ற நூலில் 363 மற்றும் 364ம் பக்கங்களில்

‘நமது சட்டம் மனுஸ்மிருதிதான். என்று கூறிய திலகர், கற்றறிந்தவர் மற்றும் பிராமணர்களின் ஆலோசனையுடன்தான் அரசன் ஆட்சி நடத்த வேண்டும்’ என்று கூறி சுயராஜ்யத்தின் சட்டமாக மனுஸ்மிருதிதான் இருக்க வேண்டும் என்று திலகர் விரும்பினார் என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது.

அத்துடன் பம்பாய் மாகாண சட்டமன்ற மேலவைக்கு பல்வேறுபட்ட தொழில் செய்பவர்களுக்கு இடம் ஒதுக்க வேண்டும் என்ற கருத்தை எதிர்த்து திலகர் கடுமையான மொழியில் வாதம் செய்தார்.

தொடக்கக் கல்விக்குப் பின் இடைநிலைக் கல்வியைத் தொடரவேண்டாம் என்று தீண்டத்தகாத மக்களுக்கு ஆலோசனை கூறினார். இதன்மூலம் தீண்டத்தகாத ஜாதி மக்கள் அவரவர் ஜாதித் தொழில்களையே செய்ய வேண்டும் என்று கூறிய திலகர் அவர்களுக்கு உயர் கல்வி அளிக்கப்படுவதை எதிர்த்தார்.

அந்தத் திலகருடைய வழியில்தான் 1952ல் சென்னை மாகாண முதலமைச்சராகப் பொறுப்பேற்ற இராஜாஜி குலக்கல்வித்திட்டத்தைக் கொண்டு வந்தார். தந்தை பெரியாரின் பேரெதிர்ப்பால்தான் அந்தத் திட்டம் கைவிடப்பட்டது.

அந்தத் திலகரை குருநாதராகக் கொண்ட இராம கோபாலன் தீண்டாமையை ஒழிக்கப் போவதாகக் கூறுவதெல்லாம் தீண்டத்தகாத மக்களை என்றென்றும் தீண்டாமைச் சகதியில் ஆழ்த்தி வைத்து பார்ப்பன மேல்ஜாதித் தன்மையைப் பாதுகாக்கவே.

ஜாதியை அப்படியே வைத்துக்கொண்டு தீண்டாமையை ஒருபோதும் ஒழித்துவிட முடியாது. அந்த ஜாதியை ஒழிக்க இராம. கோபாலன்கள் ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள். குறைந்தபட்சம்

தங்கள் முதுகில் அணிந்திருக்கும் பூணூலைக்கூடத் தூக்கியெறிய சம்மதிக்க மாட்டார்கள்.

## 16. ‘இந்தியச்சேரி & தீண்டாமையின் மையம்’

அந்த ஜாதி இந்தியா முழுவதும் சிற்றூர், பேரூர், நகரங்கள், மாநகரங்கள் எங்கும் கடைப்பிடிக்கப்பட்டு வந்தாலும் ஜாதிக்கான கட்டுமானம் கிராமங்களில் இன்னும் கெட்டியாகவே அமைந்துள்ளது. கிராம அமைப்பு முறையே இன்னமும் ஜாதி அடிப்படையிலேயே அமைந்துள்ளது.

ஊருக்கு நடுவே கோயில். கோயிலைச் சுற்றி அக்கிரஹாரம். அதற்கு வெளியே உயர் ஜாதியினரின் குடியிருப்பு. அதற்கு வெளியே தொழிலாளிகள் என்று சொல்லக்கூடிய பிற்படுத்தப்பட்ட மக்கள். அதற்கு வெளியே முடிதிருத்துவோர், சலவைத்தொழிலாளி என்று சொல்லக்கூடிய ஜாதியினரின் குடியிருப்பு. அதனை அடுத்து ஊருக்கு ஒதுக்குப் புறமாக தீண்டத்தகாதவர் வசிக்கும் சேரிப்பகுதி.

இதுதான் இந்தியா முழுமைக்குமான கிராம அமைப்புமுறை. இங்குதான் ஜாதி முழுவதுமாகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இதனால்தான் இராம கோபாலன் போன்றோரும் ஆர்எஸ்எஸ் சங் பரிவாரைச் சேர்ந்தவர்களும் காந்தியம் பேசுவோரும் ‘கிராமங்களில்தான் இந்தியப் பண்பாடே அமைந்துள்ளது. அந்தக் கிராமங்களைப் பாதுகாப்பதன் மூலமே இந்தியப் பண்பாட்டைப் பாதுகாக்க முடியும்’ என்கிறார்கள்.

கிராம அமைப்பைப் பாதுகாப்பது என்பது ஜாதி அமைப்பைப் பாதுகாப்பதே! அங்குதான் எந்த ஜாதிக்காரனையும் எளிதில் அடையாளம் காணமுடியும். ஜாதியைப் பாதுகாக்க வேண்டும் என்று சொன்னால் இவர்களின் குட்டு அம்பலப்பட்டுப் போகும் என்பதால்தான் இவர்கள் கிராமங்களைப் பாதுகாக்க வேண்டும் என்கிறார்கள்.

கிராமங்களைப் பாதுகாப்பதாகச் சொன்னாலும் ஜாதியைப் பாதுகாப்பதாகச் சொன்னாலும் இரண்டும் ஒன்றுதான்.

இந்தக் கிராம அமைப்பைப் பற்றி அண்ணல்அம்பேத்கர் என்ன கூறுகிறார்**?**

‘இந்தக் கிராமக்குடியரசில் ஜனநாயகத்துக்கு இடமேயில்லை. இதில் சமத்துவத்துக்கு இடமே இல்லை. இந்தியக் கிராமம் குடியரசின் எல்லாத் தத்துவங்களையும் மறுப்பதாக உள்ளது. இது ஒரு குடியரசு என்றால் தீண்டத்தக்கவர்களால் தீண்டத்தக்கவர்களுக்காக நடத்தப்படும் தீண்டத்தக்கவர்களின் குடியரசாகும். இது தீண்டாதவர்களைச் சுரண்டி வாழ்வதற்காக உருவாக்கப்பட்ட ஒருவகைக் காலனி ஆதிக்கமாகும். இங்கு தீண்டாதவர்களுக்கு எந்தவித உரிமையும் இல்லை. அவர்கள் வாழ்வதெல்லாம் காத்திருக்கவும், பணிசெய்யவும், பணிந்து நடக்கவுமே ஆகும். செய்வதற்கு அல்லது செத்து மடிவதற்கே அவர்கள் உள்ளனர். அவர்கள் கிராமக் குடியரசிற்கு வெளியே உள்ளவர்கள் என்பதால் அவர்களுக்கு உரிமைகள் இல்லை. குடியரசு என்று கூறப்படுகின்ற அதற்கு வெளியில் உள்ளவர்கள் என்பதால் அவர்கள் இந்து சமூகத்திற்கு வெளியே உள்ளனர். இது ஒரு விஷச்சக்கரம். ஆனால் இது மறுக்க முடியாத உண்மை’ என்று அண்ணல் அம்பேத்கர் ‘இந்தியச்சேரி & தீண்டாமையின் மையம்’ என்ற கட்டுரையில் மிகத் தெளிவாகக் கூறுகிறார்.

கிராமங்களில் தீண்டத்தகாதவர் யாருக்கும் எந்த உரிமையும் வழங்கப்படுவதில்லை. கோயில்களில் நடத்தப்படும் திருவிழாவுக்கு தீண்டத்தகாதவர்களிடம் வரி வசூல் செய்வதில்லை. காரணம் வரி வசூல் செய்யப்பட்டால் அவர்களுக்கும் மற்றவர்களைப்போல் உரிமைகள் வழங்கவேண்டும் என்பதாலும் அவர்களும் உரிமை வேண்டும் என்று கேட்பார்கள் என்பதாலும்தான் அவர்களிடம் வரி எதுவும் வசூலிக்கப்படுவதில்லை.

கிராமங்களில் இன்னமும் தனித்தனி கோயில்கள், அதற்கு தனித்தனித் திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. எல்லோருக்கும் பொதுவான கோயில் இருந்தாலும் ஒவ்வொரு ஜாதிக்கும் தனித்தனி மண்டகப்படிகள் நடத்தப்படும். அந்தப் பொதுக் கோயிலுக்குத் தாழ்த்தப்பட்டவர்கள் செல்ல முடியாது. தங்களுக்கும் மற்றவர்களுக்கு உள்ள உரிமை வேண்டும் என்ற தாழ்த்தப்பட்டவர்கள் போராடுகின்ற பொழுதுதான் ஜாதி மோதல்கள் அங்கே உருவாகின்றன.

கிராமங்களில் தாழ்த்தப்பட்டவர்களின் குடியிருப்புக்கள் தனியாக இருப்பதால் அவர்களை எளிதில் அடையாளம் கண்டு ஒதுக்கி வைக்க முடியும். தெருவுக்குள் செருப்புப் போட்டு நடக்கக் கூடாது என்பதும் தேனீர்க்கடைகளில் இரட்டை டம்ளர் முறையைப் பராமரிப்பதும்

இதன்மூலம் சுலபமாகிறது.

கிராமங்கள் அப்படியே பாதுகாக்கப்படுவதால்தான் ஜாதியும் இன்றும் பாதுகாப்புடன் இருந்து வருகிறது. இதனால்தான் தந்தை பெரியார் அவர்கள் கிராமங்களை முற்றிலும் ஒழித்துவிட்டு மக்கள் அனைவரையும் நகர்ப்புறங்களில் குடியமர்த்த வேண்டும் என்றார். ஜாதிக்கென்று தெருக்கள் இருப்பதை முற்றிலும் ஒழித்து சமத்துவபுரங்களை அமைக்க வேண்டும் என்றார். அவரது அந்தக் கனவை நனவாக்கத்தான் தமிழகத்தை அய்ந்துமுறை முதல்வராக இருந்து ஆட்சி செய்த கலைஞர் அவர்கள் தமிழகம் முழுவதும் 240 சமத்துவபுரங்களை உருவாக்கினார். அங்கு மக்கள் எந்தவித ஜாதி ஏற்றத் தாழ்வுமின்றி வாழ வழிவகை செய்தார்கள். 2014 தேர்தல் அறிக்கையிலும் நாங்கள் ஆட்சிக்கு வந்தால் நாடெங்கிலும் இதுபோன்ற சமத்துவபுரங்களை அமைப்போம் என்று திமுக குறிப்பிட்டுள்ளது. அதுபோல் நாங்கள் அமைக்கப் போகும் ராஜராஜ்ஜியத்தில் நாடு பூராவும் நாங்கள் சமத்துவபுரங்களை உருவாக்குவோம் என்று கூறுவார்களா?

மோடி ஆண்ட மாநிலத்தில் பஞ்சாயத்து தண்ணீர்க் குழாய்களிலேயே இந்த நேரத்தில் பிராமணர் தண்ணீர் பிடிக்கலாம், இந்த நேரத்தில் வைசியர் தண்ணீர் பிடிக்கலாம், இந்த நேரத்தில் சூத்திரர் தண்ணீர் பிடிக்கலாம், இந்த நேரத்தில்தான் தீண்டத்தகாதவர் தண்ணீர் பிடிக்க வேண்டும் என்று ஒவ்வொரு ஜாதிக்கும் நேரம் ஒதுக்கித் தண்ணீர் வழங்கப்படுகிறது. இதுதான் இந்துராஜ்யம் என்கிறார்கள். அத்தகைய இந்துராஜ்ஜியத்தை உருவாக்கப் பாடுபடும் இராம.கோபாலன் தீண்டாமைக்கு இந்துமதத்தில் ஆதாரம் இல்லை என்பது இமயமலையையே இல்லை என்பது போன்றதாகும்.

## 17. குஜராத்தில் தாழ்த்தப்பட்டோர் நிலை

அப்படிப்பட்ட குஜராத் இந்தியாவிலேயே முதன்மை மாநிலம் என்று கதைவிட்டு பல கோடி ரூபாய்களை விளம்பரத்திற்காக வாறி இறைத்து மோடி அவர்களை பிரதமராக்கியிருக்கிறது பாஜக. அந்த மோடி ஆட்சி செய்த குஜராத்தில் தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை என்ன?

1. நவ்ஷர்ஜான் என்ற அமைப்பு 2010ஆம் ஆண்டு 1589 கிராமங்களை ஆய்வு செய்தது. அவற்றில் 90 விழுக்காடு கிராமங்களில் தீண்டாமை கடைப்பிடிக்கப்படுகிறது.
2. நாட்டைத் தூய்மைப்படுத்தும் அர்ச்சகர்கள் என்று மேடையில் புகழும் மோடியின் அரசின் கீழ் துப்புரவுத் தொழிலாளர்களுக்கு அரசு வேலைகூடக் கிடையாது. பெரும்பாலானவர்கள் ஒப்பந்தத் தொழிலாளர்கள்தான். ஊதியமோ நாளொன்றுக்கு 50 முதல் 100 ரூபாய்தான்.
3. முடிவெட்டுவதற்குக் கூட ஜாதி பார்க்கும் குஜராத்தின் ஜாதி இந்துக்கள் கொடுக்கும் மன உளைச்சல் தாங்க முடியாமல் 200 குடும்பங்கள் பௌத்தத்திற்கு மாறியிருக்கின்றார்கள்.
4. தலித் குழந்தைகள் துப்புரவு வேலை செய்யப் பணிக்கப் படுகிறார்கள்.
5. ஒரு தலித் மைனர் பெண் வன்புணர்ச்சிக்குள்ளானதைக் கண்டித்து தலித் மக்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினால் காவல்துறை லத்தி சார்ஜ் செய்கிறது.
6. ஒரு தலித் குடும்பத்தை ஊரைவிட்டுக் காலி செய்யச் சொன்னது ஆதிக்க சாதிப் பஞ்சாயத்து.
7. குஜராத் மற்றும் ராஜஸ்தானில் செய்யப்பட்ட ஆய்வு 90 விழுக்காடு தலித் குழந்தைகள் மருத்துவத்தின்போதும் 80 விழுக்காடு குழந்தைகள் ரத்தப் பரிசோதனை போன்ற மருத்துவப் பரிசோதனைகளில் பாகுபாடுகளுக்கு உள்ளாகின்றனர் என்று தெரிவிக்கின்றது.
8. 2010ஆம் ஆண்டு யுனிசெப் நிறுவனம் நடத்திய ஆய்வில் 1298 தடவை மருந்து வழங்கப்பட்ட குழந்தைகள் 1181 தடவை பாகுபாடுகளுக்கு உள்ளாகிறார்கள் என்று தெரிவிக்கின்றது.
9. தலித் மக்களுக்கு மோடியின் குஜராத்தில் குடிக்கத் தண்ணீர் இல்லை. இது குறித்துக் குரல் கொடுத்தால் மக்களின் முதல்வரான மோடிக்கு களங்கம் ஏற்படும். இதன் காரணமாக

எங்களை அவர்கள் தாக்கக் கூடும் என்பதால் மவுனம் காத்தாகச் சொல்கிறார்கள்.

இன்னும் அச்சில் ஏறாத இங்கே பட்டியலிடப்படாத பொதுவெளிக்கு வராத கொடுமைகள் ஏராளம் குஜராத்தில் உண்டு.

அண்மையில் குஜராத்தில் செத்துப் போன மாட்டின் தோலை உறித்தார்கள் என்பதற்காக தலித் இளைஞர்களைக் கட்டிப்போட்டு அடித்துச் சித்திரவதை செய்ததை யாராவது இல்லையென்று மறுக்க முடியுமா? அவர்கள் என்ன குற்றம் செய்தார்கள்? உங்கள் இந்துமதம் அவர்களுக்கு விதித்திருக்கும் தர்மம் என்ன? நீங்கள் தர்மம் என்று கூறுவதே இந்த ஜாதி தர்மம்தானே? அப்படி நீங்கள் கூறுகின்ற தர்மத்தைச் செய்தார்கள். உங்களது மாதா என்று சொல்லும் உங்கள் அன்னை இறந்துவிட்டால் அதனை அப்புறப்படுத்தினார்கள். அப்படி அப்புறப்படுத்தும்போது அதன் தோலை உறித்தார்கள். அதுதானே அவர்கள் செய்த ‘கொடும்’ குற்றம்? அதற்காகத்தானே அவர்களைக் கட்டி வைத்து சித்திரவதை செய்தீர்கள்?

அதை அவர்கள் எவ்வளவு நாள்களுக்குப் பொறுத்துக் கொள்வார்கள்? அதனால்தான் அவர்கள் கிளர்ந்து எழுந்துள்ளார்கள். உங்கள் மாதா செத்துப் போனால் நீங்களே அப்புறப்படுத்திக் கொள்ளுங்கள். இனி நாங்கள் அதனைச் செய்ய மாட்டோம் என்று சொல்லி செத்துப்போன மாடுகளை எல்லாம் கலெக்டர் அலுவலகங்கள் முன் வீசிச் சென்றார்களே. உங்கள் இந்து மதத்தைப் போல அதுவும் புழுப் புழுத்து நாறிப்போய்க்கிடந்ததே. அதுபோல நீங்களும் ஒருநாள் நாறிப்போவீர்கள்.

## 18. கடந்த 60 ஆண்டுகளில் ஏற்பட்ட சமூக மாற்றம் குறித்து ஆய்வு

இந்தியா சுதந்திரமடைந்து 64 ஆண்டுகள் ஆனபிறகு இந்தியாவில் தீண்டாமை குறித்த ஒரு கணக்கெடுப்பை அமெரிக்காவைச் சேர்ந்த மெரிலேண்ட் பல்கலைக் கழகத்தின் சமூகப் பொருளாதார ஆய்வு மய்யம் இந்திய மனிதவள மேம்பாட்டு மய்யத்துடன் இணைந்து ஆய்வு ஒன்றை நடத்தியது.

இதில் பல்வேறு இன, மொழி, மத மக்கள் வாழும் நாடான இந்தியாவில் கடந்த 60 ஆண்டுகளில் ஏற்பட்ட சமூக மாற்றம் குறித்து ஆய்வு நடத்தப்பட்டது.

சுதந்திரம் பெற்று 70 ஆண்டுகள் ஆகியும் இன்னும் தீண்டாமைக் கொடுமை நாடெங்கிலும் தலைவிரித்து ஆடுகிறது. இந்திய அரசமைப்புச் சட்டத்தில் தீண்டாமை ஒரு பாவச்செயல் என்று குறிப்பிடப்பட்டு இருப்பினும் அந்தப் பாவச் செயலை நான்கில் ஒரு இந்தியன் செய்துகொண்டுதான் இருக்கிறான். இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலும் பல்வேறு குழுக்களாகப் பிரிந்து இந்த ஆய்வை நடத்தினர். இந்த ஆய்வின் முடிவில் தீண்டாமையை இன்றளவும் கடைப்பிடிப்பதில் முதலிடம் வகிப்பவர்கள் பார்ப்பனர்கள் என்று தெரிய வந்துள்ளது.

ஆய்வின்போது கேட்கப்பட்ட நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறீர்களா? என்ற கேள்விக்கு 54 விழுக்காட்டினர் ஆம் என்றே கூறியுள்ளனர். இல்லை என்று கூறிய பார்ப்பனர்களில் பொது இடங்களில் தீண்டாமையைக் கடைப்பிடிப்பதில்லை என்றாலும் எனது வீட்டில் ஆச்சாரம் கடைப்பிடிக்கப் படுகிறது. இதர சாதியினரை எங்கள் வீட்டிற்குள் அனுமதிக்க மாட்டோம் என்று பதில் அளித்தனர்.

இந்து மதத்தைச் சார்ந்தவராக இருப்பினும் தாழ்த்தப்பட்டவராக இருப்பின் நாங்கள் முற்றிலும் அனுமதிக்கவே மாட்டோம் என்று கூறியுள்ளனர். இதே வேளையில் ஜெயின் சமூகத்தினரும் தீண்டாமையைக் கடைப்பிடிப்பவராக உள்ளனர். தீண்டாமையைக்

கடைப்பிடிப்பவர்களில் கிறிஸ்தவர்களும் முஸ்லிம்களும் கூட அடங்குவர். இந்தியாவில் மட்டுமே இந்த மதத்தவர்களிடம் தீண்டாமை நிலவி வருகிறது. இவர்கள் இந்து மதத்திலிருந்து பிரிந்து சென்ற காரணத்தால் இப்பழக்கம் இவர்களிடையே தென்படுகிறது.

பார்ப்பனர் வீட்டில் பிறக்கும் ஒருவனுக்கு அவனை வளர்க்கும் முறையிலேயே தீண்டாமை மனதளவில் அவன் உடன் பிறந்த ஒன்றாகி விடுகிறது. இந்தக் காரணத்தால் அவன் பொதுவிலும் தீண்டாமையைக் கடைப்பிடிக்கத் தயங்குவதில்லை. தென் மாநிலங்களில் கிறிஸ்தவ ஆலயங்களில் உயர் சாதியினரக்கென தனி வழிபாட்டு இடங்களும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எனத் தனி வழிபாட்டு இடங்களும் உள்ளன என்றும் ஒவ்வொரு மாநிலத்திலும் எந்த அளவுக்கு தீண்டாமை கடைப்பிடிக்கப் படுகிறது என்ற புள்ளி விவரங்களையும் அந்த அறிக்கையில் ஆய்வுக் குழுவினர் தெரிவித்துள்ளனர். (விடுதலை 3&12&2014)

சுதந்திரம் அடைந்து 70 ஆண்டுகள் ஆன பிறகும் இந்த புண்ணிய பூமியில் தீண்டாமை இந்த அளவிற்குத் தாண்டவமாடுகின்றபொழுது “தெங்கடிஜியும் அம்பேத்காரும் பல நாட்கள் சமுதாயப் பிரச்சினைகள் குறித்து விவாதித்ததாகவும் அம்பேத்கர் அவர்கள் இந்துமதக் கோட்பாடுகள் எதிலும் தீண்டாமை சொல்லப்படவில்லை என்பதை ஹிந்து சன்னியாசிகள் துறவியர் ஒன்று கூடி பகிரங்கமாக அறிவித்திட வேண்டும் என்று விரும்பியதாகவும் அதனை ஏற்று சமுதாயத்தில் நிலவி வரும் தீண்டாமைக் கொடுமைக்கு சாஸ்திர அங்கீகாரம் கிடையாது என தீர்மானம் இயற்றப்பட்டதாகவும் ஆர்எஸ்எஸ் புளுகுகிறது.

தீண்டாமைக்கு ஆதாரம் இல்லையென்றால் அதனை ஒழிக்கவேண்டிய அவசியம் இல்லையே! ஆதாரமே இல்லாத தீண்டாமையை ஒழிக்க இராம.கோபாலன் வழிசொல்கிறார் என்றால் திருடனே திருட்டை ஒழிக்க வழிசொல்லுவது போலத்தான். நான் திருடவே இல்லை. திருடியதற்கான ஆதாரமே இல்லை என்று சொல்கின்ற திருடனே நானே திருட்டை ஒழிக்க வழிசொல்லுகிறேன் என்றால் எப்படி இருக்கும்? அப்படித்தான் இருக்கிறது இராம.கோபாலன் சொல்வதும்.

# 19. தீண்டாமையை ஒழிக்க உண்மையான வழிகாட்டும் தலைவர்கள்

தந்தை பெரியாரும் அண்ணல் அம்பேத்கரும்:

தீண்டாமையை ஒழிக்க உண்மையான வழிகளைச் சொன்னவர்கள் அண்ணல் அம்பேத்கரும் தந்தை பெரியாரும்தான். இந்த விசயத்தில் பெரியார் சொன்னதை எடுத்துப்போட்டு கீழே அம்பேத்கர் என்று போட்டாலும், அம்பேத்கர் சொன்னதை எடுத்துப் போட்டு கீழே பெரியார் என்று போட்டாலும் அது மிகவும் சரியாக இருக்கும். இரண்டுபேரும் சமூக விஞ்ஞானிகள். சமுதாயத்தில் நிலவும் நோயைத் தடுக்க சரியான வழிமுறையைக் கண்டவர்கள்.

"சாதியும் தீண்டாமையும் ஒரே கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த ஒரே ஒருங்கிணைந்த முறையாகும். சாதி இந்துக்கள் தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறார்கள் எனில் அதற்குக் காரணம் அவர்கள் சாதியில் நம்பிக்கை வைத்திருப்பதுதான். இந்தக் கருத்தை வைத்துப் பார்த்தால் சாதியை அழிக்காமல் தீண்டாமையை ஒழிக்கலாம் என்று நம்புவது சற்றும் பயனற்றது. சாதியும் தீண்டாமையும் வெவ்வேறானவை என்ற கருத்துத் தவறானது. இரண்டும் ஒன்றை விட்டு ஒன்று பிரிக்க முடியாதவை. சாதிமுறையின் நீட்சியே தீண்டாமை. இரண்டும் பிரிந்து நிற்கமுடியாது. இரண்டும் சேர்ந்தே நிற்கின்றன. சேர்ந்தேதான் வீழும்" என்று சாதியை ஒழிக்காமல் தீண்டாமைய ஒழிக்க முடியாது என்பதை அண்ணல் அம்பேத்கர் மிகத் தெளிவாகச் சொல்லுகிறார்.

ஜாதி ஒழிப்பையே மய்யமாக வைத்துப் போராடி வந்த பெரியார் அண்ணல் அம்பேத்கரின் 'ஜாதியை ஒழிக்க வழி" என்ற புத்தகத்தை தமிழில் வெளியிட்டார்கள். முதன்முதலில் தமிழில் வெளிவந்த அம்பேத்கருடைய புத்தகமும் இதுதான். அதனைச் செய்தவர் பெரியார்தான்.

அண்ணல் அம்பேத்கர் போலவே பெரியாரும் கூறுவதைப் பார்ப்போம்:

“தீண்டாமை என்பது ஜாதி காரணமாக ஏற்பட்டதே தவிர அதற்கு வேறு காரணமோ, ஆதாரமோ இல்லை. தீண்டாமை என்பது ஒரு ஜாதியானை மற்றொரு ஜாதியான் தொடக் கூடாது என்பதற்குத்தான் நாம் பயன்படுத்துகின்றோமே ஒழிய மற்றெதற்குத் தீண்டாமையைப் பயன்படுத்துகின்றோம்? அதுவும் அப்படிப் பயன்படுத்துவதும் இந்துக்கள் என்னும் இந்து மதத்தாருக்குள் இருந்து வருகிறதே ஒழிய மற்ற யாருக்குள் இருந்து வருகிறது? ஆகவே தீண்டாமை என்பது இந்து மதத்தின் காரணமாக இந்துக்கள் என்பாருக்குள் மாத்திரம் ஜாதி காரணமாக மேல்ஜாதி & கீழ்ஜாதி என்பவர்களுக்குள் மாத்திரம் இருந்துவரும் காரியமே தவிர, தீண்டாமை மதத்திற்கும் ஜாதிக்கும் அப்பாற்பட்டதல்ல. ஆகவே, ஜாதியை வைத்துக் கொண்டு தீண்டாமை ஒழிய வேண்டும் என்பதும், இந்துமதத்தை வைத்துக் கொண்டு தீண்டாமை போக வேண்டும் என்பதும் மாபெரும் முட்டாள்தனமாகுமே தவிர, சிறிதும் அறிவுடைமை ஆகாது” என்று பெரியார் கூறுகிறார்.

தந்தை பெரியார் அவர்கள் அந்த ஜாதியை ஒழிப்பதற்கான வழிமுறைகளை தனது வாழ்நாள் முழுவதும் மக்களிடம் எடுத்துக்கூறி வந்தார். ஜாதி ஒழிப்புக்கான வழிமுறை குறித்து 10.1.1947ல் விடுதலை ஏட்டில் அவர்

“ஜாதியை ஒழிப்பதற்கு பல அடிப்படையான முறைகள் இருக்கின்றன. சாதிப்பட்டங்கள் சட்டப்பூர்வமாகத் தடுக்கப்பட வேண்டும். புதிதாக மணம் புரிவோர் அத்தனைபேரும் கலப்பு மணங்கள் செய்யுமாறு தூண்டக்கூடிய சட்டங்கள் இயற்றப்பட வேண்டும். ஒரே வகுப்பில் ஒரே சாதிப்பிரிவில் திருமணம் செய்பவர்களுக்குப் பல கஷ்டமான நிபந்தனைகளையும் கட்டுத் திட்டங்களையும் விதித்து அத்தகைய திருமணம் செய்பவர்களுக்கு சமுதாயத்தில் செல்வாக்கில்லாமல் செய்ய வேண்டும். சாதிகளைக் குறிக்கும் நெற்றிக்குறி, உடை, பூணூல் முதலிய சின்னங்களையும் சட்டப் பூர்வமாகத் தடுக்க வேண்டும். காவல்துறைப் பதவிகளைத் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தரவேண்டும். தாழ்த்தப்பட்டவர்களை அக்கிரஹாரத்தில் குடியிருக்கச் செய்ய வேண்டும். தீண்டாமையைப் பாராட்டாத சிறந்த கிராமங்களுக்குப் பரிசளிக்க வேண்டும். தாழ்த்தப்பட்டவர்களுக்கென தனியாகச் சேரி இருப்பதை ஒழிக்க வேண்டும்.” என்று எழுதுகிறார்.

இந்திய அரசியல் சட்டம் 1950ல் அமுலுக்கு வந்தது. அதனை இயற்றிய அண்ணல் அம்பேத்கர் அவர்களால் தனது இலட்சியமான ஜாதி ஒழிப்பை வலியுறுத்தி சட்டம் எழுத இயலவில்லை. அதனால் குறைந்தபட்சம் தீண்டாமை ஒழிப்பையாவது சட்டப்படி தடுக்க வழிகாண வேண்டும் என்பதால்தான் ‘இந்திய அரசியல் சட்டத்தில் தீண்டாமை ஒழிக்கப்பட்டு விட்டது. அதனை எந்த வடிவத்தில் கடைப்பிடித்தாலும் சட்டப்படி குற்றம்’ என்று சட்டம் இயற்றினார்.

இதன்மூலம் தீண்டாமை ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது என்றாலும் அது முற்றிலும் ஒழிக்கப்படவில்லை. காரணம், அந்தத் தீண்டாமைக்கு அடிப்படையான ஜாதி ஒழிக்கப்படாமல் அப்படியே இருப்பதால்தான். ஜாதியைப் பாதுகாக்கும் பல பிரிவுகள் இந்திய அரசியல் சட்டத்தில் பல இடங்களில் உள்ளன. அதனால்தான் தந்தை பெரியார் அவர்கள் ஜாதியைப் பாதுகாக்கும் சட்டத்தைக் கொளுத்திவிட்டு 1957 நவம்பர் 26ந்தேதி பல்லாயிரம் தொண்டர்களுடன் சிறையேகினார். சிறையிலேயே பல தோழர்கள் தங்கள் உயிரையும் தியாகம் செய்தார்கள் என்பது வரலாறு.

அத்துடன் தந்தை பெரியார் அவர்கள் 1973 டிசம்பர் 8, 9 ஆகிய தேதிகளில் சென்னையில் நடந்த சமுதாய இழிவு ஒழிப்பு மாநாட்டில், “இந்திய அரசியல் சட்டத்தில் 17வது பிரிவில் உள்ள தீண்டாமை ஒழிக்கப்பட்டு விட்டது என்பதில் ‘தீண்டாமை’ என்ற சொல்லை நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக ‘ஜாதி’ என்று போடுவதோடு அதில் ணிஜ்ஜீறீணீஸீணீtவீஷீஸீ என்ற குறிப்புகளின் கீழ் சிணீstமீ வீஸீநீறீuபீமீs uஸீtஷீuநீலீணீதீவீறீவீtஹ் ணீறீsஷீ  என்றும் சேர்க்கப்பட வேண்டும்” என்று நிறைவேற்றிய தீர்மானம் ஜாதியை அரசியல் சட்டப் பூர்வமாக ஒழிக்கும் நடவடிக்கையாகும்.

இந்த ஜாதியைப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காகவே இயக்கம் நடத்தி வருபவர்கள் இராம.கோபாலன்கள். அவர்கள் தங்களை உயர்ந்த ஜாதி என்று அழைத்துக் கொள்பவர்கள். அவர்கள் உயர்ந்த ஜாதி என்கிற போது மற்றவர்கள் தாழ்ந்த ஜாதிதானே! இந்த உயர்ந்த ஜாதி & தாழ்ந்த ஜாதி இருந்தால் தீண்டாமையும் இருக்கும் அல்லவா? இந்த உயர்ஜாதி மனப்பான்மை இருக்கும்வரை தீண்டாமையும் இருக்கும் அல்லவா?

“தன்னை உயர்ந்த ஜாதியாகவும் இன்னொரு மனிதனை தாழ்ந்த ஜாதியாகவும் கருதுபவன் ஒரு மனநோயாளி” என்கிறார் அண்ணல் அம்பேத்கர்.

அந்த உயர்ஜாதி மனப்பான்மை உள்ள மன நோயாளியாகத்தான் இராம.கோபாலன். தெங்கடி போன்றவர்கள் இருக்கிறார்களே தவிர உண்மையில் தீண்டாமையை ஒழிக்க இவர்கள் முன்வர மாட்டார்கள். தீண்டாமையை ஒழிப்பதாக வெறும் வாய்ப்பந்தல் போட்டு மக்களை ஏமாற்றி காலம் கழித்து வருகின்றனர்.

இந்த தெங்கடிஜி, இராம.கோபாலன், இல.கணேசன் வரிசையில் பிஜேபி அரசாங்கம் பாரத ரத்னா விருது வழங்கியுள்ள மதன் மோகன் மாளவியா அவர்கள் 1930 களில் தமிழ்நாட்டுக்கு வந்து சென்னையில் வேதமறிந்த பார்ப்பனர்கள் மத்தியில் பேசும்போது இந்துமத வேதங்களில் தீண்டாமைக்கு விதியில்லை என்று கூறினாராம். அந்த வேதமறிந்த பார்ப்பனர்கள் தீண்டாமைக்கு ஆதாரமாக சமஸ்கிருத்தில் அச்சிடப்பட்ட புத்தகத்தைத் தூக்கிக் காட்டினவுடன் மாளவியா வாயடைத்துப் போனாராம். அதுபோல் இந்த இராம. கோபாலன்களை வாயடைக்கச் செய்ய வேண்டும் என்பதற்கதாகவே இப்புத்தகத்தை வெளியிடுகிறோம்.

இவ்வளவு ஆதாரங்களை நாம் அண்ணல் அவர்கள் எழுத்தின் மூலமாகவும் தந்தை பெரியார் அவர்களின் தத்துவங்களின் மூலமாகவும் தீண்டாமை என்பது இந்து மதத்தின் கொடுங்கரங்களில் ஒன்று என்பதை ஆணித்தரமாக எடுத்துரைத்தும் பெல் நிறுவனத்தில் பல்வேறு துண்டறிக்கைகள் மூலமாக வெளிப்படு;த்தியும் வந்திருந்தாலும் அவர்கள் தங்கள் பொய்ப் பிரச்சாரத்தைத் தொடர்ந்து செய்துகொண்டே இருக்கின்றனர்.

அவர்களுடைய நோக்கம் உண்மையிலேயே தீண்டாமையை ஒழிப்பதோ அத் தீண்டாமையைக் கடைப்பிடிப்பவர்களைத் திருத்துவதோ அல்ல. மாறாக தீண்டாமைக்கு இந்து சாஸ்திரங்களில் இடம் இல்லை என்று சொல்லி அப்பாவி தாழ்த்தப்பட்ட மக்களை ஏமாற்றி அவர்கள் வலையில் விழ வைத்து வாக்கு வங்கிக்கும் பிற மதத்தினரை எதிர்த்து அழித்து ஒழிக்கும் கருவியாகவும் அவர்களைப் பயன்படுத்துவதே ஆகும்.

## 20. அம்பேத்கர் ஜெயந்தி சிறப்பிதழ் வெளியிட்ட பிஎம்எஸ்&சின் பித்தலாட்டங்கள்

ஆர்எஸ்எஸ்&சினுடைய தொழிற்சங்கமான பாரதீய மஸ்தூர் சங்கம் ஒவ்வொரு ஆண்டும் அம்பேத்கர் ஜெயந்தி சிறப்பிதழ் என்ற ஒன்றை வெளியிட்டு தனது பொய்ப் பிரச்சாரத்தினைச் செய்து தாழ்த்தப்பட்ட மக்களை ஏமாற்றி வருகிறது. அந்த வகையில் 2017ம் ஆண்டு அவர்கள் வெளியிட்ட பி.எம்.எஸ் நியூஸ் என்ற மாத இதழில் அம்பேத்கரைப் பற்றியும் தீண்டாமை குறித்தும் தப்பும் தவறுமான செய்திகளை எழுதியுள்ளது.

அதில் அவர்கள் கக்கியுள்ள பொய்களை தொடர்ந்து துண்டறிக்கைளாக நாங்கள் வெளியிட்டோம். ஆனால் அதற்கெல்லாம் எந்த விதமான பதிலோ மறுப்போ இதுவரை அவர்கள் தெரிவிக்கவில்லை. நாம் சொன்னதற்கு மறுப்பு இருந்தால்தானே அவர்கள் தெரிவிப்பதற்கு?

அதில் ஏற்கனவே சொன்ன பழைய பொய்களையே மீண்டும் மீண்டும் சொல்லி வருகிறது

தீண்டாமைக்கு இந்து மத சாஸ்திரங்களில் இடமில்லை என்பதையும் ஆர்எஸ்எஸ் தலைவர் ஸ்ரீ குருஜி எம்.எஸ் கோல்வால்கர் அவர்களின் இடைவிடாத முயற்சியால் பிரயாகையில் நடந்த விஸ்வ ஹிந்து பரிஷத் மாநாட்டில் சங்கராச்சாரி போன்ற தர்மாதிகாரிகளின் மூலமாகவே தீண்டாமைக்கு ஹிந்துமத சாஸ்திரங்களில் இடமில்லை என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாக பிஎம்எஸ் நியூஸ் தெரிவிக்கிறது

அப்படி நிறைவேற்றியது உண்மையானால் இந்த சங்கராச்சாரிகள் இந்நேரம் தீண்டாமையைக் கைவிட்டிருக்க வேண்டும் அல்லவா? ஆனால் தீண்டாமையை ஒழிக்க தீர்மானம் இயற்றியதாக இவர்கள் சொல்லும் அதே சங்கராச்சாரிகள்தான் இன்னமும் தீண்டாமைக்கு ஆதாரம் இருப்பதாகச் சொல்லி வருகிறார்கள்.

அப்படி இருந்தும் அவர்கள் மறுபடியும் மறுபடியும் இதே பொய்யைச்

சொல்லி வருவது ஏன் என்பதுதான் கேள்விக்குறி. அது மாத்திரமல்லாமல் அண்ணல் அம்பேத்கர் குறித்து அந்த பிஎம்எஸ் நியூஸ் இதழில் இன்னும் ஏராளமான பொய்களைக் கூறி மக்களை ஏய்க்கப் பார்க்கிறார்கள்

அதனை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

கழிவறையை தலைமுடியால் சுத்தம் செய்தாராம் இராமகிருஷ்ண பரமஹம்சர்:

தீண்டாமைக்கு ஆதாரம் இல்லை என்று சொல்லும் இவர்கள் தீண்டாமையை ஒழிக்க இவர்களது முன்னோர்கள் செய்ததாகச் சொல்லும் செயல்முறைகள்தான் மிகவும் வேடிக்கையானது. அதாவது இராமகிருஷ்ணபரமஹம்சர் தீண்டாமையை ஒழிக்க தீண்டத்தகாதவர்கள் குடியிருப்புப் பகுதிகளுக்குச் சென்று அவர்களது கழிவறைகளை தனது தலைமுடியால் சுத்தம் செய்தாராம். இதைவிடக் கேலிக்கூத்து வேறு ஏதாவது இருக்க முடியுமா?

கழிவறையை எப்படி தலைமுடியால் சுத்தம் செய்ய முடியும்? முடியை மொட்டை அடித்து அந்த முடியால் சுத்தம் செய்தாரா? அல்லது தலையில் இருக்கும் முடியை அப்படியே வைத்துக்கொண்டு தலைகீழாக நின்றுகொண்டு சுத்தம் செய்தாரா?

தலைமுடி என்பது மென்மையானது. அதனால் எப்படி கழிவறையை சுத்தம் செய்ய முடியும்? அந்த முடி என்ன வயர் பிரஷ் மாதிரி கெட்டியாக உறுதியாக இருக்குமா? அதனால் சுத்தம் செய்தால் கழிவறை சுத்தம் ஆகுமா? இப்படி கழிவறையை தலைமுடியால் சுத்தம் செய்வதாகச் சொல்வது என்ன டெக்னாலஜி? அவர்கள் விளக்குவார்களா? அப்படி இன்று யாராவது அதுபோல தலைமுடியால் கழிவறையைச் சுத்தம் செய்து காட்டுவார்களா?

அதைவிட இராமகிருஷ்ண பரமஹம்சர் கிட்டத்தட்ட 120 ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தவர். அந்தக் காலத்தில் தலித் மக்கள் குடியிருக்க ஓலைக்குடிசைக்குக் கூட வழியில்லை. அப்படி இருக்க அந்தப் பகுதியில் கழிவறைகள் எப்படி இருந்திருக்க முடியும்?

கெட்டியான சுட்ட செங்கல்லால்கூட வீடு கட்டிக்கொள்ள உரிமையற்றவர்கள் அந்த மக்கள். ஓடு போட்ட வீடு கட்டிக்கொள்ளக் கூடாது என்று சமுதாயத்தால் கட்டாயப்படுத்தப்பட்டவர்கள். அவர்களுக்கு குடிக்கக் கூட நல்ல தண்ணீர் கிடையாது. குடிக்கவே நல்ல தண்ணீர் இல்லாதபோது குளிக்கவோ துணி துவைக்கவோ கூட வாய்ப்பு மறுக்கப்பட்டவர்கள். அப்படிப்பட்ட மக்கள் கழிவறையுடன் வீடு கட்டி இருந்தார்கள் என்பதும் அந்தக் கழிவறையை இவர் முடியால் சுத்தம் செய்தார் என்பதும் கடைந்தெடுத்த பித்தலாட்டம் அல்லவா?

அவர்கள் தீண்டாமையை ஒழித்ததற்கு இன்னொரு கதையையும் அதில் சொல்கிறார்கள்.

அதாவது ஒரு கிராமக் கோயிலில் அனைவரும் அமரும்படியாக மிகப்பெரிய பந்தல் கோயில் முன்பு போடப்பட்டது. ஆனால் தீண்டத்தகாதவர்கள் எனப்படுவோர் பந்தலுக்கு வெளியே நிற்பது வழக்கம். பந்தலுக்குள் மேல் சாதியைச் சேர்ந்தவர் கூடியிருந்தனர். பூஜை நேரத்தில் ஆத்மநாதசாமி பந்தலுக்கு வெளியே போய் அங்கிருந்த தாழ்த்தப்பட்ட மக்களுடன் நின்று கொண்டார். அவர் ராமநாதபுரம் அரசபரம்பரையைச் சேர்ந்தவர் என்பதால் அவருக்குத்தான் முதல் பிரசாதம் கர்ப்பக் கிரகத்தின் அருகே கொடுக்கப்படும். அர்ச்சகரும் கிராமத் தலைவர்களும் கோயிலுக்குள்ளே வந்து சன்னிதியில் பிரசாதம் பெற்றுக் கொள்ளும்படி அழைத்தனர். ஆனால் பந்தலுக்கு வெளியே நிற்பவர்கள் உள்ளே வர அனுமதிக்காதவரையில் தானும் வரப்போவதில்லை எனவும் அனுமதித்தால் மட்டுமே தானும் உள்ளே வந்து பிரசாதம் பெற்றுக் கொள்வேன் என்றும் ஆத்மநாதசாமி கூறினார்.

நீண்ட விவாதத்திற்கும் ஆலோசனைகளுக்கும் பிறகு கிராமப் பெரியோர்கள் தீண்டத்தகாதவர்களைக் கோயிலுக்குள் வரும்படி அழைத்தனர். அதன்பிறகே ஆத்மநாதசாமி பிரசாதத்தையும் மரியாதையையும் ஏற்க முன்வந்தார். பிறகு அவர்களுடன்தான் சாப்பிடுவேன் என்று அவர் உறுதியாகக் கூறியபடியால் கிராமத்தினர் தீண்டத்தகாதவர்கள் எனப்படுவோரையும் பந்தலுக்குள்ளேயே அமரச் செய்து உணவளித்தனர். இவ்வாறு தன் கிராமத்தில் தீண்டாமை ஒழியும் வகையில் ஒரு மாற்றத்தைக் கொணர்ந்தவர் ராமநாதபுரம் ஆர்எஸ்எஸ்ஸின் மாவட்ட சர்சங் சாலக்காக இருந்த அமரர் ஆத்மநாதசாமி என்கின்ற ஒரு செய்தியை கட்டம் கட்டி பக்கம் 23ல்

வெளியிட்டுள்ளார்கள்.

இது எந்த ஆண்டு எந்த ஊர் என்றெல்லாம் குறிப்பு எதுவும் கிடையாது. இப்பொழுதும் அந்த ஊரில் தாழ்த்தப்பட்டவர்கள் அது மாதிரி பந்தலுக்குள் அமர வைக்கப்படுகிறார்களா என்ற விவரமும் தெரியவில்லை. இதில் என்ன சொல்கிறார்கள் என்றால் பந்தலுக்கு உள்ளே அமர வைத்து உணவளிக்கப்பட்டனர் என்றுதான் கூறுகிறார்களே தவிர தாழ்த்தப்பட்டவர்களை கோயிலுக்குள்ளே அழைத்துச் சென்றாரா என்பதைப்பற்றி எந்தக் குறிப்பும் இல்லை. அந்த ராஜபரம்பரையைச் சேர்ந்த ஆத்மநாதசாமிக்கே கூட கர்ப்பக்கிரகத்தின் கதவருகேதான் பிரசாதம் கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர அவரால் அந்த கர்ப்பக்கிரகத்துக்குள் நுழைய முடியுமா? பந்தலில் அமரவைத்து தாழ்த்தப்பட்டவர்கள் உணவளிக்கப்பட்டனர் என்ற செய்திதான் இருக்கிறதே தவிர கர்ப்பக்கிரகத்தின் அருகே வந்து பிரசாதம் பெற்றுக் கொண்டனர் என்ற விவரமும் இல்லை. அந்த ஆண்டுக்குப் பிறகும் அங்கே அந்த நடைமுறை தொடர்கிறதா? என்ற விவரமும் இல்லை.

அதேபோல இன்னொரு தகவலும் அந்த இதழில் சொல்லப்படுகிறது.

ஸர்வே பவந்து சுகினஹ

இறைவனின் எல்லாப் படைப்புக்களும் சுகமாக இருக்கட்டும் என்பது இந்த உபநிஷத ஸ்லோகத்தின் பொருளாம்.

இன்னொரு ஸ்லோகமும் அவர்கள் சொல்கிறார்கள்.

ஸர்வே ஜனாஹா சுகினோ பவந்து

எல்லா மனிதர்களும் செழிக்க வேண்டும் என்பது இதன் பொருளாம் (பக்கம்45)

இவை அனைத்தும் எத்தகைய ஏமாற்றுவேலை என்பதனை அண்ணல் அவர்களே அம்பலப்படுத்துகிறார்.

அண்ணலது பேச்சும் எழுத்தும் தொகுதி 1ல் பக்கம் 130ல் அண்ணலே இதற்கு பதிலளிக்கும் வகையில் எழுதுகிறார் பாருங்கள்.

ஞானி ஏகாத்மா என்பவரைப்பற்றி தர்மாத்மா என்றொரு திரைப்படம் வந்தது. அவர் தீண்டாதோரோடு கலந்து தொட்டுப்பழகி உணவு உண்ணும் துணிவு பெற்றிருந்த வீரராகக் காட்டப்படுகிறார். ஆனால் அவர் அப்படிச் செய்தது சாதியையும் தீண்டாமையையும் எதிர்த்து அல்ல.

நான் அறிந்தவரைக்கும் ஞானியர் எவரும் ஒருபோதும் சாதிக்கும் தீண்டாமைக்கும் எதிராக இயக்கம் நடத்தியவர்கள் அல்ல. மனிதர்களுக்கிடையே இருந்த போராட்டங்களின் மீது அவர்களின் கவனம் இருந்ததில்லை. எல்லா மனிதர்களும் சமம் என்று போதிக்கவில்லை. கடவுளின் திருமுன் அனைவரும் சமம் என்றே போதித்தார்கள். இவை இரண்டும் ஒன்றுக்கொன்று வேறுபட்டவை. ஆபத்தில்லாதவை. இவற்றைப் போதிப்பதில் யாருக்கும் கஷ்டமில்லை. நம்புவதில் ஆபத்துமில்லை.

ஞானியரின் போதனைகள் பயனற்றுப் போனதற்கு இரண்டாவது காரணம் சாதியை ஞானிகள் மீறலாம். பொதுமக்கள் மீறக்கூடாது என்று மக்களுக்கு சொல்லப்பட்டிருப்பதுதான். எனவே ஞானியர் பின்பற்றி நடப்பதற்கு முன்னுதாரணமாக இருந்ததில்லை. அவர்கள் எப்போதும் போற்றி வழிபடுவதற்குரிய புனிதர்கள். மனிதர்களோ எப்போதும் சாதியையும் தீண்டாமையையும் தீவிரமாக நம்பிக் கடைப்பிடித்து வருகிறார்கள்"

என்று எழுதி இதுபோன்றவர்களின் முகத்திரையைக் கிழிக்கிறார். இதுதான் இவர்கள் தீண்டாமையை ஒழிக்கும் இலட்சணம்.

இதுபோல அபத்தமான பித்தலாட்டமாக ஏராளமான கருத்துக்களை இந்த இதழில் அள்ளி வீசியிருக்கிறார்கள். ஒவ்வொன்றுக்கும் பதில் சொல்வது என்றால் இந்த நூல் மிக விரிவடையும்.

அது மட்டுமல்ல. அண்ணல் அம்பேத்கரைப்பற்றி மிகவும் பொய்யான விசமத்தனமான தகவல்களை அந்த பிஎம்எஸ் நியூஸ் இதழில் பதிவு செய்கிறார்கள்.

அண்ணல் அவர்கள் துவக்கிய இதழின் பெயர் மூக் நாயக் என்பதாகும். அதற்கு என்ன பொருள் என்றால் ஊமைகளின் தலைவன் என்பதுதான். ஊமைகளின் தலைவன் என்றால் கண்ணிருந்தும் குருடராய் காதிருந்தும் செவிடராய் வாயிருந்தும் ஊமையாய் பொட்டுப் பூச்சிகளாய் புன்மைத் தேரைகளாய் இருக்கும் மக்களுக்காக உழைக்கக் கூடிய தலைவன் என்பது அதன் பொருள். ஆனால் அதனை எப்படி இவர்கள் மொழிபெயர்க்கிறார்கள் தெரியுமா? அமைதியின் தலைவனாம்.

ஊமைகளின் தலைவன் என்பதற்கும் அமைதியின் தலைவன் என்பதற்கும் எவ்வளவு வேறுபாடு? அடக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட நாதியற்ற சமுதாயத்திற்கு உழைத்த தலைவன் இந்த சமுதாயத்தில் புறையோடிப் போயிருந்த தீண்டாமைக் கொடுமையை வேரோடும் வேரடி மண்ணோடும் பெயர்த்து எறியப் போராடிய ஒரு தலைவன் அமைதியின் தலைவனாம். என்னே கொடுமை!

## 21. மகாத் குளப் போராட்டம் பற்றிய ஆர்எஸ்எஸ்&சின் கண்ணோட்டம்

அதே போல இன்னொரு மகாக் கொடுமையை எதிர்த்து அவர் போராடியது மகாத் குளப் போராட்டம். அதைப்பற்றி ஒரு வரிகூட விளக்காமல் மிகவும் மென்மையாக தலித் விடுதலைக்காக நடைபெற்ற ஒரு சத்தியாக்கிரகம் என்ற வரிகளுக்குள் அதை முடக்கப்பார்க்கிறது.

மகாத் நகராட்சி அங்கு உள்ள சவுதார் குளத்தில் தீண்டத்தகாதவர்களும் பயன்படுத்தலாம் என்று 1924லேயே தீர்மானம் இயற்றியும் அங்குள்ள உயர் ஜாதியினர் அம்மக்களை அக்குளத்தைப் பயன்படுத்த விடாமல் செய்து வந்தனர்.

அதனை எதிர்த்து அண்ணல் அவர்கள் அந்த ஊரில் மிகப் பெரிய மாநாடு கூட்டி அம்மக்களுடன் சென்று குளத்தின் கரையில் அமர்ந்து கைகளால் அத்தண்ணீரை எடுத்துப் பருகினார். அவ்வளவுதான். அங்குள்ள உயர் ஜாதியினர் மாநாட்டுக்கு வந்திருந்த மக்களை அவர்கள் கோயிலுக்குள்ளும் நுழையப் போகிறார்கள் என்ற பொய்யான செய்தியை வதந்தியாகப் பரப்பி ஜாதிவெறியை உண்டாக்கி கடுமையாகத் தாக்கினார்கள். அண்ணல் அவர்கள் மிகவும் சாதுர்யமாக அப்பிரச்சினையைக் கையாண்டு தாழ்த்தப்பட்ட மக்களைக் காப்பாற்றினார். அப்படியும் பார்ப்பனர்களும் உயர் ஜாதியினரும் ஒன்று கூடி அந்தக் குளம் தீட்டாகிவிட்டது என்று கூறி 108 குடத்தில் பசுவின் சாணம் மூத்திரம் பால் தயிர் நெய் ஆகிய பொருள்களைக் கொண்ட பஞ்சகவ்யத்தை நிரப்பி மந்திரங்கள் சொல்லி அந்தக் குளத்திற்கு தீட்டுப் போக்கினார்கள்.

அதன் பிறகு உயர் ஜாதியினருக்குப் பயந்த நகராட்சி நிர்வாகம் ஏற்கெனவே போட்ட தீர்மானத்தை ரத்து செய்தது. இதனை எதிர்த்து நீதிமன்றம் சென்று வாதாடி பல ஆண்டுகளுக்குப் பின்னர்தான் அண்ணல் அவர்கள் அந்தக் குளத்தில் நீரெடுக்கும் உரிமையை நிலைநாட்டினார் என்பது அவருடைய வரலாறு.

இவ்வளவு பெரிய பின்னணியை வெறும் சத்தியாக்கிரகம் என்ற

சொல்லால் அதனை இருட்டடிப்பு செய்கிறது காவிக்கும்பல்.

காந்தியும் காங்கிரசும் தீண்டத்தகாத மக்களுக்குச் செய்தது என்ன? என்ற நூலில் இருந்து பிளம்ஸ் நியூஸில் அவர்கள் நிறைய உதாரணம் காண்பித்திருக்கிறார்கள். அதே நூலில் அம்பேத்கர் அவர்கள் 1917ல் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் கொண்டுவரப்பட்ட தீண்டாமை ஒழிப்பு சம்மந்தமான தீர்மானம் ஒரு விநோதமான நிகழ்ச்சி என்கிறார். ஏன் தெரியுமோ?

காங்கிரஸ் ஆரம்பித்தது 1885ல். ஆனால் அவர்கள் தீண்டாமை ஒரு பாவச்செயல் என்று தீர்மானம் போட்டது 1917ல். இந்த 32 வருஷம் கழித்து இந்தத் தீர்மானம் போட வேண்டிய அவசியம் என்ன? இவ்வளவு காலம் இவர்கள் என்ன செய்துகொண்டிருந்தார்கள்? இவ்வளவு நாள் கழித்து இந்தத் தீர்மானம் போட்டதைத்தான் விநோதமான நிகழ்ச்சி என்கிறார் அம்பேத்கர்.

ஏனென்றால் நம்ம திலகர் பெருமான் காங்கிரசில் ஆதிக்கத்திற்கு வருவதற்கு முன்பு 1895 வரை காங்கிரஸ் மாநாடுகளில் சமூகசீர்திருத்த மாநாடு நடக்கும். நம்ம திலகர் ஆதிக்கத்திற்கு வந்தபிறகு அந்த சீர்திருத்த மாநாடு நடத்தவே கூடாது என்று தடை போட்டுவிட்டார். அப்படி மீறி நடந்தால் மாநாட்டுப் பந்தலையே கொளுத்தி விடுவோம் என்று மிரட்டினார். அது மாத்திரமல்லாமல் தீண்டத்தகாதவர்கள் காங்கிரஸ் மாநாட்டுப் பந்தலுக்குள்ளேயே அனுமதிக்கப்படவில்லை. அப்படி அனுமதிக்காததால் தீண்டத்தகாதவர்கள் மாநாட்டுப் பந்தலுக்கு வெளியே நின்று ஆர்ப்பாட்டம் நடத்தியதோடு காங்கிரஸ் கொடும்பாவியையும் கொளுத்தினார்களாம்.

அந்த திலகரின் மிரட்டல் காரணமாகத்தான் 1885ல் துவக்கப்பட்ட காங்கிரசில் 32 ஆண்டுகாலம் தீண்டாமையை ஒழிக்க ஒரு தீர்மானம் கூட நிறைவேற்றப்படவில்லை என்கிறார் அம்பேத்கர். அவ்வாறு 32 ஆண்டுகள் கழித்து நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில் திலகர் பெருமான் கையெழுத்திட மறுத்துவிட்டார் என்பதும் கூடுதலான செய்தி. தீண்டாமை ஒழிப்பை ஒரு தீர்மானமாகக் கூட ஏற்றுக் கொள்ள மறுத்தவர்தான் திலகர்பெருமான்.

அந்தத் திலகர் பெருமான் பிறந்த நாளில் சங்கம் ஆரம்பித்த பிஎம்எஸ் அவர் எப்படித் தீண்டாமையை ஒழித்தார் என்பதைச் சொல்லாமல் ராமகிருஷ்ண பரமஹம்சரைச் சொல்வது ஏன்? அப்படி ஏதாவது அவர் செய்திருந்தால்தானே சொல்ல முடியும்?

இந்த திலகர் எப்படிப்பட்ட ஜாதி வெறியர் தெரியுமா? அவர் மகாராட்டிரக்காரர். அவர் வங்காளத்துக்குப் போகிறபோது ஒரு சமையல்காரரை கூடவே கூட்டிக்கொண்டு போவாராம். ஏன் தெரியுமா? வங்காளத்து பிராமணர் சமைத்ததைக் கூடச் சாப்பிடமாட்டார். அவரது ஊர் சித்பவன் பிராமணர் சமைத்ததைத்தான் அவர் சாப்பிடுவார். அத்தனை சீர்திருத்தக்காரர். அவர் எப்படியெல்லாம் தீண்டத்தகாத மக்களுக்கு பாடுபட்டார் என்பதை அம்பேத்கர் நிறைய சொல்லியிருக்கிறார். திலகர் மட்டுமல்ல சங்பரிவாரால் உயர்த்திப்பிடிக்கப்படும் வல்லபாய் பட்டேல் அவர்களும் தீண்டத்தகாத மக்களுக்கு எதிராக எப்படிச் செயல்பட்டார் என்பதையும் அதே நூலில் அம்பேத்கர் அம்பலப்படுத்துகிறார்.

அண்ணல் அவர்கள் வெளிநாடு சென்று கல்வி கற்று திரும்பி வந்த பிறகு பரோடா சமஸ்தானத்தில் ராணுவச் செயலாளராகப் பணியாற்றச் சென்றார் 1917 செப்டம்பர் மத்தியில் சென்ற அவர் அங்கு தீண்டாமை காரணமாக பல்வேறு அவமானங்களைச் சந்தித்தார். தங்குவதற்கு இடம் கூடக் கிடைக்கவில்லை. வாழ்க்கையில் எத்தனையோ இன்னல்களையும் அவமானங்களையும் சந்தித்த அண்ணல் அவர்கள் இந்த நிகழ்வின்போதுதான் கண்ணீர் விட்டுக் கலங்கியுள்ளார். அந்த அளவிற்கு அங்கு தீண்டாமை தாண்டவமாடியது

மன்னரிடம் அதனை எடுத்துச் சொல்லியும் எந்தப் பலனும் இல்லை அவர் திவானைப் பார்க்கச் சொன்னார். திவானும் இந்த ஜாதி விஷயத்தில் எதுவும் செய்ய இயலாது எனக் கைவிரித்துவிட்டார்.

அதனால் கலங்கிய மனத்துடன் பரோடாவை விட்டு வெளியேறினார். இது நடந்தது நவம்பர் 1917ல்.

ஆதாரம் தனஞ்செய்கீர் எழுதிய அண்ணல் அம்பேத்கர் வாழ்க்கை வரலாறு தமிழ் மொழிபெயர்ப்பு க.முகிலன் பக்கம் 45 46

இரண்டு மாதம்கூட அங்கு பணியாற்றாமல் வெளியேறிய அம்பேத்கரை பதினெட்டு மாதங்கள் பரோடா சமஸ்தானத்தில் பணியாற்றினார் என்று துணிச்சலாகப் பொய் சொல்கிறார்கள் ஆர்எஸ்எஸ் காரர்கள். (பக்கம் 46 வ.மு.முரளியின் கட்டுரை)

இதுபோலப் பல பொய்கள் அந்த இதழில் மலிந்து கிடக்கின்றன.

இவையெல்லாம் எதற்காக?

அம்பேத்கர் வரலாற்றையும் தெரியாமல் அவரது கொள்கைகளையும் புரிந்துகொள்ளாமல்

தனது சமூகத்தின் வரலாற்றையும் தெரிந்துகொள்ளாமல் அப்பாவியாய்க் கிடக்கும் தலித் மக்களைக் கவர்ந்து ஓட்டுக்களைப் பெற்று காலாகாலத்திற்கும் அவர்களை கீழ்ஜாதியாகவே வைத்திருக்கும் தந்திரம் தவிர வேறு எதுவும் இல்லை

எனவே இத்தகைய பொய்காரக் கும்பலிடமிருந்து அண்ணலையும் காக்க வேண்டும். அவர்களின் சூழ்ச்சிக்குப் பலியாகாமல் தாழ்த்தப்பட்ட மக்களையும் காக்க வேண்டியது மிக மிக அவசியமாகிறது

மதன் மோகன் மாளவியாவும் பிஎம்எஸ்ஸும்

அண்ணல் அம்பேத்கர் அவர்கள் வட்டமேசை மாநாட்டில் வெள்ளையருடன் வாதாடிப் பெற்ற தனித்தொகுதி முறையை எதிர்த்து காந்தி பிரிட்டனுக்கே சென்று வாதிட்டார். அதை மறுத்து பிரிட்டிஷ் அரசாங்கம் அம்பேத்கரின் கோரிக்கையை ஏற்றுக்கொள்கிறது. அந்த தனித்தொகுதி முறையை எதிர்த்து காந்தி எரவாடா சிறையில் சாகும்வரை உண்ணாவிரதம் இருந்தார். பல்வேறு நெருக்கடிகள் மிரட்டல்கள் இவற்றுக்கிடையே அம்பேத்கர் சிலவற்றை விட்டுக்கொடுத்து பூனா ஒப்பந்தம். ஏற்படுகிறது.

இதில் தீண்டத்தகாதவர் சார்பில் அம்பேத்கர்

கையொப்பமிடுகிறார். இந்துக்கள் சார்பாக மதன்மோகன் மாளவியா கையொப்பமிடுகிறார் என்பது அம்பேத்கர் வாழ்க்கை வரலாற்றில் தெளிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. (அம்பேத்கர் வரலாறு பக்கம் 310)

ஆனால் இந்த பிஎம்எஸ் சங்கம் வெளியிட்டுள்ள அம்பேத்கர் ஜெயந்தி சிறப்பிதழில் மதன் மோகன் மாளவியா பிறர் சார்பாகக் கையொப்பமிட்டார் என்று கூறப்பட்டுள்ளது. (பிஎம்எஸ் நியூஸ் பக்கம் 10) ஏன் இந்தப் பித்தலாட்டம்? மதன் மோகன் மாளவியா இந்துக்கள் சார்பாகக் கையொப்பமிட்டார் என்று உண்மையைத் தெரிவித்து விட்டால் அவர் அம்பேத்கருக்கு எதிரானவர் என்பது உறுதி செய்யப்பட்டு விடும்.

அந்தக் கொண்டையை மறைக்கத்தான் மதன் மோகன் மாளவியாவை இந்துக்களின் பிரதிநிதி என்பதை மறைக்கிறது பாரதீய மஸ்தூர் சங்கம். ஏன் மறைக்கிறது? அந்த மதன்மோகன் மாளவியாவுக்குத்தான் மோடி அரசு வந்ததும் வராததுமாக பாரதரத்னா விருது வழங்கி கவுரவித்தது. ஏன் அவ்வாறு கவுரவித்தது? அந்த மதன் மோகன் மாளவியா தோற்றுவித்ததுதான் இந்து மகாசபை. அந்த இந்து மகாசபையைச் சேர்ந்த கோட்ஷேதான் காந்தியைச் சுட்டுக்கொன்றவன். அந்த கோட்ஷேவுக்கு பாரத ரத்னா விருது தருவதற்குப் பதிலாகத்தான் இந்த மாளவியாவுக்கு விருது கொடுக்கப்பட்டது.

அண்ணல் அம்பேத்கர் அவர்கள் முதல் வட்டமேசை மாநாட்டில் வாதாடிப் பெற்ற தனித்தொகுதி முறையை எதிர்ப்பதற்காக காந்தி இரண்டாவது வட்ட மேசை மாநாட்டிற்கு பிரிட்டன் சென்றபோது அவருடன் துணையாகச் சென்றவர்தான் மதன் மோகன் மாளவியா. அங்கு அம்பேத்கருக்கு எதிரான நிலைப்பாட்டையே மாளவியாவும் எடுக்கிறார்.

அவர் மாத்திரம் அல்ல. ஆர்எஸ்எஸ் சைச் சேர்ந்த டாக்டர் மூஞ்சே அவர்களும் அம்பேத்கருடைய அந்தத் தனித்தொகுதி முறையை சூழ்ச்சியாக ஒரு தலித் தலைவரை வைத்தே எதிர்க்கிறார். அத்துடன் சட்டமன்ற நாடாளுமன்றங்களுக்கு எண்ணெய்க் கடைக்காரனும் பீடாக்கடைக்காரனும் வண்ணானும் தோட்டியும் எதற்காகச்

செல்லவேண்டும்? என்று கேள்வி எழுப்பியவர்தான் பிஎம்எஸ்ஸின் குருநாதரான பாலகங்காதர திலகர்.

அதோடு உலகத்திலேயே மிக உயரமாக சிலை வைக்கிறார்களே வல்லபாய் பட்டேல் அவரும் அம்பேத்கருடைய இந்தக் கோரிக்கைக்கு எதிரானவர்தான். அத்துடன் இவர்களால் போற்றிப் பாராட்டப்படும் துறவி விவேகாநந்தர்கூட ஒரு செருப்புத் தைப்பவன் நாடாள ஆசைப்படக் கூடாது என்று சொன்னவர்தான்.

இப்படிக் காலம் பூராவும் இவர்களது தலைவர்கள் அம்பேத்கரின் கொள்கைகளுக்கு எதிராக இருந்ததை மறைக்கத்தான் நாங்களும் அம்பேத்கரைப் பாராட்டுகிறோம் என்று ஏமாற்றப் பார்க்கிறது. அதனால்தான் மதன்மோகன் மாளவியாவின் உண்மையான முகத்தை மறைத்து அவரை ஏதோ அம்பேத்கருக்கு ஆதரவானவர்போலச் சித்தரிக்கிறது.

## 22. கோயில் நுழைவு குறித்த பிஎம்எஸ்&சின் சரடும் அண்ணலின் கருத்தும்

பிஎம்எஸ் வெளியிட்ட அம்பேத்கர் சிறப்பிதழில் மதுரை வைத்தியநாதய்யர் அவர்களைப்பற்றி மிகப் பிரமாதமாக அவர்தான் தீண்டாமையை ஒழித்தார். கோயில் நுழைவுப் போராட்டம் நடத்தினார் என்று புளகாங்கிதம் அடைகிறார்கள். அந்த இதழில் "திருவாங்கூர் சமஸ்தானத்து மகராஜா தமது சமஸ்தானத்தில் தீண்டாமையை ஒழிக்க விரும்பினார். தமது சமஸ்தானங்களுக்கு உட்பட்ட கோயில்களில் அனைத்துக் கோயில்களும் ஹரிஜனங்களுக்காகத் திறந்துவிடப்படுகின்றன என்று ஆணை வெளியிட்டார். அங்கு தீண்டாமை ஒழிக்கப்பட்டது. இச்செய்தி வைத்தியநாத அய்யருக்கு தேனாய் இனித்தது. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் ஹரிஜனங்களை அழைத்துக்கொண்டு ஆலயப்பிரவேசம் நடத்தி தீண்டாமையை ஒழித்தார்" என்று தெரிவித்துள்ளார்கள்.

மதுரை வைத்தியநாதய்யர் இவர்களது இந்துமகாசபையும் கிடையாது. ஆர்எஸ்எஸ்சும் கிடையாது. அய்யர்கள் எவ்வளவு நல்லவர்கள் என்று காட்டுவதற்காக இவரை உயர்த்திப் பிடிக்கிறார்கள் என்றுதான் கருதவேண்டி உள்ளது. அந்தக் கோயில் நுழைவு யோக்கியதையை அம்பேத்கரே அம்பலப்படுத்தியிருக்கிறார். அதனை இங்கு பார்ப்போம்.

அம்பேத்கர் கூறும்போது திருவாங்கூர் சமஸ்தானத்தில் வெளிவந்த அந்த அரசாணையின் பின்னணியில் இருந்தது அன்றைய திவானாக இருந்த சர் சி.பி. இராமசாமி அய்யர்தான் என்றும், கேரளாவில் ஈழவ சமுதாய மக்கள் கோயில் நுழைவுக்காகக் கிளர்ச்சி நடத்தியபோது, அதற்கு எதிரான கருத்து கொண்டிருந்தவர் இராமசாமி அய்யர் என்பதையும் அந்தப் போராட்டம் வெற்றி பெறாததால் ஈழவ சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் இந்து மதத்தைத் துறந்து வேறு ஏதேனும் மதத்தில் சேரலாமா என்று முடிவெடுத்ததாகவும், அவர்கள் அவ்வாறு வெளியேறினால் அது இந்துமதத்திற்கு சாவுமணி அடித்ததாக ஆகிவிடும் என்ற அச்சத்தினாலேயே இராமசாமி அய்யர் மன்னர் பெயரில் இந்த கோயில் நுழைவுப் பிரகடனத்தைச் செய்தார் என்றும் அம்பேத்கர் அவர்கள் அம்பலப்படுத்துகிறார். (ஆதாரம்: காந்தியும்

காங்கிரசும் தீண்டத்தகாத மக்களுக்குச் செய்தது என்ன? பக் 385.)

இந்த இராமசாமி அய்யரைப் போலவே இவர்கள் உயர்வாகப் போற்றும் வைத்தியநாத அய்யரும் காங்கிரஸ் பொதுக்குழுவில் நாடார்களின் கோயில் நுழைவை ஆதரித்துத் தீர்மானம் வந்தபோது அதனை எதிர்த்தவர் என்பதற்கும் நிறைய ஆதாரங்கள் உள்ளன.

அதேபோல இவர்கள் தலையில் தூக்கிவைத்து ஆடும் மதன் மோகன் மாளவியா அவர்களும் மத்திய மாகாணத்தில் ரங்கா அய்யர் என்பவர் கொண்டுவந்த கோயில் நுழைவு மசோதாவை மதவிசயத்தில் அரசாங்கம் தலையிடக்கூடாது என்று கூறி எதிர்த்தார் என்பதும் அம்பேத்கர் வாழ்க்கை வரலாற்று நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது. (அம்பேத்கர் வரலாறு பக்கம் 336)

இந்த அடிமை ஜாதிகள் வெளியேறினால் அவர்கள் செய்த அடிமை வேலையைச் செய்வதற்கு ஆள் இல்லாமல் போய்விடுமே என்பதற்காக அவர்களை தீண்டத்தகாதவர்களாகவே தக்க வைப்பதற்காகத்தான் இந்த கோயில் நுழைவு நாடகமே தவிர உண்மையிலேயே அவர்கள் மீதுள்ள தீண்டாமைக் கொடுமைக்கான பரிகாரமல்ல என்பதை அம்பேத்கர் அம்பலப்படுத்துகிறார்.

இப்படி கசாப்புக் கடைக்காரர்களையெல்லாம் காருண்ய மூர்த்தியாகக் காட்டி தாழ்த்தப்பட்ட மக்களை ஏமாற்றுகின்ற வேலையை ஆர்எஸ்எஸ் கும்பல் செய்வது எதற்காக? அவர்களை ஏமாற்றி அனுபவிக்க இருக்கும் பதவிக்காக. இப்படிப்பட்ட மானங்கெட்ட பிழைப்பு அவசியம்தானா?

அண்ணல் அவர்களின் இறுதி இலட்சியமே கோயில் நுழைவுபோலவும் அந்தக் கோயில் நுழைவு உரிமை கிடைத்த உடன் தீண்டத்தகாத மக்களின் வாழ்வில் தேனாறும் பாலாறும் ஓடும் என்று எதிர் பார்த்ததுபோலவும் ஒரு தோற்றத்தை காவிக் கும்பல் ஏற்படுத்த முயற்சிக்கிறது.

அம்பேத்கர் அவர்கள் 1927ல் அமராவதி கோயில்

நுழைவுப்போராட்டத்துக்கும் 1929ல் பார்வதி கோயில் நுழைவுப் போராட்டத்துக்கும் 1930ல் நாசிக் காலாராம் கோயில் நுழைவுப் போராட்டத்துக்கும் ஆதரவு கொடுத்தார். அதற்குக் காரணம் தீண்டத்தகாத மக்கள் கோயில் நுழைவு உரிமையைப் பெற்றுவிட்டால் அவர்களுக்கு மோட்சத்தில் முன்வரிசையில் இடம் கிடைக்கும் என்பதற்காக அல்ல. "நாங்கள் எதை மிகவும் வலியுறுத்துகிறோம் எனில் கடவுளை வணங்குவதால் எந்த அளவிற்கு நீங்கள் மனநிறைவு அடைகிறீர்கள் என்பது அல்ல எங்கள் கவலை. தீண்டப்படாதவன் கோயிலில் நுழைந்தால் கோயில் தீட்டுப்பட்டுப் போகும் என்பதோ கடவுள் சிலையின் புனிதம் பாழ்பட்டுப் போகும் என்பதோ இருக்கக் கூடாது என்பதுதான்" அதனால்தான் கோயில் நுழைவுப் போராட்டம் நடத்துகிறோம் என்றார். (அண்ணல் வாழ்க்கை வரலாறு; பக். 133)

அதன்பிறகு எவ்வளவோ போராடியும் சாதிவெறிபிடித்த இந்துக்கள் தீண்டத்தகாதவர்களை கோயிலில் நுழைய அனுமதிக்காததாலும் இனி கோயிலில் நுழைவதால் தீண்டத்தகாத மக்களுக்கு எந்தப் பலனும் ஏற்படப்போவதில்லை என்பதாலும் கோயில் நுழைவுப் போராட்டமே தேவையில்லை என்கிற முடிவுக்கு வந்தார்.

கோவில் நுழைவு என்பது எங்களின் இறுதி இலட்சியமன்று. இறுதிக் குறிக்கோளை நோக்கி வைக்கும் ஓர் அடிதான் என்று கூறிய அம்பேத்கர் கடவுளை வணங்குவதைவிட வாழ்க்கைக்கு ஆதாரமானவற்றைத் தேடுவதுதான் சிறந்தது என்று தீண்டப்படாத மக்களின் சிந்தனையில் பதியுமாறு எடுத்துரைத்தார்.

இந்துமதம் சமூகச் சமத்துவம் கொண்ட மதமாக மாற வேண்டுமானால் அதன் கோட்பாடுகளில் கோயில்; நுழைவை மட்டும் சேர்த்தால் போதாது. அதனுடைய நான்கு வருணக் கொள்கையை விட்டொழிக்க வேண்டும் என்பதே குறிக்கோளாக இருக்க வேண்டும். இந்த நால்வருணம்தான்; எல்லாவித சமத்துவமின்மைக்கும் மூலகாரணமாகும். மற்ற சமத்துவமின்மைகளான சாதிமுறை தீண்டாமை ஆகியவற்றிற்கு தாய் போன்றது இந்த நால்வருணமே. இதை ஒழிக்காதவரையில் கோயில் நுழைவு என்பது தீமையுடன் சமரசம் செய்துகொண்டு மனித மாண்பினை இழப்பதற்குச் சமம் என்றார்.

இந்த நால் வருணத்தை காந்தியார் ஆதரித்ததால்தான் அண்ணல்

அவர்களால் அவருடன் ஒத்துப்போக முடியவில்லை. இந்து மதத்தில் பிறந்த காரணத்தால் மட்டுமே நான் ஓர் இந்துவாக இருக்கவில்லை. அதை நான் விரும்பித் தேர்ந்தெடுத்து நம்புகிறவன் என்பதால் நான் ஓர் இந்து. என் கருதுகோளின்படி இந்து மதத்தில் உயர்வு தாழ்வு கிடையாது. வருணாசிரமத்தையே எதிர்த்துப் போராட வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் விரும்புகின்றபோது நான் அவருடைய அணியில் இருக்க முடியாது. ஏனெனில் இந்த மதத்தின் பிரிக்க முடியாத கூறு வருணாசிரமம் என்று நம்புபவன் நான்" என்று காந்தியார் சொன்னார்.

இத்தகைய காரணங்களால் "நாய் உட்பட அனைத்து விலங்குகளும் அனுமதிக்கப்படுவார்கள். ஆனால் தீண்டப்படாதவர்கள் மட்டும் அனுமதிக்கப்பட மாட்டார்கள்" என்று எழுதி வைக்கப்பட்டுள்ள கோயில்களில் நுழைந்திட எங்களை அனுமதியுங்கள் என்று நாங்கள் கெஞ்சிக் கேட்க மாட்டோம். தீண்டப்படாதவர்களுக்காகக் கோயிலைத் திறந்துவிடுவதா வேண்டாமா? என்பது குறித்து முடிவு செய்வது உங்கள் பொறுப்பாகும். ஆனால் அதற்காக நாங்கள் போராட மாட்டோம். மனிதனின் சுயமரியாதையை மதியாமை என்பது இழிந்த இயல்பு என்று நீங்கள் நினைத்தால் கோயில்களைத் திறந்து விடுங்கள். சிறந்த மனிதர்களாக வாழுங்கள். ஒரு சிறந்த மனிதனாக இருப்பதைவிட ஒரு இந்துவாகவே இருக்க நினைத்தால் கோயிலின் கதவுகளை மூடிவிடுங்கள். இப்படியே கெட்டழிந்து போங்கள் அதைப்பற்றி நான் கவலைப்பட மாட்டேன். இதுவே நான் சாதி இந்துக்களுக்கு கூற விரும்பும் செய்தியாகும்" என்று அண்ணல் அவர்கள் கூறுகிறார்.

அதே நேரத்தில் கோயில் நுழைவு அளிக்கிற கிளர்ச்சியிலும் மகிழ்ச்சியிலும் கடவுளைப்பற்றிய சிந்தனையிலும் தீண்டப்படாத மக்கள் மூழ்கி விடுவார்களோ என்று அஞ்சப்பட்டது. அதனால் அரசியல் பொருளாதார சமத்துவத்தைப் பெறுவது என்ற குறிக்கோளிலிருந்து அவர்கள் திசை திருப்பப்பட்டு விடுவார்களோ என்றும் பயந்தார்.

அதனால் பன்னெடுங் காலமாக அவருடைய மக்களை ஆண்மையற்றவர்களாகவும் செயலற்றவர்களாகவும் ஆக்கி வைத்திருக்கிற ஆன்மிகப் போலிக் கருத்துக்களுக்கும் மூடநம்பிக்கைகளுக்கும் எதிராகப் பிரச்சாரம் செய்யத் தொடங்கினார். கடவுளை வணங்குவதைவிட வாழ்க்கைக்கு ஆதாரமானவற்றைத்

தேடுவதுதான் சிறந்தது என்று தீண்டப்படாத மக்களின் சிந்தனையில் பதியுமாறு எடுத்துரைத்தார்.

நீங்கள் எதை இழந்தீர்களோ அதை மற்றவர்கள் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். நீங்கள் தாங்கிக் கொண்டிருக்கும் இழிவுகளின் மீதுதான் மற்றவர்களின் பெருமை நிலை கொண்டிருக்கிறது. வருவாய்க்கு வழியின்றி பசியிலும் கொல்லும் வறுமையிலும் இழிவுகளிலும் நீங்கள் துன்புறுவது உங்களுடைய முற்பிறவியில் செய்த பாவங்களின் விளைவாக விதிக்கப்பட்ட தண்டனைகள் அல்ல. உங்களுக்கு மேலே இருப்பவர்களின் துரோகமும் கொடுமைகளுமே இவற்றுக்குக ;காரணங்களாகும். எனவே விதியை நம்பாதீர்கள். உங்களுடைய வலிமையில் நம்பிக்கை வையுங்கள் என்று மக்களுக்கு எடுத்துரைத்தார்.

அத்துடன் உங்களைக் காப்பாற்றுவதற்காக கடவுள் இங்கு வந்து அவதரிப்பார் என்று காத்துக் கொண்டிருக்காதீர்கள்.

உங்கள் அடிமைத்தளையை நீங்கள்தான் அறுத்தெறிய வேண்டும். அடிமைத்தளையை அகற்றிட கடவுளையோ அல்லது தெய்வாம்சம் பொருந்திய மனிதரையோ எதிர்நோக்கி இருக்காதீர்கள். உங்கள் விடுதலை என்பது அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுவதில்தான் இருக்கிறது. புண்ணியத் தலங்களுக்குப் போவதிலோ விரதங்கள் இருப்பதிலோ அது இல்லை. சாஸ்திரங்களில் நீங்கள் வைத்துள்ள பக்தி உங்கள் அடிமைத் தளையிலிருந்தும் இயலாமைகளிலிருந்தும் வறுமையிலிருந்தும் விடுவிக்காது. உங்களுடைய முன்னோர்கள் பல தலைமுறைகளாக இத்தகைய பக்தி வழியில் வாழ்ந்து விட்டார்கள். ஆனால் அவர்களுடைய துன்பங்கள் மாயவில்லை. நைந்து நலிந்துபோன உங்கள் வாழ்வில் எவ்வகையிலும் எள்ளளவும் இன்றுவரை மாற்றம் ஏற்படவில்லை. உங்கள் முன்னோர்களைப் போலவே நீங்களும் கந்தலையே உடுத்திக் கொண்டிருக்கிறீர்கள்.

அவர்களைப் போலவே நீங்களும் வீசி எறியப்படும் மீந்த உணவில் உயிர் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள். அவர்களைப் போலவே நீங்களும் நோய்களுக்கு இரையாகி கோழிக்குஞ்சுகளைப்போல் செத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய மத விரதங்களும், கடுமையான

சடங்கு ஆச்சாரங்களும் தவ ஒழுக்கங்களும் உங்களைப் பட்டினியிலிருந்து மீட்கவில்லை.

உங்களுடைய கவனத்தை நோன்பு வழிபாடு தவம் போன்றவற்றிலிருந்து முற்றிலும் திருப்பிச் சட்டத்தை உருவாக்கும் அதிகாரத்தைக் கைப்பற்றும் முயற்சியில் செலுத்த வேண்டியது உங்கள் கடமையாகும். அதில்தான் உங்கள் விடுதலை அடங்கியுள்ளது.

நீங்கள் எப்பொழுதும் விழிப்புடனும் வலிமையுடனும் சிறந்த கல்வியைப் பெற்றவர்களாகவும் சுயமரியாதை உடையவர்களாகவும் இருந்தால்தான் வெற்றியை ஈட்டி நிலைநாட்ட முடியும் என்று அண்ணல் அவர்கள் தன்னுடைய மக்களுக்கு அறிவுரை வழங்கினார். (ஆதாரம்: அண்ணல் அம்பேத்கர் வாழ்க்கை வரலாறு)

இந்த இந்துத்துவாக் கும்பல் போற்றிப் பாராட்டுகின்ற வைத்தியநாத அய்யரும் மற்றவர்களும் இந்த நால் வருணக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டவர்கள்தான்.

காந்தி ராஜாஜி போன்றவர்களும் கோயில் நுழைவை எதிர்த்தவர்கள்தான். ஒரு காலத்தில் கோயில் நுழைவை எதிர்த்தவர்கள் திடீரென கோயில் நுழைவை ஆதரிக்கிறார்கள் என்றால் அது ஏதோ தாழ்த்தப்பட்ட மக்கள்மீது உள்ள அக்கறையாலோ அவர்களுக்கு கடவுளின் கருணையைப் பெற்றுத் தந்து அவர்களை உயர்ஜாதி மக்களுக்கு இணையாக ஆக்கி விடுவதோ அல்ல மாறாக அவர்கள் தங்கள் விடுதலையை நோக்கி மாற்று மதத்திற்குச் செல்லுகின்றபொழுது அதனைத் தடுத்து நிறுத்தி அவர்களை என்றென்றும் தாழ்த்தப்பட்டவர்களாகவே வைத்திருக்க வேண்டும் என்கின்ற நயவஞ்சகம் தவிர வேறு எதுவும் இல்லை.

அதே நயவஞ்சகப் போக்கிலும் நோக்கிலும்தான் ஆர்எஸ்எஸ் சங் பரிவாரின் முன்னணி இயக்கமான பிஎம்எஸ் இந்தக் கோயில் நுழைவை ஏதோ ஒரு பிரமாதமான வெற்றி போலவும் கோயிலில் நுழைந்துவிட்டால் தாழ்த்தப்பட்ட மக்களின் அனைத்துக் கொடுமைகளும் தீர்ந்துபோகும் என்று புருடா விடுவதும் மக்களை ஏமாற்றுவது அல்லாமல் வேறு எதுவும் இல்லை என்பது தெளிவு.

வைத்தியநாத அய்யர் யாரை அழைத்துச் சென்றார்? ஒரு பறையரை அழைத்துச்சென்றார். இப்படி அய்யராகவும் பறையராகவும் பிராமணனாகவும் சூத்திரனாகவும் இருந்துகொண்டு கோயிலுக்குள் நுழைவதால் என்ன சமத்துவம் வந்துவிடும்? எல்லோரும் சரிசமமான மனிதர்களாக வரவேண்டும் என்பதுதான் அம்பேத்கரின் இலட்சியமே தவிர ஒரு அய்யர் ஒரு பறையரை அழைத்துச்செல்வதால் எந்தவித சமத்துவமும் ஏற்படப் போவதில்லை. மீண்டும் அந்த ஏற்றத்தாழ்வும் இழிநிலையும் தொடரத்தான் செய்யும் என்பதால்தான் அம்பேத்கர் கோயில் நுழைவை மட்டும் ஆதரிக்கவில்லை. கோயிலுக்குள் நுழைந்த மக்கள் கருவறைக்குள்ளும் சென்று அர்ச்சகராக வரவேண்டும். அந்த மீனாட்சி அம்மன் கோயிலில் ஒரு தாழ்த்தப்பட்டவர் அர்ச்சகராகி அவரிடத்திலே வைத்தியநாதர் என்ற பார்ப்பனர் பிரசாதம் பெற்றார் என்ற நிலை வரவேண்டும். அதுதான் அண்ணலின் கனவு. அந்த நிலை வர பிஎம்எஸ்சும் ஆர்எஸ்எஸ்சும் பாடுபடுமா?

## 23. கல்வி நிலை பற்றி பிளம்ளஸ் நியூஸின் இருட்டடிப்புக்கள்

அந்த பிளம்ளஸ் நியூஸ் இதழில் கல்வி பற்றியும்; அண்ணல் பெற்ற கல்வியின் சிறப்பையும் கல்விக்கு அம்பேத்கர் நல்கிய பங்களிப்பு குறித்தும்; அனைவருக்கும் கல்வி கற்பிக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் கல்வியின் வாயிலாகவே விடுதலை பெற முடியும் என்று அண்ணல் சொன்னதையெல்லாம் சொல்லிவிட்டு எழுதுகின்ற பிளம்ளஸ் அந்தக் கல்வி நம் நாட்டில் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு எப்படி மறுக்கப்பட்டது என்பதையும் மறுக்கப்பட்ட கல்வி எப்படி அவர்களுக்கு கிடைத்தது என்கின்ற வரலாறுகளையும் அப்படியே இருட்டடிப்பு செய்துள்ளது.

அண்ணல் அவர்கள் கல்வி மறுக்கப்பட்ட வரலாறுகளை மிகவும் தெளிவாக விவரிக்கிறார்.

சூத்திரனுக்கு எதைக் கொடுத்தாலும் கல்வியைக் கொடுக்காதே என்கின்ற மனுநீதியை எடுத்துச் சொல்லும் அண்ணல் அவர்கள் பிராமணன் ஒருபோதும் சூத்திரன் முன் வேதத்தைப் படிக்கக் கூடாது என்கின்ற அத்தியாயம் (மனு) 4 சுலோகம் 99 எடுத்துச் சொல்லும் அவர் மனுவுக்குப் பின் வந்தவர்கள் வேதத்தைக் கற்கும் சூத்திரனுக்கு விதிக்கப்படும் தண்டனையை மேலும் கொடுமையாக்கினார்கள்.

உதாரணமாக காத்யாயனர் இவ்வாறு கூறுகிறார்: சூத்திரன் வேதத்தைக் கேட்டால் அல்லது வேதத்தின் ஒரு சொல்லைக் கூட உச்சரித்தால் மன்னன் அவனுடைய நாக்கை இரண்டாகப் பிளக்க வேண்டும். அவன் காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும் என்று தண்டனை விதிக்க வேண்டும் என்பதை அம்பேத்கர் நூல் தொகுப்பு 9 பக்கம் 172ல் குறிப்பிடுகிறார்.

இதன் காரணமாகத்தான் சூத்திரர்கள் நீண்டகாலம் கல்வி அறிவற்றவர்களாக கல்வி மறுக்கப்பட்டவர்களாக இருந்தார்கள் என்பதை விளக்குகிறார்.

இந்தியாவில் பவுத்தம் தழைத்தோங்கி இருந்தபொழுது

சூத்திரர்களும் பெண்களும் கல்வி அறிவு பெற்றிருந்தார்கள். பவுத்தத்தை அழிப்பதற்கு இதுவும் ஒரு காரணம் என்பதை பார்ப்பனியத்தின் வெற்றி என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

ஆர்எஸ்எஸ் சங் பரிவார் அமைப்பைத் துவக்கியவர்களும் இந்து மகாசபையைத் துவக்கியவர்களும் மகாராஷ்டிராவிலுள்ள பேஷ்வாப் பார்ப்பனர்கள்தான். அந்த சங் பரிவார் கும்பலால் பெரிதும் போற்றப்படும் வீரசிவாஜியின் வாரிசுகளின் ஆட்சியை ஒழித்து விட்டு பேஷ்வாக்கள் ஆட்சியை நிறுவினார்கள். அந்த ஆட்சியில்தான் நாட்டிலேயே அதிகமான தீண்டாமைக் கொடுமை நிலவியது.

ஒரு தீண்டத்தகாதவன் தெருவிலே நடந்தால் தெரு தீட்டாகிவிடும் என்பதற்காக அவன் நடந்த தடத்தை அழிப்பதற்கு இடுப்பில் விலக்குமாற்றைக் கட்டிக்கொண்டு நடக்க வேண்டும் என்ற கொடுமையெல்லாம் நடந்தது அந்த ஆட்சியில்தான். மராட்டியத்தை ஆங்கிலேயர் கைப்பற்றியது அந்த பேஷ்வாக்களிடம் இருந்துதான்.

ஆங்கிலேயரிடம் இழந்த ஆட்சியை மீண்டும் தாங்கள் கைப்பற்ற வேண்டும் என்பதுதான் அவர்களது நோக்கம்.

நாளடைவில் நாட்டையே கபளீகரம் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் இந்துராஷ்டிரம் என்ற ஒன்றை உருவாக்கி நாட்டை மதவெறிக்காடாக்கி வருகிறார்கள். அந்த பேஷ்வாப் பார்ப்பனர்களில் ஒருவன்தான் காந்தியைக் கொன்ற கோட்ஷே. அந்த பேஷ்வாக்களின் ஆட்சியில் தீண்டத்தகாதவர்களுக்கான கல்வி எப்படி இருந்தது என்பதை அண்ணல் அவர்கள் விளக்குகிறார்.

பேஷ்வா அரசாங்கம் இருந்தபோது கல்வி போதனை அறவே மறுக்கப்பட்டு வந்தது. அரசாங்கத்தின் எந்தக் கல்வித் திட்டத்திலும் அவர்கள் இடம்பெறவே இல்லை. பேஷ்வா அரசாங்கம் மனு சூத்திரங்களின் அடிப்படையில் அமைந்த ஓர் இறைமையியல் ஆட்சியாக இருந்தது. இந்தச் சூத்திரங்களின்படி சூத்திரர்களுக்கும் அதிசூத்திரர்களுக்கும் கல்வி கற்பதற்கு நிச்சயமாக உரிமை கிடையாது. என்பதை அண்ணல் அவர்கள் விளக்குகிறார் (தொகுதி 4 பக்கம் 144).

பிரிட்டிஷார் ஆட்சி ஏற்பட்டு 1815ல் பம்பாய் கல்விக்கழகம் ஏற்பட்டது. அந்தப் பள்ளிகளில் தாழ்த்தப்பட்டவர்கள் சேர்த்துக் கொள்ளப்படவே இல்லை. 1855ல்தான் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிள்ளைகள் படிப்பதற்கென்று பிரிட்டிஷ் அரசாங்கம் தனியாக அவர்களுக்கு பள்ளிகள் கட்டியது. ஆனால் இத்தகைய பள்ளிக்கூடம் திறக்கப்படுவதை பணக்கார மேல்சாதியினர் விரும்பவில்லை. இவர்களுக்கு கல்வி கொடுப்பதனால் தங்கள் கவுரவத்திற்கு இழுக்கு ஏற்படும் என்று அவர்கள் கருதினர் என்று அண்ணல் கூறுகிறார் (அதே தொகுதி பக்கம் 143)

அதே நூல் பக்கம் 39ல் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

தாழ்த்தப்பட்ட வகுப்புக்களைப் பொறுத்தவரை கல்வி அறிவுபெறும் வாய்ப்பு உண்மையிலேயே மறுக்கப்படுகிறது. கல்விக்கு தீண்டாமை ஒரு சமாளிக்க முடியாத தடையாக இருந்துள்ளது. அரசாங்கமும் அதற்குப் பணிந்து இந்தியாவில் நிலவும் சமுதாய அமைப்பின் தன்மைக்கு ஏற்ப தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பொதுப்பள்ளியில் சேர்ந்து படிக்கும் உரிமையை அது தியாகம் செய்துவிட்டது என்று எழுதுகிறார்.

அதே நூலில் மேலும் அண்ணல் எழுதுகிறார்,

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கல்வி குறித்து அக்கறை செலுத்திய ஒரே அமைப்பு கிறிஸ்தவ மெஷினரிகள்தான் எனவும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத்தான் மிகச்சிறந்த மக்களாக அவர்கள் கருதினார்கள் என்பதையும் குறிப்பிடும் அவர் மதவிசயத்தில் நடுநிலைக் கொள்கையை அரசாங்கம் கடைப்பிடித்ததால் இந்த மிஷன் பள்ளிகளுக்கு எந்தவித மான்யங்களும் பண உதவியும் அளிக்கப்படவில்லை என்பதையும் குறிப்பிடுகிறார்.

கல்வி வாரியங்களை கல்வி அறிவற்ற கிராமவாசிகளைக்கொண்டு அமைக்கப்பட்டது. கல்வி பிராமணர்கள் மட்டுமே கவலைப்பட வேண்டிய விசயம் என்று எண்ணும் மரபில் வளர்ந்து ஆளானவர்கள் இந்தக் கிராமவாசிகள்.

ஆரம்பக் கல்வியை கீழ்நிலை வகுப்பினருக்கு விரிவு படுத்துவது குறித்து அமைக்கப்பட்ட ஹண்ட்டர் கமிஷனிடம் கீழ்ச்சாதி மக்களைப் பள்ளியில் சேர்ப்பதற்கு கடுமையான எதிர்ப்புகள் இருப்பதாகப் பலர்; இந்த கமிசனிடம் சாட்சியம் அளித்தனர். கீழ்ச்சாதி சிறுவர்கள் பள்ளிக்குச் செல்லும்போது உயர்சாதியினர் அவர்களை மடக்கி அவர்களது புத்தகங்களையும் பறித்துக் கொள்கின்றனர் என்றும் சாட்சியம் அளித்தனர். கீழ்சாதி மக்கள் கல்வி கற்றால் வாழ்க்கையில் முன்னேறி விடுவார்கள். இதனால் தற்போதைய கொத்தடிமைத்தன நிலையிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள ஆக்கமும் ஊக்கமும் பெற்றுவிடுவார்கள் என்பதுதான் இந்த எதிர்ப்புக்குக் காரணம் என்றும் அந்த கமிசனிடம் மக்கள் சாட்சியம் அளித்தனர். 1896 &97 காலக்கட்டத்தில் உள்ளூர் அதிகாரிகள் சிலர் கீழ்ச்சாதி மாணவர்களை பள்ளியில் சேர்க்க முயற்சி எடுத்தபோது எழுந்த எதிர்ப்பினால் அய்ந்து அல்லது ஆறு பள்ளிக் கூடங்கள் ஆண்டுக் கணக்கில் மூடப்பட்டுக்கிடந்தன என்றும் கீழ்ச்சாதி மக்களின் குடிசைகள் எரிக்கப்பட்டன என்றும் அவர்கள் பயிர்கள் நாசமாக்கப்பட்டன என்றும் அண்ணல் அவர்கள் குறிப்பிடுகிறார். (அதே நூல் பக்கம் 171)

“அக்காலத்தில் பெறற்கரிய புதையலாகக் கருதப்பட்ட இலக்கியமும் கல்வியும் பார்ப்பனர்களுக்கு மட்டுமே உரித்தாக விளங்கின. இவை இரண்டும் சாதி இந்துக்களுக்கு மறுக்கப்பட்டன. சத்தாராவின் அரசர்கூட இரவில்தான் கல்வி கற்க வேண்டும் என்ற அளவிற்குப் பார்ப்பனர்களின் அதிகாரம் அச்சமூட்டுவதாய் இருந்தது. 1821ல் பூனாவில் சமஸ்கிருதப் பள்ளி ஒன்றை மகாராட்டிர அரசு தொடங்கியது. அப்பள்ளியில் பார்ப்பனர்களைத் தவிர சாதி இந்துக்களும் சேர்த்துக் கொள்ளப் படுவதற்கு பார்ப்பனர்கள் கடுமையான வெறுப்பையும் எதிர்ப்பையும் காட்டினர். பெரும்பாலான பார்ப்பன ஆசிரியர்கள் பள்ளிகளில் இருந்து தங்கள் பதவிகளைத் தூக்கியெறிந்து விட்டு வெளியேறினர். எனினும் சாதி இந்துக்கள் பயில்வதற்கான பள்ளிகள் பையப்பைய அரசினால் நிறுவப்பட்டன. இதனால் பார்ப்பனர் அல்லாதவர்களும் பின்தங்கிய வகுப்பினரும் கல்வியிலும் அரசு வேலைகளிலும் மெல்ல மெல்ல முன்னேறினர். இதற்கான பெருமை பிரிட்டிஷ் அரசையே சேரும்.

சாதி இந்துக்களுக்கே இந்த ஈனகதி என்றால் தீண்டத் தகாத வகுப்பு மக்களின் நிலை எவ்வாறு இருக்கும்? அவர்கள் இந்தத் துறைகளில்

இடம் பெறவே இல்லை. கல்வியில் இவர்கள் நெடுந்தூரம் பின்தங்கி இருந்தனர். தீண்டத் தகாதவர்களுக்குக் கல்வி தருவதன்மூலம் பார்ப்பனர்களின் பகையைத் தேடிக்கொள்ள ஆங்கிலேய ஆட்சி விரும்பவில்லை. அதனால் தாழ்த்தப்பட்டவர்களுக்கு கல்வி அளிப்பதில எப்போதும் நழுவல் போக்கும் திசை திருப்பல் முயற்சியுமே அரசிடம் இருந்தது. மேலும் அக்காலத்தில் ஆசிரியர்கள், பள்ளி ஆய்வாளர்கள், கல்வி அலுவலர்கள் ஆகிய அனைவருமே பார்ப்பனர்கள். வெகு மக்களுக்கு கல்வி தருவது என்ற சிந்தனையையே இவர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

கிறிஸ்தவ மத நிறுவனங்கள் இந்த சூழ்நிலையை சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர். இவர்களுக்கு ஓர் உள்நோக்கம் இருந்தாலும் தாழ்ந்த சாதியினருக்கும் தீண்டப்படாத வகுப்பு மக்களுக்கும் கல்வி வழங்கிடத் தொடங்கினர். சாதி இந்துக்கள் படிக்கும் பள்ளிகளில் தீண்டப்படாத வகுப்புக் குழந்தைகள் சேர்க்கப்படவில்லை. பரோடா மன்னர் சாயாஜிராவ் கெய்க்வாட் 1883ல் தாழ்த்தப்பட்டவர்களுக்கெனப் பள்ளிகளை நிறுவினார். இந்தப் பள்ளிகளில் இந்துக்கள் எவரும் ஆசிரியராகப் பணியாற்ற முன் வராததால் முஸ்லிம் ஆசிரியர்களைக் கொண்டே நடத்த வேண்டி இருந்தது” (தனஞ்செய்கீர் எழுதிய அண்ணல் அம்பேத்கர் வரலாறு பக்கம் 5, 6, 7).

இவ்வாறு தீண்டத்தகாத மக்கள் கல்வி அறிவு பெறுவதற்குப் பெரிதும் தடையாக இருந்தது இந்து மதமும் பார்ப்பன உயர் ஜாதியினரும்தான் என்பதை அண்ணல் அவர்கள் மிகத் தெளிவாக எடுத்துரைத்தும் அதையெல்லாம் மூடி மறைத்து அண்ணலின் கல்வி அறிவு ஏதோ தானாகக் கிடைத்ததுபோல பிஎம்எஸ் கதை விடுகிறது.

## 24. பாக்கிஸ்தான் பிரிவினையை அம்பேத்கர் கடுமையாக எதிர்த்தாரா?

அடுத்து, அதே இதழில் இஸ்லாமியர் குறித்து அண்ணலின் கருத்து திரிக்கப்பட்டு ஏதோ அவர் ஒட்டுமொத்த இஸ்லாமியருக்கும் எதிரானவர்போலவும் இந்துத்துவா வுக்கு ஆதரவானவர் போலவும் காட்ட பெரும் முயற்சி எடுத்து வருகிறது காவிக்கும்பல்.

அதில் ஒன்றுதான் அம்பேத்கர் பாக்கிஸ்தான் பிரிவதை கடுமையாக எதிர்த்தார் என்று எழுதுகிறது. பாக்கிஸ்தான் பற்றிய சிந்தனைகள் என்ற நூல் கிட்டதட்ட எழுநூறு பக்கங்கள் கொண்டது. அதை முழுவதையும் படித்து உள்வாங்குவதற்கே ஒரு தனி அறிவு வேண்டும். அந்த நூலில் இந்துக்கள் இஸ்லாமியர் இரு தரப்பாருடைய வாதங்களையும் நடுநிலையோடு ஆராய்ந்து பொதுவான கருத்துக்கள் பலவற்றை எடுத்துரைக்கிறார். இருதரப்பாருடைய அணுகுமுறையுமே தேசிய நலனுக்கு அப்பாற்பட்டவையாகத்தான் உள்ளன என்கிறார். (பக்கம் 577)

எந்த இடத்திலும் பாக்கிஸ்தான் கூடாது கூடவே கூடாது என்று சொல்லவில்லை. அதே நேரத்தில் இந்துராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளவே முடியாது என்று ஆணித்தரமாகச் சொல்கிறார்.

“இந்துராஜ்யம் நிஜமாகும் பட்சத்தில் அது இந்த நாட்டின் மிகப்பெரும் சோக சம்பவமாக இருக்கும் என்பதில் அய்யமில்லை. இந்துக்கள் என்ன சொன்னாலும் இந்துமதம் விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றுக்குப் பேரிடராகவே இருக்கும். இந்த விசயத்தில் அது ஜனநாயகத்துக்கு ஏற்புடையதல்ல. இந்து ராஜ்யம் எந்த விலை கொடுத்தேனும் தடுக்கப்பட வேண்டும்” என்று சொல்லும் அவர் அதற்குப் பரிகாரமாக பாக்கிஸ்தான் அமையாது என்பதையும் நடுநிலையோடு சுட்டிக்காட்டுகிறார். பக்கம் 536)

இதனை அப்படியே மூடிமறைத்து விட்டு அண்ணல் அவர்கள் ஏதோ முஸ்லிம்களுக்கு மட்டும் எதிரான கருத்தைச் சொன்னார் என்று அவரைத் திசைதிருப்பப் பார்க்கிறது.

ஒரு சமூக சீர்திருத்த இயக்கம் முஸ்லிம்களிடையே உருவாகவில்லையே என்று கவலைப்படும் அவர் முஸ்லிம்கள் எடுத்த எடுப்பிலேயே பாக்கிஸ்தான் கோரிக்கையை வைக்கவில்லை என்பதையும் முகமதலி ஜின்னா 1920 லிருந்து 1937 வரை பாக்கிஸ்தான் கோரிக்கையை ஆதரிக்கவில்லை என்பதையும் சுட்டிக்காட்டுகிறார். “1937வரை கூடிவாழும் விருப்பம் நிச்சயமாக இருந்து வந்தது. 1935ம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் உருவாக்கப்பட்டபோது தாங்கள் ஒரே நாட்டின் ஒரே சட்டத்தின் கீழ் கூடி வாழ வேண்டும் என்ற கருத்தை இந்துக்களும் முஸ்லிம்களும் ஏற்றுக் கொண்டதுடன் அச்சட்டம் ஏற்றப்படுவதற்கு முந்தைய விவாதங்களிலும் கலந்துகொண்டனர்” என்கிறார் அண்ணல் (பக்கம்521)

பாகிஸ்தான் எதிர்ப்பாளர்களின் முகத்திரையைப் பல இடங்களில் கிழித்துத் தொங்க விட்டுள்ளார். காங்கிரஸ் மற்றும் இந்துமகாசபையின் இரட்டை வேடங்களைத் தோலுறித்துக் காட்டுகிறார்.

இந்தியாவில் மொழிவாரி மாகாணங்கள் பிரிவதை காங்கிரஸ் ஏற்றுக் கொண்டுவிட்ட கோட்பாடாகிவிட்டது. “கர்னாடகமும் ஆந்திராவும் பிரிவதில் அதிர்ச்சி அளிக்கக் கூடியது எதுவும் இல்லையெனில் பாக்கிஸ்தான் பிரிவினைக் கோரிக்கையில் மட்டும் என்ன அதிர்ச்சி இருக்க முடியும்? பாக்கிஸ்தான் கோரிக்கை சீர்குலைவை உண்டுபண்ணும் என்று வாதிப்பதனால் இந்து மாகாணங்களான கர்னாடகம் மகாராஷ்டிரத்திலிருந்தும் ஆந்திரா சென்னையிலிருந்தும் பிரிந்து செல்வதைவிட இது அதிக சீர்குலைவை ஏற்படுத்தி விடாது. பாக்கிஸ்தான் என்பது தனக்கே உரிய தனது சொந்தக் கலாச்சாரத்தை வளர்;த்துக்கொள்வதற்குச் சுதந்திரம் வேண்டும் என்ற ஒரு கலாச்சார யூனிட் முன்வைக்கும் கோரிக்கையின் மறு வெளிப்பாடாகும்” என்று கூறுகிறார் (பக்கம் 41) அத்துடன் 1826 முதல் இந்தியாவுடன் இணைந்திருந்த பர்மா 1937ல் தனி நிர்வாகத்தின் கீழ் வந்தது. அவ்வாறு இந்தியாவிலிருந்து பர்மா பிரிக்கப்பட்டதை எதிர்க்காத இந்துக்கள் அரசியல் நோக்கில் பிரிக்கக் கூடியதும் சமுதாய நோக்கில் பகையுணர்வு மிக்கதும் சமய நோக்கில் அந்நியமானதுமான பாக்கிஸ்தான் போன்றதொரு பகுதியை மட்டும் பிரிக்கக் கூடாதெனக் கூறுதல் மிக விந்தையானது” என்கிறார் அண்ணல் (பக்கம் 96)

அத்துடன் பாக்கிஸ்தான் பிரிவதால் இந்தியாவின் வலிமை குன்றும்

என்ற கூற்றுக்கு இங்கு நிறைந்துள்ள வளங்களை நோக்கும்போது வலிமையான அரண்களை நம்மால் உருவாக்க இயலும் என்று இந்துக்கள் உறுதியாக நம்பலாம் என்று மேலும் கூறுகிறார் (பக்கம் 99) வளங்களின் பற்றாக்குறை குறித்தும் அச்சம் எதுவும் தேவை இல்லை என்பதையும் குறிப்பிடுகிறார்.

போர்ப்படைகள் குறித்த பிரச்சினைகளைப்பற்றி அலசி ஆராய்ந்த அண்ணல் அவர்கள் போர்ப்படைகளுக்காக குறிப்பாக முஸ்லிம் போர்ப்படைகளுக்காக செலவிடப்படும் தொகை இந்துக்களின் வரிப்பணத்திலிருந்து செலவிடப்படுகிறது என்றும் அதற்கு உறுதியான வழி பாக்கிஸ்தான் பிரிந்துபோக விட்டுவிடுவதே நல்லது என்றும் அவர் சொல்கிறார்.

ஆனால் இந்துமகாசபையும் காங்கிரசும் பாக்கிஸ்தான் பிரிவினையை எதிர்த்து வந்தார்கள். இந்துக்களிலுள்ள உயர்சாதி இந்துக்கள் இந்தப் பிரிவினைகளை எதிர்த்துக் குரல் கொடுத்து வந்துள்ளார்கள். அவர்களது இரட்டை வேடத்தை அண்ணல் அவர்கள் அம்பலப்படுத்துகிறார். 1915ல் பம்பாய் மாநிலத்திலிருந்து சிந்துவைத் தனி மாநிலமாகப் பிரிக்க வேண்டும் என்றவர்கள் 1929ல் சைமன் கமிஷன் முன்பு சிந்து மாகாணத்தைப் பிரிக்கக் கூடாது என்கிறார்கள் என்றும் அவர்களது முரண்பாட்டைச் சுட்டிக்காட்டும் அண்ணல் அவர்கள் 1915ல் சிந்து மாகாணத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு இல்லை என்றும் முஸ்லிம் அரசாகவும் இல்லாத நிலையில் அரசு உயர் பதவிகளில் பெரும்பாலானவற்றைக் கைப்பற்றிவிடலாம் என்ற நோக்கிலேயே 1915ல் சிந்து மாகாணத்தைப் பிரிக்க ஒத்துக் கொண்டார்கள். ஆனால் 1929ல் சிந்து மாநிலமாகப் பிரிக்கப்பட்டு அங்கு முஸ்லிம் அரசு பொறுப்பேற்றுள்ளதால் அரசு உயர் பதவிகளில் தங்களுடைய ஏகபோக நிலைமை பாதிக்கப்படும் என்பதால் இந்துக்கள் எதிர்த்தனர் என்கிறார்.

மேல்சாதி இந்துக்களின் கீழான பண்புக்கு வங்கப் பிரிவினைக்கு அவர்கள் காட்டிய எதிர்ப்பினைக் கூறலாம். முழுமையான வங்காளம் மட்டுமின்றி பீகார் ஒரிசா அஸ்ஸாம் அய்க்கிய மாகாணங்கள் ஆகியவற்றில் அனைத்து உயர் அரசுப் பொறுப்புக்களையும் வங்காள இந்துக்களே பெற்று வந்தனர். வங்க மாநிலம் இரண்டாகப் பிரிக்கப்பட்டால் பசுமையான இந்த மேய்ச்சல் நிலத்தின் ஒரு பகுதி

போய்விடுமே என்பதால்தான் இந்துக்கள் வங்கப் பிரிவினையை எதிர்த்தனர். வங்கம் பிரிந்தால் கிழக்கு வங்கத்தின் ஆட்சி அதிகாரப் பதவிகளை முஸ்லிம்களுக்கு பெரும்பாலும் விட்டுத்தர வேண்டியிருக்கும். இவ்வாறு வங்காள முஸ்லிம்களுக்கு தமது பதவிகளில் ஒரு பகுதியை விட்டுத் தரவேண்டிய நிலைமையை தவிர்த்து தங்கள் ஏகபோக நிலையை நீடித்து இருத்திக் கொள்வதே இந்துக்களின் வங்கப் பிரிவினை எதிர்ப்புக்கு தலையாய காரணம்" என்று அண்ணல் அவர்கள் மேல்சாதிப் பார்ப்பனர்களின் இரட்டை வேடத்தைத் தோலுறித்துக் காட்டுகிறார்.

மேல்சாதி இந்துக்களின் தாழ்பண்புகள் காரணமாகத் தங்களது பதவி வேட்டைக்காடுகளின் பரப்பு குறைந்து விடுமேயென்ற காரணம் ஒன்றுக்காகவே பாக்கிஸ்தான் பிரிவினையை எதிர்க்கிறார்களோ என்ற அச்சம் தோன்றுவதாக அண்ணல் கூறுகிறார். பாக்கிஸ்தான் பிரிவினையை எதிர்ப்பதற்கான பல்வேறு காரணங்களில் மேல்சாதி இந்துக்களின் தன்னலமும் ஒன்றாக இருக்குமெனில் வியப்பதற்கில்லை என்கிறார் (பக்கம் 176)

"தங்களுடைய உயர் வேலைவாய்ப்புப் பகுதிகளில் சில குறைந்துவிடும் என்பதற்காக வங்க பஞ்சாபி மேல்சாதி இந்துக்கள் பாக்கிஸ்தான் பிரிவினையை எதிர்ப்பதன் மூலம் மாபெரும் தவறு செய்கிறார்கள் என்று அவர்களுக்கு உணர்த்த வேண்டும். அரசுப் பதவிகள் அனைத்தையும் தங்கள் ஏகபோக உரிமையாய் வைத்துக்கொள்ளும் காலம் மலையேறிவிட்டதென்று அவர்களுக்கு உணர்த்த வேண்டும். தேசியத்தின் பெயரால் அவர்கள் தாழ்ந்த சாதி இந்துக்களை வேண்டுமானால் இன்னும் ஏமாற்றிக் கொண்டிருக்கலாமேயன்றி முஸ்லிம் பகுதிகளில் வாழும் முஸ்லிம் மக்களை ஏமாற்றி அதிகாரப் பதவிகளைத் தங்கள் வசமே தக்க வைத்துக்கொள்வது என்பது இனியும் நடவாது... முஸ்லிம்களை முட்டாளாக்கி முழுமையான ஆட்சி அதிகாரத்தை என்றென்றும் தக்க வைத்துக்கொள்ள முடியும் என்று அவர்கள் கருதுவது அறிவுடைமை ஆகாது" என்று பார்ப்பனர்களின் முகத்திரையைக் கிழித்துக்காட்டுகிறார் (பக்கம் 177)

மேலும் சவர்க்கர் இந்தியாவின் பாதுகாப்புக்கும் பந்தோபஸ்துக்கும் ஆபத்தான ஒரு நிலையை உருவாக்குகிறார் என்றும் இந்து இனத்தவர்

தங்களுக்கென்று தனியாக ஒரு நாடு இருக்க வேண்டும் என்று கோருகின்ற அவர் முஸ்லிம் இனத்தவர் தங்களுக்கென்று ஒரு நாடு வேண்டும் என்று கோருவதை எப்படி மறுக்க முடியும்? என்கிறார் (பக்கம் 206)

"முஸ்லிம் இனத்தவர்கள் அதிகாரத்தில் இந்து இனத்தவர்களுடன் சரிசமமாக இருப்பதை திரு சவர்க்கர் அனுமதிக்க மாட்டார். இந்து இனம் ஆதிக்கம் செலுத்தும் இனமாகவும் முஸ்லிம் இனம் சேவகம் புரியும் இனமாகவும் இருக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். இந்து இனத்தவருக்கும் முஸ்லிம் இனத்தவருக்கும் இடையில் பகைமை என்னும் விதையைத் தூவிய பின்னர் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் ஒரே நாட்டில் வாழ வேண்டுமென்று திரு சவர்க்கர் விரும்புகிறார் என்பது விளக்குவதற்குக் கடினமானதாகும்" என்கிறார் அண்ணல் (பக்கம் 207)

திரு சவர்க்கர் உருவாக்கிய சுயராஜ்யத் திட்டம் முஸ்லிம்களை அடக்கி ஆளும் ஒரு சாம்ராஜ்யத்தை இந்துக்களுக்கு வழங்கி அதன் மூலம் தாங்கள் ஒரு ஏகாதிபத்திய இனம் என்ற திருப்தியையும் பெருமையையும் வழங்கும். ஆனால் அது இந்துக்களுக்கு ஒரு நிலையான அமைதியைத் தராது. ஏனெனில் முஸ்லிம்கள் இத்தகையை ஒரு பயங்கரமான மாற்றுத் திட்டத்திற்கு ஒருபோதும் ஒப்புக்கொண்டு அடிமைகளாக இருக்க மாட்டார்கள்" என்றும் அண்ணல் அவர்கள் சவர்க்கரை அம்பலப்படுத்துகின்றார்.

இந்துராஜ்யம் எந்த விலை கொடுத்தேனும் தடுக்கப்பட்டாக வேண்டும் என்று கூறும் அண்ணல் அவர்கள் எந்த இடத்திலும் அதேபோல பாக்கிஸ்தான் தடுக்கப்பட்டாக வேண்டும் என்று கூறவில்லை. மாறாக "பாக்கிஸ்தான் வேண்டும் என்று முஸ்லிம்கள் கோரும் பட்சத்தில் அவர்களது கோரிக்கைக்கு இணங்குவதே அறிவார்ந்த பாதையாக இருக்கும் என்பதில் அய்யம் ஏதும் இருக்க முடியாது" என்கிறார் (பக்கம் 550)

அப்படி பாக்கிஸ்தான் வேண்டும் என்பதை யார் முடிவு செய்ய வேண்டும் என்பதையும் அண்ணல் கூறுகிறார்.

பாக்கிஸ்தான் இருந்துவிட்டுப் போகட்டுமே என்று சொல்லக் கூடிய

வேலை பம்பாய் அல்லது சென்னையைச் சேர்ந்தவர்களுக்கு இல்லை. பல ஆண்டுகளாக தங்களது வாழ்வும் வருங்காலமும் எந்த அரசியல் மற்றும் பொருளாதார அமைப்புடன் பின்னிப் பிணைந்துள்ளதோ அதில் ஏற்பட்ட மிகவும் உக்கிரமான மிகவும் புரட்சிகரமான மிகவும் அடிப்படையான ஒரு மாற்றத்தின் விளைவுகளைத் தாங்கிக் கொள்ளக் கூடிய அப்பகுதிகளில் வாழும் மக்களே அதைத் தீர்மானிக்க விட்டுவிட வேண்டும். பாக்கிஸ்தான் மாகாணங்களில் வாழும் மக்களிடையே நடத்தப்படும் ஒரு கருத்துக் கணிப்புத்தான் பாக்கிஸ்தான் பிரச்சினையைத் தீர்க்கும் மிகவும் பாதுகாப்பான அரசியல் சட்டரீதியான வழிமுறையாக எனக்குத் தோன்றுகிறது என்று அண்ணல் கூறுகிறார். (பக்கம் 593)

இந்தியாவைப் பிரிவினை செய்வதற்கு மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்தினுடைய அதிகாரத்தைப் பயன்படுத்தச் செய்வதன் மூலம் தனது நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள எண்ணுவது முஸ்லிம் லீக்கின் நலன்களுக்கு உகந்தது அல்ல என்ற இன்னொரு விசயத்தையும் நான் கூற விரும்புகிறேன். பாகிஸ்தானைப் பெறுவதைவிட மிக முக்கியமானதென்று நான் கருதுவது என்னவெனில் பாகிஸ்தானை ஏற்படுத்துவதில் பின்பற்றப்படும் நடைமுறைகளேயாகும். பிரிவினைக்குப் பின்னர் பாக்கிஸ்தானும் இந்தியாவும் இரு நேச நாடுகளாக ஒன்று மற்றதன்பால் நல்லெண்ணத்துடனும் பகைமையுணர்வு இன்றியும் தொடரவேண்டும் என்பதே குறிக்கோளாகும்.

மக்களின் வாக்கெடுப்பு மூலம் மேற்கொள்ளப்படும் முடிவைத் தவிர இந்த இலக்கை அடைவதற்கு வேறொரு சிறந்த தீர்வு இருக்க முடியுமா என்பதை நானறியேன். (பக்கம் 600)

இவ்வளவு தெளிவாக பாக்கிஸ்தான் பற்றிய தனது முடிவை அண்ணல் அவர்கள் தெரிவித்திருக்கும்போது முஸ்லிம் லீக்கின் பிரிவினை கோஷத்தை அவர் வன்மையாகக் கண்டித்தார் என்று எழுதுவது விசமத்தனமானது. அண்ணலை முஸ்லிம்களுக்கு எதிராகச் சித்தரிப்பதன் மூலம் தாழ்த்தப்பட்ட மக்களை முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டிவிட்டு அவர்களை அடியாளாகப் பயன்படுத்துவதே அவர்களது நோக்கமாகும்.

அதே நூலில் அண்ணல் அவர்கள் இந்துராஜ்யம் அமைவதைத் தடுக்க முகமதலி ஜின்னாவுக்கு யோசனையும் தெரிவிக்கிறார். நாட்டைத் துண்டாடாமல் முஸ்லிம் லீக்கை மூட்டை கட்டி வைத்துவிட்டு இந்துக்களும் முஸ்லிம்களும் கலந்த ஒரு கட்சியை உருவாக்குவதுதான் இந்துராஜ்யம் என்ற பூதத்தைக் குழிதோண்டிப் புதைக்கும் ஒரே பயனுறு வழியாகும். அரசியல் சட்டரீதியான பாதுகாப்பு நடவடிக்கைளின் பிரச்சினை மீதான கருத்து வேறுபாடுகள் தொடரும்வரை காங்கிரசிலும் இந்துமகாசபையிலும் சேருவது முஸ்லிம்களுக்கும் இதர சிறுபான்மையினருக்கும் சாத்தியமில்லை என்பது உண்மைதான். ஆனால் இப்பிரச்சினை நிச்சயம் தீர்க்கப்படும். தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினை இது. இத்தீர்வு முஸ்லிம்களுக்கும் இதர சிறுபான்மையினருக்கும் அவர்களுக்குத் தேவையான பாதுகாப்பைப் பெற்றுத்தரும் என்பதை நம்பிக்கையுடன் கூற முடியும். இது நிறைவேற வேண்டும் என்று உளப்பூர்வமாக விரும்புகின்றோம். அவ்வாறு நிகழும்போது கட்சிகள் மறு ஒருங்கிணைக்கப்படும் வழியில் எதுவும் குறுக்கிட முடியாது. காங்கிரசும் இந்து மகாசபையும் தகர்ந்துபடும்.

இந்து சமுதாயத்தில் பல கீழ்மட்டப் பிரிவுகள் உள்ளன. அவர்களுடைய பொருளாதார அரசியல் சமூகத் தேவைகள் பெரும்பாலான முஸ்லிம்களின் தேவைகளைப் போன்றதேயாகும். பல நூற்றாண்டுகளாகத் தங்களுக்கு சாதாரண மனித உரிமைகளை மறுத்தும் பறித்தும் வந்த உயர்ஜாதி இந்துக்களுடன் இணங்கிப் போவதைவிட பொதுவான இலக்குகளை எய்துவதற்கு முஸ்லிம்களுடன் ஒரு பொதுவான இலட்சியத்தில் இணைவதற்கு அவர்கள் தயாராக இருப்பார்கள். இத்தகைய ஒரு போக்கை பின்பற்றுவதை அபாயகரமான செயல் என்று கருத முடியாது. இப்பாதை நன்கு பழகிய பாதைதான். பெரும்பாலான மாநிலங்களில் மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களின் கீழ் முஸ்லிம்களும் பிராமணர் அல்லாதார்களும் ஒடுக்கப்பட்ட வகுப்பினரும் ஒன்று சேர்ந்து 1920 முதல் 1937 வரை ஒரே குழு உறுப்பினர்களைப் போன்று சீர்திருத்தங்களைச் செயல்படுத்தப் பாடுபட்டது உண்மையல்லவா?

இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் ஒரு வகுப்புவாத நல்லிணக்கத்தை எய்தவும் இந்துராஜ்யம் உருவாகும் அச்சுறுத்தலை ஒழிக்கவுமான மிகவும் பயனுள்ள வழிமுறை இதில்தான் உள்ளது.

திரு.ஜின்னா இந்த வழியை எளிதில் பின்பற்றியிருக்கலாம். அதில் வெற்றிபெறுவது திரு ஜின்னாவுக்கு கடினமானது அல்ல. இத்தகைய ஒரு வகுப்புசாராத கட்சியை உருவாக்க திரு ஜின்னா முயன்றிருந்தாரேயானால் அவரது தரப்பில் வெற்றிக்கு எல்லா வாய்ப்புக்களும் இருந்திருக்கும் என்று திரு ஜின்னாவுக்கே ஆலோசனை வழங்கியவர் அண்ணல் அவர்கள்.

அவரது ஆலோசனையை ஏற்காமல் பிரிட்டிஷ் அரசு பாக்கிஸ்தானைப் பிரித்ததால்தான் தேவையற்ற மதக்கலவரங்களும் கொலைகளும் வெட்டுக்குத்துகளும் ஏற்பட்டன.

இந்தியாவிலுள்ள மற்ற சிறுபான்மையினரும் பார்ப்பனரல்லாதாரும் ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினரும் ஒருங்கிணைந்தால் இந்துராஜ்யம் அமையும் அபாயத்தைத் தகர்க்க முடியும் என்பதை அழுத்தம் திருத்தமாக அண்ணல் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

அவரது ஆலோசனையின்படி இன்றுள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பினரும் பார்ப்பனரல்லாதாரும் முஸ்லிம்களும் மற்ற சிறுபான்மையினரும் ஒன்று சேர்ந்து இந்துராஜ்யம் உருவாவதைத் தடுத்து விடுவார்கள் என்ற அச்சத்தினால்தான் சங் பரிவார் கும்பல் ஒடுக்கப்பட்ட வகுப்பினரை முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டிவிடப் பார்க்கிறது. அதனை அண்ணலின் அறிவாயுதத்தைக்கொண்டு முறியடிப்போம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## 25. கம்யூனிஸ்டுகளுக்கு எதிரான நிலைப்பாடு

இஸ்லாமியருக்கு எதிராக தலித் மக்களைப் பயன்படுத்த அண்ணலை அவர்கள் கருவியாகப் பயன்படுத்துவதுபோலவே கம்யூனிஸ்ட்டுகளுக்கு எதிராகவும் அவர்கள் இந்த பிஎம்எஸ் நியூஸ் இதழில் விசத்தைக் கக்கியுள்ளார்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் கூறியதுபோல பிரித்தாளும் சூழ்ச்சியை அவர்கள் பின்பற்றியுள்ளார்கள்.

அம்பேத்கர் கம்யூனிசத்தை வெறுத்து ஒதுக்கி எதிர்த்தார். ஆனால் அவரின் பெயரிலேயே இயக்கங்கள் நடத்துபவர்கள் பொது உடைமைக் கொள்கை பேசுவதும் ஓட்டை வீணாக்குங்கள். ஆனால் அம்பேத்கருக்கு வாக்களிக்காதீர்கள் எனக் கூறிய எஸ்.ஏ.டாங்கே வழிவந்த கம்யூனிஸ்டுகள் இன்று அம்பேத்கர் படத்தை வைத்து வாக்கு வங்கி அரசியல் நடத்தும் காட்சியையும் நம்மால் காண முடியும் என்று பிஎம்எஸ் நியூஸ் முதல் பக்கத்திலேயே எழுதுகிறது.

அவர்கள் நோக்கமே இவர்கள் நமக்கு எதிராக ஒன்று சேர்ந்து விட்டார்களே அவர்களுக்குள் பிளவு ஏற்படுத்த என்ன செய்யலாம் என்பதுதான் முக்கியமாகத் தெரிகிறது.

இந்துக்கள் உண்மையில் தீண்டப்படாதவர்களின் நோக்கங்களையும் நலன்களையும் எதிர்க்கின்றனர். தீண்டப்படாதவர்களின் மத்தியில் செயல்பட்டுவரும் ஜீவசக்திகளிடம் அவர்கள் அனுதாபம் காட்டுவதில்லை. ஆர்வ விருப்பங்களையும் அவர்கள் கணக்கில் எடுத்துக்கொள்வதில்லை. அவர்களுடைய அபிலாசைகளுக்கு எதிராக இருக்கின்றனர். அவர்கள் தீண்டப்படாதவர்களுக்கு நிச்சயமாக நியாயம் வழங்க மாட்டார்கள். (அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுதி 17, பக்கம் 47)

இந்துக்கள் மக்கி மசிந்துபோன வேரூன்றி விட்ட பழமை வாதத்தை உள்ளியல்பாகவே அவர்கள் பெற்றிருக்கிறார்கள். சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவத்துக்கு அதாவது ஜனநாயகத்துக்கு முரண்பட்ட ஒரு சமயத்தை அவர்கள் கொண்டிருக்கிறார்கள் என்று அவர்கள் முகத்திரையைக் கிழிக்கிறார்.

அதே BMS நியூஸ் நூல் பக்கம் 54ல் கம்யூனிஸ்ட்டுகளுக்கு எதிராக

அண்ணலை முன்னிறுத்துவதற்கு அவர்கள் படாதபாடு படுகிறார்கள். மதம் மக்களுக்கு அபின் போன்றது என்ற கருத்தைக் கொண்டிருந்தது கம்யூனிசம். ஆனால் அம்பேத்கர் அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. மதம் மனிதர்களுக்கு அவசியமானது. ஏனெனில் மனிதர்களைப் பண்படுத்துவது நல்வழிப்படுத்துவது மதம் மட்டுமே என்ற கருத்தை உள்வாங்கியிருந்தார் அம்பேத்கர். மதத்தை அலட்சியமாகக் கருதும் இளைஞர்கள் எனக்கு மிகமிக வருத்தத்தைத் தருகிறார்கள். யாரோ சொன்னதுபோல மதம் அபினல்ல என்று கூறியவர். என்னிடமிருக்கும் நல்ல பண்புகளுக்கு என் மத உணர்வுகளே காரணம். மதம் எனக்குத் தேவை என அம்பேத்கர் உறுதிபடக் கூறினார்' என்று பிஎம்எஸ் நியூஸ் எழுதி சந்தோசப்பட்டுக் கொள்கிறது.

அப்படி நீங்கள் துள்ளிக் குதிப்பதுபோல் அவர் ஒன்றும் உங்களுக்குச் சாதகமாக எதையும் கூறிடவில்லை. அவர் கூறுகின்ற மதம் என்பது உங்கள் இந்து மதம் கிடையாது.

அவருடைய வார்த்தைகளாலேயே சொல்ல வேண்டுமானால் "இந்துக்கள் மதம் என்று கூறுவது உண்மையில் சட்டமே. அல்லது அதிகமாகப் போனால் சட்டப்படியான வகுப்பு ஒழுக்க முறையே. இப்படி கட்டளைகளின் தொகுப்பாக அமைந்துள்ள ஒன்றை மதம் என்று நான் மதிக்க மாட்டேன்" (அண்ணல் பேச்சும் எழுத்தும் தொகுதி 1 பக்கம் 111) என்று பட்டவர்த்தனமாக இந்து மதம் என்பது மதமே அல்ல என்று கூறிய பிறகும் அண்ணலின் கூற்றை இவர்களுக்கு சாதகமாகக் கூறியது போல எடுத்துக் கொண்டு கொண்டாடுவது என்னை செருப்பாலேதானே அடித்தார் உன்னை கல்லால் அடித்தாரே என்று சொல்லி சந்தோசப்பட்டுக் கொள்வது போலத்தான் இருக்கிறது.

## 26. கார்ல் மார்க்சும் புத்தரும்

காரல் மார்க்சுக்கும் புத்தருக்கும் இடையே 2381 ஆண்டு இடைவெளி உள்ளது. ஆனால் புத்தருடைய கருத்துக்கள் புத்தம் புதிதாக உள்ளது என்கிறார் அண்ணல்.

பொதுஉடைமைவாதிகள் பொது உடைமைக்கு உதவியாக இருக்கக் கூடிய மதங்களுக்கும் உதவி இல்லாத மதங்களுக்கும் இடையே வேறுபாடு பார்க்க மறுக்கிறார்கள். கிறிஸ்தவ மதத்தின் மீது கொண்டுள்ள வெறுப்பை புத்த மதத்தின் மீது காட்டுகிறார்கள். புத்த மதத்தின் மீது இத்தகைய குற்றச்சாட்டைக் கூற முடியாது என்பதுதான் அண்ணலின் வாதம்.

புத்தரா காரல் மார்க்ஸா என்ற கட்டுரையில் புத்தருக்கும் காரல் மார்க்சுக்கும் முழுமையான கருத்தொற்றுமை உள்ளது. இருவருடைய குறிக்கோளும் ஒன்றுதான். ஆனால் அடையக்கூடிய வழிவகைகள்தான் வேறுபாடு உள்ளது என்பதுதான் அண்ணலின் கருத்து.

வன்முறை இல்லாமல் பொதுஉடைமை சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்பதுதான் புத்தரின் நோக்கம். ஆனால் காரல் மார்க்ஸ் வன்முறையாலும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தாலும் பொதுஉடைமையை நிலைநாட்ட வேண்டும் என்கிறார். வன்முறையால் அமைக்கப்படும் எந்த ஒன்றும் நிரந்தரமாக இருக்க முடியாது. அகிம்சையால் நிறுவப்படும் ராஜ்யமே நிரந்தரத் தீர்வைத் தரும் என்பதுதான் அண்ணலின் கருத்தாகும். மனித உயிர்களை அழிக்கக் கூடாது. மனித உயிர்களுக்கு மதிப்புத் தர வேண்டும். உடைமைவாதிகளின் உயிரை எடுக்காமல் உடைமைகளை மட்டும் எடுத்துக் கொள்ளமுடியாதா? என்றுதான் அண்ணல் கேட்கிறார்.

புத்தர் சர்வாதிகாரம் இல்லாமலேயே பிக்குகள் சங்கத்தில் பொது உடைமையை நிறுவினார் என்று அண்ணல் சொல்கிறார். புத்தர் வன்முறையை எதிர்த்தார். ஆனால் நீதியை ஆதரித்தார். நீதிக்கு அவசியமாய் இருந்தால் வன்முறையைப் பயன்படுத்தலாம் என்று புத்தர் அனுமதித்தார். அமைதியைப் பாதுகாப்பதற்கான எல்லா வழிகளும் தோல்வி அடைந்துபோனால் போர் தொடங்குகிறவன் மீதுதான்

ஹிம்சையின் பொறுப்பு சாரும். தீய சக்திகளுக்கு ஒருபோதும் ஒருவன் பணியக் கூடாது. போர் இருக்கலாம். ஆனால் அது சுயநல நோக்கங்களுக்காக இருக்கக் கூடாது என்று கூறும் அண்ணல் அவர்கள் ரஷ்யாவில் பொது உடைமை சர்வாதிகாரம் மிகச் சிறப்பான சாதனைகள் புரிந்திருப்பதாகக் கூறப்படுகிறது. இதை மறுக்க முடியாது. அதனால்தான் ரஷ்ய சர்வாதிகாரம் எல்லாப் பிற்பட்ட நாடுகளுக்கும் நல்லது என்று கூறுகிறேன். ஆனால் இது சர்வாதிகாரம் நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று கூறுவதாகாது என்று கூறும் அண்ணல் நாம் ரஷ்யப் புரட்சியை வரவேற்கிறோம். ஏனென்றால் அது சமத்துவத்தை ஏற்படுத்துவது அதன் நோக்கமாக உள்ளது. ஆனால் சமத்துவத்தை ஏற்படுத்தும்போது சமூகம் சுதந்திரத்தையும் சகோதரத்துவத்தையும் தியாகம் செய்து விட முடியாது. புத்தரின் வழியைப் பின்பற்றினால்தான் சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவம் என்ற இந்த மூன்றும் சேர்ந்து இருக்க முடியும் என்று கூறும் அண்ணல் அவர்கள் பொதுஉடைமை இவற்றுள் ஒன்றைத்தான் கொடுக்க முடியும் என்று கூறுகிறார். இதுதான் மார்க்சியம் பற்றிய அண்ணலின் கருத்து.

அதே நேரத்தில் இந்து மதம் சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவம் ஆகிய மூன்றையும் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்துமதம் ஒரு மதமே கிடையாது என்பதுதான் அண்ணலின் கருத்து. அண்ணல் பவுத்தத்தின் நோக்கங்களாகக் கூறும் 25 வழிகளில் எந்த ஒன்றிலும் இந்து மதம் நெருங்கவே முடியாது.

வன்முறை இல்லாத பொதுஉடைமை சமுதாயம் அமைய வேண்டும் என்பதுதான் அவரது நோக்கம். இன்றைக்கு பொது உடைமைவாதிகள் வன்முறை இல்லாத ஜனநாயகத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் அம்பேத்கரைப் போற்றுகின்றார்கள். ஆனால் வன்முறையையே வழிமுறையாகக் கொண்ட ஆர்எஸ்எஸ் சங்பரிவார் கூட்டம் அம்பேத்கரைப் புகழ்வது மிகவும் ஆபத்தானது.

அதேபோல வேறு ஒரு கோணத்தில் அண்ணல் அவர்கள் சீனாவைப் பற்றிச் சொன்ன கருத்தை திரிபுவாதம் செய்து அது ஏதோ கம்யூனிஸ்ட்களுக்கு எதிராக அண்ணல் கூறியதுபோல அதற்கு ஆதாரம் வேறு காட்டுகிறது. மொழிவாரி மாகாணங்கள் பற்றிய சிந்தனைகள் என்ற நூலில் இந்தியாவும் சீனாவும் இப்போது நட்பு நாடாக இருந்தபோதிலும் இந்த நட்புறவு எவ்வளவு நாட்களுக்கு நீடிக்கும் என்று

சொல்ல முடியாது. இரு நாடுகளுக்கும் மோதல் ஏற்படும் வாய்ப்பு எப்போதும் இருக்கவே செய்கிறது என்று அண்ணல் சொன்னதாக பிளம்எஸ் நியூஸ் கூறகிறது.

இது ஒன்றும் கம்யூனிசத்துக்கு எதிராக அண்ணல் கூறிய கூற்றல்ல.

இந்தியாவுக்கு இரண்டாவது தலைநகரம் அவசியம் என்று கூறும் அண்ணல் அவர்கள் மக்களின் வசதி ஒரு முக்கியமான அம்சமாகி விட்டது. தில்லியில் தலைநகரம் இருப்பது தென்னாட்டு மக்களுக்கு மிகவும் வசதிக்குறைவாக இருக்கிறது. ஒருபுறம் கடும் குளிராலும் மறுபுறம் நெடுந்தொலைவாலும் அவர்கள் அவதிப்படுகின்றனர். இது ஒரு அம்சம். இரண்டாவது அம்சம் வடநாட்டு மக்களால் தாங்கள் ஆளப்படுவதாகவும் அவர்கள் உணருகின்றனர். மூன்றாவது அம்சம் மிகவும் முக்கியமானதாகும். தில்லி வெளித் தாக்குதலுக்கு உள்ளாகக் கூடிய இடமாக இருப்பதே அந்த அம்சம் என்று கூறும் அண்ணல் அவர்கள் அந்த வகையில் தில்லியை விட்டு வேறு இடம் பெயர்வதற்கு வேறு என்ன இடம் இருக்கிறது? கல்கத்தா நம் நினைவுக்கு வரக்கூடும். ஆனால் கல்கத்தாவும் திபேத்திலிருந்து குண்டு வீசித் தாக்கும் தொலைவில்தான் இருக்கிறது. இந்தியாவும் சீனாவும் நட்பு நாடுகளாக இருந்தாலும் இந்த நட்புறவு எவ்வளவு காலத்திற்கு நீடிக்கும் என்று கூற முடியாது. இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையே மோதல் ஏற்படும் வாய்ப்பு எப்போதும் இருக்கவே செய்கிறது. அதனால் கல்கத்தா பயனற்றதாகிவிடுகிறது. அடுத்து பம்பாய். ஆனால் பம்பாய் ஒரு துறைமுகம் மத்திய அரசு மாறி வந்தால் அதனைப் பாதுகாக்கக் கூடிய நிலையில் இல்லை. அப்படியானால் நாம் பரிசீலிக்கக் கூடிய இடம் ஏதேனும் இருக்கிறதா? ஹைதராபாத் இப்படிப்பட்ட இடமாக நான் பார்க்கிறேன் என்றுதான் அண்ணல் அவர்கள் அந்த நூலில் சொல்லியுள்ளார்கள். (மொழிவாரி மாநிலங்கள் பற்றிய சிந்தனைகள் பக்கம் 253)

அந்தக் கூற்று இரண்டாவது தலைநகரம் பற்றியது. ஆனால் அவர் ஏதோ கம்யூனிசத்திற்கு எதிராகச் சொன்னதாக அதனைத் திசைதிருப்புகிறது. அதில் திபேத்தையும் கூடக் குறிப்பிடுகிறார். அப்படியானால் அங்கே பவுத்த அரசு நடைபெறுவதால் அவர் பவுத்தத்திற்கு எதிராகக் கூறினார் என்று எடுத்துக் கொள்ள முடியுமா?

இப்படி முன்னேயும் பின்னேயும் உள்ளதை எடுத்து விட்டு என்ன நோக்கத்திற்காக இதைக் கூறினாரோ அதற்கு நேர்மாறான கருத்தை விசமத்தனமாகப் பதிவு செய்கிறது சங் பரிவார் கூட்டம். அண்ணல் அவர்கள் அதில் சொல்லியுள்ள கருத்துக்களை முதலில் சங் பரிவார் ஏற்றுக் கொள்கிறதா? தில்லியைத் தலைநகரமாக இருப்பதை மாற்ற ஒத்துக் கொள்கிறதா? ஹைதராபாத்துக்கு தலைநகரம் மாறுவதை அது ஆதரிக்கிறதா? தென்னாட்டு மக்களுக்கு தில்லி வசதிக்குறைவாக இருக்கிறது என்று சொல்கிறாரே அண்ணல் அதனையும் சங்பரிவார் ஆமோதிக்கிறதா? வடநாட்டு மக்களால் தாங்கள் ஆளப்படுவதாகவும் அவர்கள் உணருகின்றனர் என்று சொல்கிறாரே அண்ணல் அதனையும் சங்பரிவார் ஆமோதிக்கிறதா? கண்டிப்பாக சங்பரிவார் கூட்டம் இதனை ஏற்றுக்கொள்ளவே ஏற்றுக் கொள்ளாது என்பது உறுதி.

எந்தக் கருத்திலும் அம்பேத்கரோடு ஒத்துப் போகாத இவர்கள்தான் கம்யூனிஸ்ட்டுகள் எப்படி அம்பேத்கரைக் கொண்டாடலாம். தலித்துகள் எப்படி கம்யூனிஸ்டுகளோடு இணங்கிப் போகலாம் என்று கொக்கரிக்கிறது. ஆனால் இந்த பிஎம்எஸ் காரர்கள் இப்பொழுது ஆண்டுதோறும் விவேகானந்தருக்கு விழா எடுத்து வருகிறார்கள். அந்த விவேகானந்தரின் நூற்றி அய்ம்பதாவது ஆண்டுவிழாவைக் கொண்டாட பெல் நிறுவனம் அம்பேத்கரின் கருத்துக்கள் அடங்கிய பாரதமே உயிர்த்தெழு என்ற நூலை அனைத்து ஊழியர்களுக்கும் வழங்கியது.

அந்த நூலில் அம்பேத்கர் கருத்துக்களுக்கு எதிரான ஏராளமான கருத்துக்கள் நிரம்பியுள்ளன. ஜாதியை ஒழிக்க வேண்டும் என்பது அண்ணலின் கொள்கை. ஆனால் அந்த நூலில் விவேகானந்தர் என்ன கூறுகிறார் தெரியுமா? ஜாதியை ஒழிக்க விரும்புவது வடிகட்டின முட்டாள்தனம் என்கிறார். இந்தக் கருத்தின்படி ஜாதியை ஒழிக்க விரும்பும் அம்பேத்கர் முட்டாளா? அதேபோல சமூக சீர்திருத்தம் ஏற்படாமல் இந்த நாட்டுக்கு அரசியல் சீர்திருத்தம் பேசுவது ஏமாற்றுவேலை என்றவர் அம்பேத்கர். ஆனால் விவேகானந்தர் என்ன கூறுகிறார்? சமூக சீர்திருத்தம் என்ற பேசுபவரோடு சேராதீர் என்று இளைஞர்களுக்கு அறிவுரை கூறுகிறார்.

இந்த சாதிக்காரன் இன்னின்ன தொழில்களைச் செய்ய வேண்டும் என்பது கூடாது என்பதுதான் அண்ணலின் கருத்து. ஆனால்

விவேகானந்தர் விவசாயி விவசாயியாகவும் மீனவன் மீனவனாகவும் குயவன் குயவனாகவும்தான் இருக்க வேண்டும் என்கிறார்.

அதேபோல தாழ்த்தப்பட்ட மக்கள் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றினால்தான் சமூக சமத்துவத்துக்கான திட்டங்களை நிறைவேற்ற முடியும். பார்ப்பன பனியா கூட்டத்திடம் ஆட்சி அதிகாரம் சென்றால் பழைய பிற்போக்குவாதம்தான் தலைதூக்கும் என்றவர் அம்பேத்கர்.

ஆனால் விவேகானந்தர் ஒரு செருப்புத் தைப்பவன் நாட்டை ஆள ஆசைப்படலாமா? என்கிறார்.

இப்படிப்பட்ட விவேகாநந்தரைக் கொண்டாடும் பிஎம்எஸ் ஆர்எஸ்எஸ் கூட்டம் அம்பேத்கர் பெயரை உச்சரிக்கக்கூட அருகதையற்றது. நீங்களே அம்பேத்கரைக் கொண்டாடும்போது கம்யூனிஸ்ட்கள் அம்பேத்கரைக் கொண்டாடக் கூடாதா?

இந்த பிஎம்எஸ் சிறப்பிதழில் அண்ணலின் பொன்மொழி ஒன்றை வெளியிட்டிருக்கிறார்கள். பக்கம் 48ல் “நிலையானது எது? என்று எதையும் காட்ட முடியாது. அதைப் போன்று மரணமடையாதது என்றோ முடிவில்லாதது என்றோ எதுவும் கிடையாது. உலகில் இருக்கும் எல்லாமே மாறுதலுக்குட்பட்டதுதான். சமுதாயமாயினும் சரி தனி மனிதனாயினும் சரி காலத்தோடு அதன் மாற்றத்தோடு கலந்து செல்ல வேண்டும். அதுதான் நாகரிகமாகும்” என்று அண்ணல் கூறியதாக சங்பரிவார் கூறுகிறது.

இதனை முதலில் சங்பரிவார் கூட்டம் ஏற்றுக் கொள்கிறதா? தனக்கு உடன்பாடான கொள்கையை எடுத்துச் சொல்லி அவர் இப்படிச் சொல்கிறார் அதனால் நாங்கள் அவரைக் கொண்டாடுகிறொம் என்று சொன்னால் அது அறிவுநாணயம். ஆனால் தங்களுக்கு நேர்மாறான கொள்கையைச் சொன்னாலும் அதனை ஏதோ தாங்கள் ஏற்றக் கொண்டதுபோல் பாவனை செய்வது அயோக்கியத்தனம் இல்லையா?

இந்த சங்பரிவார் ஏற்றிப் போற்றும் கொள்கை எது? இந்து தர்மம்

இல்லையா? அந்த இந்துதர்மம் என்றால் இவர்கள் என்ன சொல்கிறார்கள்?

"முழுமையான முதுமையான இந்துசமயத்திற்கு சனாதன தர்மம் என்ற பெயருமுண்டு. இதன் பொருள் என்றும் மாறாதது. மறையாதது என்பனவாகும். சனாதனம் என்றால் அழியாதது"

இதுதான் சங்கராச்சாரி முதல் சவுண்டிப்பார்ப்பான் வரை இந்து மதம் பற்றி சொல்லக்கூடிய கருத்து.

அத்துடன் இவர்கள் போற்றிப் பாராட்டும் பகவான் (?) கண்ணன் நான்கு வர்ணங்களையும் நானே படைத்தேன். அதை நான் நினைத்தாலும் மாற்ற முடியாது என்று கீதையில் கூறுகின்றான்.

இப்படி மாற்றவே முடியாது என்ற நால்வர்ணத்தையும் சனாதன தர்மத்தையும் கொள்கையாகக் கொண்ட சங்க்பரிவார் கூட்டம் உலகில் இருக்கும் எல்லாமே மாறுதலுக்குட்பட்டதுதான் என்று சொன்ன அண்ணலின் கருத்தை எடுத்துப் பேசுவது ஏமாற்று வேலைதானே?

ஆனால் மார்க்ஸ் என்ன சொல்கிறார்...

"மாற்றம் என்ற சொல்லைத் தவிர உலகில் அனைத்துமே மாறக் கூடியது" என்கிறார்.

அண்ணலுக்கு நேர் எதிரான கருத்துக் கொண்ட சங்க் பரிவாரே அண்ணலை உயர்த்திப் பிடிப்பதாக நடிக்கும்போது அவரோடு ஒத்த கருத்துள்ள கம்யூனிஸ்ட்கள் அவரைப் போற்றிப் பாராட்டுவதில் தவறென்ன இருக்க முடியும்?

அத்துடன் பிஎம்எஸ்ஸே அவர்கள் வெளியிட்ட பழைய செய்தி இதழில்

"ஆரம்ப காலத்தில் இருந்தே பாரத்தில் ரிஷிகளும் முனிவர்களும் தியாகிகளும் தபஸ்விகளும் மக்களுக்கு நல்ல பண்புகளைக் கற்றுக்

கொடுத்தார்கள். அது அரசாங்கமாக இருக்கவில்லை. அது அரசர்களோ அரசாங்கமோ ஆக இருக்கவில்லை. அவர்களால் நற்பண்புகளைப் புகட்ட முடியாது.

நமது சமுதாயத்தில் அர்ச்சகர்கள் ஆசிரியர்கள் மற்றும் வைத்தியர்கள் உள்ளார்கள். அவர்களுக்கு சம்பளம் கொடுக்கப்படவில்லை. அவர்கள் சமுதாயத்திற்காகத் தொண்டாற்றினார்கள். சமுதாயம் அவர்களைக் காப்பாற்றியது. அரசர் சட்டத்தை இயற்ற முடியாது. அது ரிஷி முனிவர்கள் போன்றவர்களிடம் விடப்பட்டது. ராஜா கூட அந்த சட்டங்களுக்கு பணிபுரிந்து செயல்புரிந்தனர். இதுபோன்ற உயர்ந்த மரபுகள் நமது சமுதாயத்தினை உயிரோட்டமுள்ளதாக காத்து வருகிறது.

நமது நாட்டை அதே அடிப்படையில் அமைக்க வேண்டும்.நாம் அந்த அஸ்திவாரம் அமைப்பதற்கான கற்களைக் கொடுக்கிறோம்" என்று பிஎம்எஸ் சங்கமடல் ஜனவரி பிப்ரவரி 1998 சொல்கிறது. அரசர்கள் சட்டம் இயற்ற முடியாது. அது ரிஷிகள் முனிவர்கள் போன்றவர்களிடத்தில் விடப்பட்டது என்று சொல்லப்பட்டுள்ளது. அதே பாணியில் நமது சமு/தாயத்தை உருவாக்கப் போகிறோம் என்கிறது பிஎம்எஸ். அதாவது இந்துராஜ்யத்தை உருவாக்கி மனுதர்மத்தை சட்டமாக்கி பார்ப்பனர்கள் கைகளில் அதிகாரத்தை ஒப்படைப்பதற்கான அடிப்படைப் பணிகளை நாங்கள் செய்கிறோம் என்பதை மறைமுகமாகக் கூட அல்ல நேரடியாகவே செல்கிறது பிஎம்எஸ்.

அந்த ரிஷிகள் முனிவர்கள் என்பவர்கள் யார்?

பார்ப்பனர்கள்தான் என்பதில் எந்த வித அய்யமும் இல்லை. ஆக பார்ப்பனர்கள் எழுதுகிற சட்டம்தான் உன் இந்துராஜ்யத்தில் இருக்கும். அண்ணல் அவர்கள் எழுதிய சட்டம் இருக்காது என்பது தெளிவானது. அந்த இந்துராஜ்யத்தில் அண்ணலின் ஜாதியைச் சேர்ந்தவர்கள் தீண்டத்தகாதவர்களாக பார்க்கத் தகாதவர்களாக நாயிலும் கீழாக நடத்தப்படுவார்கள் என்பதில் அய்யம் இருக்க முடியாது. அவருடைய சட்டம் அழிக்கப்பட்டு புதிய மனுதர்மம் எழுதப்படும் என்பதை வெளிப்படுத்தும் நீங்கள் அண்ணலை உயர்த்திப் பிடிக்கலாம்.

அவர் எழுதிய மதச்சார்பற்ற அரசியல் சட்டத்தை ஆதரிக்கும் கம்யூனிஸ்டுகளும் நாங்களும் ஆதரிக்கக் கூடாதா?

“இது காலத்தின் கட்டாயம். கம்யூனிஸ்டுகளுக்கும் பெரியாரிஸ்ட்களுக்கும்கூட ஒரு காலத்தில் கருத்து மோதல் இருந்தது. பெரியாரியலா? மார்க்சியமா? என்று கூட வாக்குவாதங்கள் நடந்ததுண்டு. அதுபோலத்தான் அம்பேத்கரிஸ்ட்டுகளுக்கும் கருத்து வேறுபாடுகள் இருந்திருக்கலாம்.

ஆனால் இன்றைய காலக்கட்டத்தில் அம்பேத்கர், பெரியார், மார்க்சியவாதிகள் அனைவரும் ஒன்று சேர வேண்டிய காலம் உருவாகி இருக்கிறது.

பொருளாதார அடிப்படையில்தான் இட ஒதுக்கீடு இருக்க வேண்டும் என்ற கருத்து கம்யூனிஸ்டடுகளுக்கு இருந்தது. ஆனால் மண்டல் கமிசனை பிரதமர் வி.பி.சிங் அவர்கள் அமுல்படுத்தியபோது அந்த இட ஒதுக்கீட்டின் அவசியத்தை கம்யூனிஸ்ட்கள் உணர்ந்தார்கள். அன்றிலிருந்து சமூகரீதியாக இட ஒதுக்கீட்டை ஆதரிக்க ஆரம்பித்தார்கள். அதேபோல பொருளாதார சமத்துவத்தை வலியுறுத்தி வந்த கம்யூனிஸ்ட்கள் எப்பொழுது ஆர்எஸ்எஸ் சங்பரிவார்க்கூட்டம் நானூறு ஆண்டு பழமைவாய்ந்த பாபர் மசூதியை இடித்து நாட்டை மதவெறிக்காடாக்கியதோ அப்பொழுதே மதவெறியினுடைய கோரத்தாண்டவத்தை எதிர்த்தாக வேண்டிய சூழ்நிலை உருவானது.

அம்பேத்கரிய, பெரியாரிய, மார்க்சியவாதிகளுக்கு மனித சமத்துவம் ஒன்றே குறிக்கோள். அந்த சமத்துவத்துக்கு நேர் எதிரானவர்கள் ஆர்எஸ்எஸ் சங்பரிவாரினர். பொருளாதார ரீதியாகவும் சமத்துவம் வந்துவிடக்கூடாது என்பதுதான் இந்து மதத்தின் தத்துவம்.

கீழ்ஜாதி மக்களான சூத்திரர்கள் எக்காரணம் கொண்டும் செல்வம் சேர்ப்பதை மனுதர்மம் ஆதரிக்கவில்லை.

“சூத்திரன் பொருள் சம்பாதிக்கத் தக்கவனாய் இருந்தாலும் குடும்பத்திற்கு உபயோகமானதைவிட மிகவும் அதிகப் பொருளைச் சம்பாதிக்கக் கூடாது. அப்படி சம்பாதித்தால் தன்னால் உபசரிக்கத்தக்க பிராமணாளையே ஹிம்சை செய்ய வேண்டிவரும்” என மனு

அத்தியாயம் 10 சுலோகம் 129 சொல்கிறது.

அந்த மனுதர்மத்தை சட்டமாக்க வேண்டும் என்பவர்கள் எப்படி பொருளாதார சமத்துவத்தை ஆதரிப்பார்கள்? ஒருவன் ஏழையாக இருப்பதும் இன்னொருவன் பணக்காரனாக இருந்து எல்லா சுகபோகங்களையும் அனுபவிப்பதும் அவரவர் தலைவிதி முன்ஜென்மத்து பலாபலன் என்று சொல்வதும் இந்துமதம்.

அதுபோல சமூக சமத்துவம் என்பது இந்து மதத்தில் அறவே கிடையாது. பார்ப்பான் உயர்ந்தவனாகவும் சூத்திரன் இழிந்தவனாகவும்தான் இந்துமதம் பார்க்கிறது. கீழ்ஜாதி மக்கள் இன்னமும் கல்வி கற்கக் கூடாது என்பது இந்து மதத்தின் தத்துவம் என்பதனை ஆர்எஸ்எஸ் சங் பரிவார்க்கூட்டம் கடைப்பிடிப்பதால்தான் அய்அய்டி போன்ற கல்வி நிறுவனங்களில் இட ஒதுக்கீட்டின் மூலம் படிக்கச் சென்ற மாணவர்களை ஆர்எஸ்எஸ்சின் அமைப்புக்கள் கேலி செய்கின்றன. அங்கு நிரம்பியிருக்கும் பார்ப்பன ஆதிக்கக் கூட்டம் பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு எதிராக இருக்கிறது. அதனால்தான் அங்கே மாணவர்கள் பெரியார் பெயராலும் அம்பேத்கர் பெயராலும் மார்க்சின் பெயராலும் வாசகர் வட்டத்தை உருவாக்கி பார்ப்பன ஆதிக்கத்தை எதிர்த்து வருகிறார்கள்.

மதவாதிகளினுடைய ஆபத்தினை நாங்கள் அனைவரும் உணர்ந்திருக்கிறோம். ஆர்எஸ்எஸ் ஒரு அபாயம் என்பது இன்று தெள்ளத்தெளிவாக அனைவரும் உணர்ந்ததால்தான் அனைவரும் ஒன்றுசேர்ந்து அதனை முறியடித்து நாட்டில் சமத்துவ சமுதாயத்தை அமைக்கப் போராடி வருகிறோம். சமுதாய சமத்துவம் முதலில் ஏற்பட்டால்தான் அடுத்து பொருளாதார சமத்துவமும் ஏற்படும் என்பதை நாங்கள் அனைவரும் உணர்ந்து சமத்துவத்துக்கு எதிரான மதவாதக் கும்பலை முறியடிக்க ஒன்ற சேர்ந்திருக்கிறோம். அப்படி ஒன்று சேரவிடக்கூடாது என்கிற கெட்ட எண்ணம்தான் பிஎம்எஸ்சின் அந்த இதழ் வெளிப்படுத்துகிறது.

ஆரியத்தின் மாயைகளில் இதுவும் ஒன்று. அதுதான் பிரித்தாளும் சூழ்ச்சி. அந்த பிரித்தாளும் சூழ்ச்சியை முறியடித்து காவிக்கூட்டத்தின் பித்தலாட்டத்தை தோலுறித்துக்காட்டி மக்களிடம் அம்பலப்படுத்துவதே

இந்த நூலின் நோக்கம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆர்எஸ்எஸ் சின் தொழிற்சங்கமான பிஎம்எஸ் கோல்வால்கர் சிறப்பிதழ் வெளியிடலாம். சவர்க்கர் சிறப்பிதழ் வெளியிடலாம். ஹெட்கேவர் சிறப்பிதழ் வெளியிடலாம். டெங்கடி சிறப்பிதழ் வெளியிடலாம். ஏன்? மோடி சிறப்பிதழ் கூட வெளியிடலாம். அதையெல்லாம் யாரும் குறை கூறப் போவதில்லை. எதற்காக அம்பேத்கர் சிறப்பிதழ் வெளியிட வேண்டும்? அங்கேதான் அவர்களின் சூழ்ச்சி புதைந்திருக்கிறது.

தங்களது கொள்கை என்பது வெகுமக்களுக்கு எதிரானது. அதிலும் குறிப்பாக உழைக்கும் மக்களான தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு எதிரானது. முஸ்லிம்களுக்கும் சிறுபான்மையினருக்கும் எதிரானது என்பதை இப்பொழுது அவர்கள் உணர ஆரம்பித்திருக்கிறார்கள். இருந்தாலும் அதனை அமுல்படுத்தியே ஆக வேண்டும் என்ற வெறி இருக்கிறது. எப்படியாவது இந்துராஜ்யத்தை உருவாக்கி பார்ப்பனர் கைகளில் ராஜ்யத்தை ஒப்படைக்க வேண்டும் என்பதுதான் அவர்கள் நோக்கம். அதற்காக அவர்கள் எவ்வளவு கீழான நிலைக்கும் செல்வதற்குத் தயாராக இருக்கிறார்கள்.

தங்கள் கொள்கைகள் வெகுமக்களிடம் எடுபடாமல் போனதற்குக் காரணம் அம்பேத்கரும் பெரியாரும் என்பதை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். தமிழகத்தில் அண்ணா போன்றவர்கள் காரணம் என்பதையும் அவர்கள் அறிந்திருக்கிறார்கள். அதனை எதிர்த்து அவர்கள் கொள்கைகளுக்கு மறுப்புச் சொல்லித் தங்கள் அமைப்பை இங்கே காலூன்ற வைக்க முடியாது என்பதால்தான் அவர்களை அரவணைப்பதுபோல் அரவணைத்து அழித்தொழிக்க நினைக்கிறார்கள். அதனால்தான் டாக்டர் கிருஷ்ணசாமி போன்றவர்களை வளைத்துப் போட்டு அவர்கள் மூலமாக இப்பொழுது பெரியார் கொள்கைகளும் அம்பேத்கர் கொள்கைகளும் ஒத்து வராது என்று சொல்ல வைக்கிறார்கள். அப்படிச் சொன்ன கையோடு அம்பேத்கரும் பெரியாரும் இப்பொழுது இருந்திருந்தால் ஆர்எஸ்எஸ் சித்தாந்தங்களை ஏற்றுக் கொண்டிருப்பார்கள் என்று பேச வைக்கிறார்கள்.

ஆர்எஸ்எஸ் சின் எந்த சித்தாந்தத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டிருப்பார்கள் என்பதையும் சொன்னால் பரவாயில்லை. அதைச் சொல்ல மாட்டார்கள். பெரியாரும் அண்ணலும் ஆர்எஸ்எஸ் சின் இந்து ராஜ்யத்தை ஏற்றுக் கொள்வார்களா? இராமராஜ்யத்தை ஆதரிப்பார்களா? இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் ஆதரிப்பார்களா? பகவத் கீதையை அங்கீகரிப்பார்களா? மனுதர்மத்தை ஒத்துக் கொள்வார்களா? இராமனுக்குக் கோயில் கட்டுவதை சரி என்பார்களா? சேது சமுத்திரத்திட்டத்தை எதிர்க்க இராமன் பாலம் இருந்தது என்ற சிந்தனையை அவர்கள் அங்கீகரிப்பார்களா?

இது எதுவும் நடக்காது. இருந்தாலும் மக்கள் மத்தியில் ஒரு குழப்பத்தை உண்டாக்க வேண்டும் என்பதற்காகவே இதுபோன்ற ஒரு கருத்தைப் பரப்பி வருகிறார்கள். இப்பொழுது புதிதாக ஒருவர் முரளிதர ராவ் என்ற ஆந்திராக்காரர் ஏதோ அண்ணாவை முழுதாக அறிந்தவர் போல அறிஞர் அண்ணா இன்று இருந்தால் பாஜக வில்தான் சேருவார் என்று கதை விடுகிறார்.

அதைவிட ஒருபடி மேலே போய் வெங்கடேசன் என்ற தாழ்த்தப்பட்ட இளைஞரைப்பிடித்து இந்துத்துவ அம்பேத்கர் என்று எழுத வைக்கிறார்கள். அப்படி அண்ணல் அம்பேத்கரை இந்துத்துவ அம்பேத்கர் என்று நிரூபிப்பதற்காகத்தான் பிஎம்எஸ் சும் அம்பேத்கர் ஜெயந்தி சிறப்பிதழ் என்று வெளியிட்டு அம்பேத்கரின் கொள்கைகளை தப்பும் தவறுமாகச் சொல்லி ஏமாற்றப் பார்க்கிறது.

அவர்களிடம் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதற்காக இந்தக் கட்டுரையைப் புத்தக வடிவில் கொண்டு வந்துள்ளோம். அதனை வாங்கிப் பலரும் படிப்பதோடு மற்றவர்களுக்கும் கொடுத்துப் படிக்கச் செய்து தீண்டாமையை ஒழிக்க ஆக்கப்பூர்வமான வழிகளில் ஈடுபட வேண்டும் என்றும் இராம.கோபாலன் போன்றவர்களிடமும் ஆர்எஸ்எஸ் சங் பரிவார்களிடமும் ஏமாந்துவிட வேண்டாம் என்றும் கேட்டுக்கொள்கிறோம். நன்றி!